ஸ்ரீ:

கணபதி துணை.

# சிவமயம்.

# திருவாதவூரர்புராணம்.

## மூலமும் - உரையும்.

### காப்பு.

விநாயகர் துதி.

பவளமால்வரையிற் பனிபடர்ந்தனைய பான்மைபோற் ........ *
பரந்தநீறுமை பசுந்திருமேனி ................ *
திவளமாதுடனின் றாடியபரமன் ................ *
சிறுவனைப்பாரதப் பெருமையேன் .......... *
தவளமாமருப்பொன் றொடித்தொருகரத்திற் .... *
தரித்துயர்கிரிப் புறத்தெழுதுங் ............ *
கவசமாகனிற்குந் திருமுகம்படைத்த .......... *
கடவுளைநினைந் திறைஞ்சிக் கைதொழுவாம் .......... *

என்பது. பெரியபவளமலையிடத்தே சந்திரிகை வீசுவது போல் சிவந்த தனது திருமேனியிற் பரவப்பூசிய திருநீற்றினழகானது உமாதேவியினது பசிய திருமேனியிலே பிரதிபலிக்கும்படி அத்தேவியுடனின்று நிருத்தஞ்செய்தருளிய பரமசிவனுடைய புத்திரனை - பெரியபாரதயுத்தத்தைத் தனது வெண்மைபொருந்திய பெரிய கொம்பையொடித்து ஒருகையி லெழுத்தாணியாக வைத்துக்கொண்டு உயர்ந்த மகாமேருகிரியை ஏடாகக்கொண்டு அதனிடத்தே எழுதியருளுங் கவசத்தைக்கொண்டு நின்ற பெரிய யானையினது திருமுகம்படைத்த விநாயகக்கடவுளை முனதிலே தியானித்து இரண்டுகைகளையுங்குவித்து வணங்குவோம் என்றவாறு .......................................

(நூல்வரலாறு.)

தென்பொதியமாமுனிசிறக்கவருளென்னென்..... *
னின்பவிளையாடலெனுங்கடலுளொருயேன்....... *
பின்பயிலுமாமதுரைமேவுதமிழ்மாறன்......... *
றன்பமறநலகுகதைசொல்லலுறுகின்றேன்.... *

எ-று தென்றிசையில்விளங்கிய பொதியமலையிடத்திருக்கும் அகஸ்தியமாமுனிவர் யாவருஞ்சிறக்கும்படி முற்காலத்திலே நைமிசாரணியவாசிகளாகிய முனிவருக்கு அருளிச்செய்த பேரின்பத்தைத்தருகின்ற அறுபத்துநான்கு திருவிளையாடலென்னுஞ் சமுத்திரத்திலே ஒளிவிளங்கியகுதிரைகளை மதுராபுரிநகரத்திலேயிருந்தரசாண்டபாண்டியராசனது துன்பத்தை நீக்கக்கொடுத்தகதையை அடியேன் சொல்லத்தொடங்கினேனென்றவாறு................(௧)

அற்புதவிருக்கருள்பெருந்துறையடைந்தே.... *
சிற்பரமுனைநேர்திருவாசகமுரைப்பார்......... *
முற்பகலருந்தவமுயன்றுபெறுமன்பா....... *
னற்பவமொழிந்தமெய்மொழிந்திடவொழிப்பாம்.. *

எ-று. பரமசிவனெழுந்தருளியிருந்த திருப்பெருந்துறையென்னுந்தலத்திற்சேர்ந்து அரியவுருவாகிய பெருமானையடைந்து திருவாசகமுரைத்தருளிய மாணிக்கவாசகரானவர் முற்பிறவிகளிலே செய்ததவங்களை முயன்றுபெற்ற அன்பினாலே சனனமொழிந்து மோக்ஷமடைந்த கதையைச்சொல்லிப் பிறவித்துன்பத்தை நீக்குவாமென்றவாறு..............................(௨)

(அவையடக்கம்.)

கொண்டலனகண்டனருள்கொண்டுதமிழ்பாடித்.. *
தொண்டுபுரிமன்பர்செயல்சொல்லுமெனதன்றால் *
வண்டமிழ்தெரிந்தவர்கண்மற்றிறையதாகுற்ற.... *
முண்டெனினுநன்கிதெனவுள்ளுவர்களெள்ளார்.., *

எ-று. மேகம்போன்ற நீலகண்டத்தையுடைய பரமசிவனது கிருபையைக்கொண்டு திருவாசகமென்னுந் தமிழ்வேதம்பாடி அடிமைத்திறஞ்செய்த அன்பராகிய மாணிக்கவாசகர் சரித்திரத்தைச் சொல்லியபடியால வன்மைபொருந்திய தமிழையறிந்த புலவர்கள் அடியேன்சொல்லும் பாடலிற் குற்றமுண்டாயிருந்தாலும் அக்குற்றத்தைக்கொண்டு இகழாமல் இதுநல்லதென்று கொள்ளுவார்களென்றவாறு........ ..............(௩)

(நூற்பயன்.)

இந்தவளநற்கதையிலன்பினொடுநயந்தே... ......*
சிந்தையினினைப்பவர்செவிப்புலதிறைப்போர்....*
புந்திமகிழப்புவிப்படிப்பவருடலவிட்டா... ......*
லந்தவுலகத்தினிலரன்கடையில்வாழ்வார் ........*

[ வித்தியாரம்பம். ]

குவலயமங்கையைநீடுகோலஞ்செய்தரும்பொன்னு ·· ···· *
நவமணியுங்குவைசெய்துநன்றுடன்மங்கலநாளிற் ···· ···· *
றவமணமுந்திருநீற்றின்றன்மணமுந்தவறாத ············ *
சிவமணமும்பெறக்கல்விச்செல்விமணம்புணர்வித்தார் ······ *

எ-று. நாடுநகரங்களை மிகவுஞ்சிறப்பாக அலங்காரஞ்செய்து அரியபொன்னும் நவரத்நமுங்குவித்துவைத்து நன்மையுடனே ஒருசுபதினத்திலே தவமணமுந் திருநீற்றுமணமுந் தவறில்லாதசிவமணமும்பெறும்படிக்கு ஒருபாத்தியாயர்முன்னிலையிலே கல்வியென்னுமங்கையை மாணிக்கவாசகருக்கு மணஞ்செய்வித்தார்களென்றவாறு ······· ························ (௰)

[ உபநயனம். ]

இதுநான்மற்றல்லதுநூலில்லையெனுமறுசமய ············ *
விதநூலுந்தலநூலும்விரிந்தபுராதனநூலும் ············ *
பொதுநூலென்றுலகனைத்தும்புகழ்மறைநூலுஞ்சைவ ······ *
முதுநூலுந்தரிப்பார்க்குமுந்நூலுந்தரித்தார்கள் ···· ···· *

எ-று. மெய்ம்மையுள்ளது விதுவேயல்லாமல் இப்படிப்பட்டநூல வேறேயில்லையென்று வாதிக்கும் சட்சமயிகள் நூல்களும் ஸ்தலபுராணநூல்களும் விரிந்துவிளங்குகின்றபழமையான புராண நூல்களும் உலகமெல்லாம் பொதுநூலென்றுபுகழுகின்ற நாலு வேதநூல்களும் பழமையாகிய சிவாகமநூல்களுந் தரிப்பவராகிய மாணிக்கவாசகர்க்கு முப்புரிநூலுந் தரித்தார்களென்றவாறு.

மிக்கலையுஞ்செழுநீருமதிக்கலையுமிலக்குமவ ············ *
ரக்கலையுந்தோளர்புலியதட்கலையர்நல்லருளா ···· ······· *
லாகக்கலையும்பிறக்கலையுமொழித்திடுமாகமகலையு ······· *
மெக்கலையுங்கற்றுணர்ந்தாரீரெட்டாண்டெல்லையினில் ······ *

எ-று. மிகுந்து அலைகின்ற செழுமைபொருந்திய கங்காநதியும் மூன்றாம்பிறையுந் தரித்தவராயும் எலும்பணியையணிந்தமேனியுடையவராயும் புலித்தோலாகியவுடையையணிந்தவராயுமிருக்கின்ற பரமசிவனுடையநல்லகிருபையினாலே தேகபந்தங்களையும் பிறவித்துன்பத்தையும் நீக்குகின்றசிவாகமங்களுமற்றெந்த நூல்களும் பதினாறுவயதளவிலே கற்றறிந்தார்மாணிக்கவாசகரென்றவாறு ························· ·· (௰௧)

உழைக்கரனுக்கன்பாகியுண்மையறிந்துலகமெலாம் ········ *
பிழைக்கவருட்கவிபாடும்பெரியவர்தஞ்செயலெல்லாந் ······ *

நலமுறத்தகலைத்தமிழ்மாறன்றக்கோர்களுரைப்பவறிந் ....... *
தலைமுறைத்துரிமைத்திறநல்கியகலாதன்பாயினன் ............ *

எ-று. மானேந்தியகையினையுடைய பரமசிவனுக்கு அன்பரா கியமெய்ப்பொருளறிந்து உலகமெல்லாம்பிழைக்கும்படி திருவா தவூரடிகள் மாணிக்கவாசகருடைய செய்கையெல்லாந் தழைத் திருக்கின்ற தமிழ்வாணர்க்கும் பாண்டியராசனுனவன் பெரியோ ர்கள் சொல்லக்கேள்விப்பட்டு அவரை அழைப்பித்துத் தனக்குரி யவராக்கி அவருக்கு நீங்காதவினைகளுமென்றவாறு. ... (௰௫)

சங்கோலமிடும்பழனத்தடம்புடைசூழ்வாதவூ ............ *
பொங்கோவில்செய்கையறிந்தியல்புடையோனெனநாடிப் .... *
பொங்கோதவேலைநிலம்புரந்துபெரும்பகைதுரந்து ....... *
செங்கோன்மைமுறைநடத்துஞ்செழுந்தலைமைத்திறநல்கி .. *

எ-று. சங்குகள் சத்திக்கின்றவிசாலமாகியவயல்கள்புடைசூழ் ந்த திருவாதவூரிலவதரித்த மாணிக்கவாசகருடைய கல்விமுதலிய வைகளின் வலமைதெரிந்து தகுதியையுடையனென்றறிந்து மிகு ந்த சத்தத்தையுடைய கடல்சூழ்ந்த பூவுலகத்தை ரக்ஷித்துச் சத் துருக்களைக்களைந்து மனுநீதிமுறைமைநடத்தும்முதன்மையாகி ய பதவியைத் தனக்குக்கொடுத்தான் பாண்டியராசனென்றவாறு.(௰௬)

தென்னவன்பிரமராயனென்றருள்சிறந்தநாம ........... *
மன்னிய[illegible]டுக்கநல்கிவையகமுய்வதாக .............. *
மின்னுமணிப்பூணுடைவெண்மதிக்கவிகைதண்டு ........ *
பொன்னவிர்சவரிமேவுமளித்தனன்பொருனைநாடன் ...... *

எ-று. மன்னர்களெல்லா மதிக்கும்படி தென்னவன்பிர மராயனென்றழைக்கப்பெற்ற ஒரு திருப்பெயர்கொடுத்து உலக ம் பிழைக்கும்படி மின்னுகின்ற நவரத்ந ஆபரணமும் பீதாம்பர மும் வெள்ளிய சந்திரவட்டக்குடையும் சிவிகையும் பொற்பிடிகா சமுடைய வெண்சாமரங்களும் யானைகளுங்கொடுத்தான் பாண்டி யராசனென்றவாறு .......................... (௰௭)

இந்திரச்செல்வம்போலவிசைந்துளவின்பமெய்தி ........ *
மந்திரத்தலைமைபூண்டவண்புகழ்வாதவூரர் .............. *
தந்திரத்தொகுதிசூழத்தாரகைக்கணங்களோடு ........... *
மந்தரத்திருந்துமண்மேலமர்ந்தவெண்மதியமொத்தார் .... *

எ-று. இந்திரசம்பத்துப்போல இசைந்திருக்கின்ற பாக்கியத் தினால் இன்பத்தைப்பொருந்தி முதன்மந்திரியாகப்பெற்ற வரா

பொருந்திய புகழையுடைய வாதவூராரானவர் மற்றமந்திரிகள் பிரதானிகள்கூட்டங்கள் சூழ இருத்தலால் நக்ஷத்திரக்கூட்டங்கள் சூழ்ந்திருக்க ஆகாசத்தினின்றிழிந்து பூலோகத்திலமர்ந்த வெள்ளிய சந்திரனைப்போன்றாரென்றவாறு. .............. (௧௬)

பெருங்கடலுகைநீறுபெருக்கியேசருக்குதல்லி.............. *
யிருங்கடகத்தோண்மேல்வைத்திண்டருள்பூண்டகோவும்.... *
கருங்கடநாகமெட்டுங்காளமாநாகமெட்டும்..... ........ *
பரக்கெடவுலகபாரம்பரித்தனர்இருந்தமிக்கார் ... ....... *

ஏ-து. பெரியகடமையாக [illegible]யை விர்த்திபண்ணி யாவர்க்கு மகிழ்ப்பையுண்டாக்கிப் பெரிய கங்கணமணிந்த தன்றுடைய தோளின்மீது வைத்துக்காக்கும் கிருபையையுடைய பாண்டியராசனும் கரியமதம்பொழிகின்ற அஷ்டகயங்களும் விஷத்தையுடைய அஷ்டமாநாகங்களும் சுமக்கின்ற பூமிபாரத்தைத் தாமே சுமந்தார் மாணிக்கவாசகரென்றவாறு............ (௧௭)

காதலித்தறஞ்செய்வோர்க்குக்கவசமுங்கண்ணுமாகி......... *
யேதிலர்க்கிடும்பையாகியிறைஞ்சினர்க்கின்பமாகி.......... *
யாதுலர்க்கன்னையாகியரனடிக்கன்புமிக்கார் .............. *
பூதலத்திறைவனுணைபொறுவறநடத்துநாளில்.............. *

ஏ-து. விருப்பங்கொண்டு தருமஞ்செய்பவர்க்குத் துன்பம் வாராமற்காக்கின்ற ஒருகவசமாகியும் இறந்தகண்ணாகியும் மற்றவர்களுக்குத் துன்பத்தைத்தருகின்றவராகியும், வணங்கினவர்களுக்கு, இன்பத்தைத்தருகின்றவராகியும், ஏழைகளுக்குத்தாயாகியும், சிவனதுதிருவடியிலே அன்புமிகுந்தவருமாகியமாணிக்கவாசகர் பூவுலகத்துக்கு அரசனாகிய பாண்டியராசனுக்கினையைப் பொறுமைநீங்க நடத்துகின்றநாளிலென்றவாறு............(௧௮)

பற்பலபொருளாயுள்ளபாசமுமதனைமேவி....... ... ..*
யுற்பவபேதமானவுடம்புயிரொடுங்குமாறு... .........*
மற்புதபுத்திமுத்தியளித்தருளாலேமேலாம்................*
தற்பரனடத்துமாறுமுணர்ந்தனர்சைவநூலின்.... ....... *

ஏ-து. பலபல சத்திகளாயிருக்கின்ற மலங்களும் அம்மலங்களைப்பொருந்தி எழுவகைப்பிறவிதோறும் பேதப்படுகின்ற உடம்பும் உயிரும் ஒடுங்கிறவிதமும் ஆச்சரியமாகப் பந்தமோக்ஷங்களைக் கொடுத்துக் கிருபையினாலே மேலாகியபரமசிவன் நடத்தும்விதமும் சிவாகமங்களாலறிந்தார்மாணிக்கவாசகரென்றவாறு.(௧௯)

ந்திய மலர்களைச்சிந்தின-சண்பகச்சோலைகளென்றவாறு. (௪௯)

நீங்குவளயிவ்வாறுல நீள்குதநாந்தந்.... ................ *
தேங்காரளிமுரல்பாதிரிதெங்கின்திரள்வகுளங்........... *
கோங்காசினிகொந்தார்செழுமந்தாரநெருங்கும்...... ... *
பூங்காவயகன்றூர்புலியூர்நன்னகர்கண்டார் ............ *

எ-து. நீங்காதவளங்களையுடைய நீண்டமாவும் நாரத்தையும் நிறைந்த வண்டுகள் சத்திக்கின்ற பாதிரியும் தெங்கும் மகிழும் கோங்கும் பலாவும் கொத்தார்ந்த செழுமையுள்ள மந்தாரமும் ஆகிய மரங்கள்நெருங்கிய பூஞ்சோலையைக்கடந்து சிதம்பரத்தைக்கண்டார். மாணிக்கவாசகரென்றவாறு..............(௫௰)

சேணொன்றியமதிலும்பணிதிகழ்கோபுரநிரையுஞ்........*
சோணந்தருகும்பங்கிளர் துணைமாளிகைபலவுங்...., ......*
காணுந்தொறுமெழில்செய்வதுகண்டஞ்சலிகொண்டே*
பூணுந்திருவருளன்பர்புகழ்ந்தாருண்மகிழ்ந்தார் .........*

எ-து. உயர்ச்சிபொருந்திய மதிலும் சிற்பத்தொழிலின்மிகுந்தகோபுரவரிசைகளும், சிவந்தகும்பங்கள்பிரகாசிக்கின்ற அனேக உப்பரிகைகளும், பார்க்குந்தோறும் அழகினைச்செய்வதுகண்டு அஞ்சலியஸ்தராய்ப் புகழ்ச்சிசெய்துமகிழ்ச்சிகொண்டார். திருவருள்பூண்ட அன்பராகிய மாணிக்கவாசகரென்றவாறு.. (௫௧)

வேதந்தருமொழியுந்தொழும்விண்ணோர்தமதொலியுங்*
கீதந்தருமொலியுங்கிளர்முழவங்களினொலியும்... .... .... *
போதந்தருசிவஞானிகள்புகலாகமவொலியு ........ ..... *
மோதுந்தமிழொலியுங்கடலொலிசெய்தனபுலியூர் .....*

எ-து. பின்னும் அந்தச்சிதம்பரத்திலே வேதமோதுகின்ற சத்தமும், வணங்குந் தேவர்கள்சத்தமும், பாடுகின்றகீதங்களின் சத்தமும், பிரகாசிக்கின்ற பேரிகைகளின்சத்தமும், அறிவினைத்தருகின்ற சிவஞானிகள் சொல்லுகின்ற ஆகமங்களின்சத்தமும், ஓதுகின்ற தமிழின்சத்தமும், கடல்போலச்சத்தித்தனவென்றவாறு

நிரையொன்றியமணிமாளிகைநெடுவீதிகளகலா ... .......*
வரையொன்றியவுயர்கோபுரமணிவாயில்புகுந்தே ....... . *
யுரையொன்றியசிவஞானமுரைக்குஞ்சிவநன்னூற் ........*
கரைகண்டவர்மணிமன்றெதிர்கண்டாரருள்கொண்டார் .*

எ-து வரிசைபொருந்திய அழகிய உப்பரிகைகளையுடைய நெடிய வீதிகளைக்கடந்து மலைபோற் பொருந்திய உயர்ந்த கோபுரவாசல்வழியாகப் புகுந்து பொருந்திய சொல்லையுடைய சிவஞானத்தை விளக்குகின்ற சிவாகமங்களைக்கரைகண்ட மாணிக்க

வாசகர் கிர்சபையை எதிரேகண்டு அருள்பெற்றதென்றவாறு.

பொன்றூர்பொதுவிற்றாடியபுனிதன்றிருவடிமே.... ...*
லன்றூடிவைக்கும்பரனுக்குப்படிதன்பார்.... .......... .*
மன்றூவுயிரன்றூய்மணிமன்றூசரென்றே........... .*
சொன்றூர்பலகாலன்பொடுதொழுதார்மிகவழுதார்.......*

எ-து. பொன்னம்பலத்திலே நின்று திருக்கூத்தாடிய கடவுளை த் தம்முடைய சிரசிலே அந்தநாளிலே திருவடிகளைச்சூட்டிய குருவுருவமாகக் கண்டு இந்தச்சகத்துக்கெல்லாம் அரசனே உயிருக்கொப்பானவனே சபாநாயகனே உனக்கு அடைக்கலமென்றுசொல்லிப் பலதரம் அன்புடனேதொழுதுமிகவும் அழுதார். மாணிக்கவாசகரென்றவாறு.... .............................. ......(௰௪)

விண்டேயிருகண்ணீர்விழவீழ்ந்தின்னடிமுடிமேற்......*
கொண்டேயெழுந்தன்பொடுகுறையாவருணிறைபா.*
வண்டேர்குழலுமைபங்கனைவண்டில்லையுளின்னே.......*
கண்டேனெனநற்பாடல்கருத்தாவுணர்த்தார்.... .........*

எ-து. இரண்டுகண்களும் ஆனந்தபாஷ்பம்பொழிய நமஸ்காரம்பண்ணித் திருவடிகளை முடியிற்சூட்டிக்கொண்டு பின்பு எழுந்து அன்புடனே குறைவில்லாத திருவருள்நிறைந்து வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவிபாகனாகியகடவுளை வளத்தையுடைய தில்லைமாநகரிலே இப்பொழுதே கண்டேனென்று நல்லபாடல்களாகிய கண்டபத்து மனங்கொள்ள உரைத்தார். மாணிக்கவாசகரென்றவாறு.... ............................(௰௫)

குன்றூவருண்மூலந்திகழ்குறியாகியசுடரு ... .... ........*
மன்றூடியவெளியூடுமகிழ்ந்தாடியவொளியு ...............*
மொன்றூகியவனுபூதியினுற்றூர்செயலற்றூர்... ...............*
நின்றூரசைவில்லாரொருநிலைபோலியமானூர்.............*

எ-து. குறைவில்லாத கிருபையையுடைய திருமூலஸ்தானத்திலிருக்கும சிவலிங்கமாகியசோதியும், பொற்சபையாகிய சிதாகாசத்திலே மகிழ்ந்து திருநடஞ்செய்கின்றசோதியும் ஒன்றென்றுசொல்லும் அனுபூதியிலிருந்து ஒருசெயலுமில்லாதவராய் அசைவற்ற ஒரு சித்திரம்போலானார். மாணிக்கவாசகரென்றவாறு.

மைகால்குழலுமைபங்கினன்வழிபாடுமறந்தே........ ....*
கைகாலசைவிலதாயினகண்ணூங்கிறிதிமையாச்.... ..........*
செய்காரியமென்றேவினுமெதுவாறுமொன்றூ.............*
மெய்காவலர்மணிமன்றைவிடப்பெறுவினியென்றூர்.....*

எ-து. அப்போது கருமையை விரிக்கின்ற கூந்தலையுடைய உ

மாதேவி யாகராமைய சுபாவியகளை வழிப்படுவது மறந்துகையுங் காலும் அசைவில்லாமனருகின்றன - கண்ணுங் கொஞ்சமாயினும் இமைக்கவில்லை. செய்யுங்காரியம் என்னேஇது தெளியாத மயக்கமாயிருக்கிறதென்று மாணிக்கவாசகனை இனி அழுதியசபையைவிட்டுப் போமென்று மெய்காவற்காரர்சொன்னார். (௫எ)

பூண்டருள்கொண்ட காவல்புரியவருவாத்ததலைகேளாத .....*
தாண்டவநிகழுஞானத்தன்மையின்றன்மைநாடிக் ....*
காண்டருஅரியாதீதக்கழியாதத்தொளியின்மூழ்கி ...... ..*
நீண்டதோர்தம்பமாகிநின்றனர்நெடிதுபோது ......*

எ - து. கிருபையைக் கொண்ட மெய் காவற்காரர் சொன்னது கேட்டுத் தாண்டவம் புரிகின்ற, அறிவின் றன்மையினது பழமையைநாடிக்காணத்தக்க அரியாதீதமாகியமிகுந்த யாத்திலுடைய ஒளியிலேமூழ்கிப் பரவசப்பட்டு நீண்ட ஒரு ஸ்தம்பமாகி நெடுநாழிகை நின்றார், மாணிக்கவாசகரென் றவாறு. .....(௫அ)

போமெனப்போகாரொன்றும்புகல்கிலர்பித்தங்கொண்டா
ராமெனக்காவல்லாரஞ்சிநின்றிரங்குமெல்லை.... .........,*
சாமுடற்குயிர்வந்தெய்துந்தன்மைபோற்குவிந்தகஞ்சத்
தேமலர்க்கரமேற்கொண்டுசிவசிவபோற்றியென்றார் ..... *

எ - து. இவர்போமென்றால் போகார்-ஒன்றும் பேசார்-பயித்தியங்கொண்டவராகுமென்று மெய்காவற்காரர்பயந்து நின்று இரங்கும்போது இறந்ததேகத்திற்கு உயிர்வந்தடைந்த தன்மையைப்போலஅஞ்சலிசெய்ததாமரைமலர் போன்றகைகளைமேற்கொண்டுசிவசிவபோற்றியென்றார். மாணிக்கவாசகரென் றவாறு

முன்னவன்செம்பொன்மன்றைமும்முறைவலங் கொண்ட
தன்னிகரில்லாமூலத்தலைவனைவணங்கிப்பின்ன.....[ங்குத்
ரன்னையம்பிகைதன்பாதமன்புடனிறைஞ்சியந்தப்......*
பொன்னவிர்கோயின்மேல்பாற்புலீச்சரஞ்சென்றுசேர்ந்து

எ - து. ஆதியாகிய கடவுளுடைய பொன்னம்பலத்தை மூன்றுதரம் வலங்கொண்டு அங்கே தன்க்குநிகரில்லாத திருமூலஸ்தானக் கடவுளை வணங்கிப் பின்பு உமாதேவி திருவடிகளை அன்புடனேவணங்கி அந்தப் பொன்னொளியையுடைய கோயிற்குமேற்புக்கத்தில்திருப்புலீச்சரத்திலடைந்தென் றவாறு........ (௬௰)

வரத்தரவுபார்ந்த .........வாடிவணங்கிநாடுக் ..... ......... .*
சுரந்தனிலிருந்தவ.........தயிறைஞ்சிநீங்கித் .... .... *

திருந்தியமறையோர்வாழுந்தில்லையம்பலஞ்சூழ்வீதிப். ❋
பொருந்துமமிர்தமானவாசகம்புகலலுற்றார் ........... ❋

இ-ள். வேண்டிய வரங்களைத்தருதற்கு எழுந்தருளிய அந்தக்கடவுளுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி அதற்கருகேதிருநாகேச்சரத்திலிருந்த பரமசிவனுடைய பாதங்களைவணங்கிநீங்கித், திருத்தமாகிய தில்லைமூவாயிரவர் வாழ்கின்ற சிதம்பரத்தைச் சூழ்ந்த வீதியிற்போகும்போது அமிர்தமாகிய திருவாசகஞ்சொல்லத்தொடங்கினார்-மாணிக்கவாசகரென்றவாறு (௬௧)

ஆடுமிக்குலாநற்றில்லை யாண்டவன்றனைக்கொண்டென்று
பாடலைப்புகன்றுகோயிலிருவகைப்பதிகங்கூறி ..... ....[ம்
நாடுமச்சிவபுராணமொழிந்தநல்லகவன்மூன்று ........... ❋
நீடுமெய்த்தமிழுமன்பாலோதினர்நீதிமிக்கார் ... ..... ... ❋

இ-ள். ஆடுங்குலாத்தில்லை யாண்டானைக் கொண்டென்னும் குலாப்பத்துட்பாடிக்கோயிற்றிருப்பதிகமும்-கோயின்மூத்ததிருப்பதிகமும்பாடிக் கீர்த்தித்திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித்திருவகவல், ஆகியமூன்றகவலும் அன்பினாலேபாடினார். நீதியின்மிக்கவராகிய மாணிக்கவாசகரென்றவாறு .... ...... (௬௨)

கைவளைசிலம்பச்செம்பொற்கிங்கிணிகறங்கச்சூழ்ந்து ... ❋
மைவளர்குழன்மேல்வண்டுமருண்டிசைதிரண்டுபாட ..... ❋
மெய்வியர்வரும்பவெம்போர்விழிக்கயல்புரட்டிஞாங்க. ❋
ரிவ்வகைநின்றுசுண்ணமிடித்தனர்மடநதைநல்லார் ....... ❋

இ-ள். கைகளிலேயிருக்கின்ற சங்கவளையல்கள் சத்திக்கச், செம்பொன்னாற்செய்த கிங்கிணிகள் சத்திக்க, மயிர்ச்சாந்துபூசிய கரியகூந்தலின்மேல். வண்டுகள் மயங்கி இசையைப்பாடத்-தேகத்திலே வேர்வையுண்டாக-வெவ்விய போர்செய்கின்ற கண்ணாகிய கயல்களைப்புரட்டிப் பக்கங்களிலே யிந்தவகைநின்று மாதர்களெல்லாம் திருப்பொற்சுண்ண மிடித்தார்களென்றவாறு .(௬௩)

அத்திருவளையார்பாடல்கேட்டவரிசைத்ததாக ............ ❋
மெய்த்தமிழதனான்குயிற்குதிருச்சுண்ணமோதி ......... ❋
மைத்திகழ்காவினூடுவருதலுமங்கேபோய்தல் ..... ....... ❋
தத்தமின்முயலுங்காதற்சிறுமியர்தம்மைக்கண்டார் ...... ❋

இ-ள். அந்த மாதர்களுடைய பாடல்களைக்கேட்டு அவர்கள் சொல்லியதாக மெய்யாகிய தமிழினால் நன்மையிருந்ததிருப்பொற்சுண்ணம்பாடி மேகங்கள்பிரகாசிக்கின்றசோலையிடத்தே வருமளவில் அங்கேதங்கள் தங்களுக்குள்ளே விளையாடுகின்றபெண்பிள்ளைகளைப்பார்த்தார். மாணிக்கவாசகரென்றவாறு ..(௬௪)

கண்டபின்வறிதாகூறுங்கட்டுரைசிறிதுமற்றெம் ......... *
மண்டலனையுரையினீரென்றவரவருரைத்ததாக ............ *
வெண்டருதிருத்தெள்ளேணந்திருவுந்தியெழிற்றோணோக்கம்
பண்டிகழ்திருப்பூவல்லிப்பாடல்பொன்னூசல்சொன்னார்.

எ-து. பார்த்தபின்பு வீண்பேச்சுச் சிறிதுமில்லாமல் எமதுகடவுளையே சொல்லுங்கள் நீங்களென்று அவரவர்கள்சொல்லியதாகத் திருத்தெள்ளேணம், திருவுந்தியார், திருத்தோணோக்கம், பண்கள்விளங்குகின்றதிருப்பூவல்லி, திருப்பொன்னூசல், பாடினார். மாணிக்கவாசகரென்றவாறு........ ........ ......... ......(௬௫)

ஆங்கொருசிறுமிதன்னீன்றவன்னையைநோக்கிக்கூறுந் ..........*
தாங்கிசைமொழியேயாகத்தகும்மவையினைநீரோதி...... *
ஞாங்கரின்மூன்றுந்தும்பிதன்னையுநயந்துநாதன் .......... *
பூங்கழல்வழுத்துகென்றுபுனிதர்கோத்தும்பிசொன்னார் *

எ-து. அங்கேஒருபெண் சிறந்த தனதுதாயைப்பார்த்துச்சொல்லும் தாங்கப்பெற்ற இசையையுடைய சொல்லென்னத்தக்க அன்னைப்பத்துப்பாடிப் பக்கங்களிற் பாடுகின்ற தும்பியைவிரும்பிப்பார்த்துக் கடவுளுடைய திருவடியைத் துதிசெய்யென்று திருக்கோத்தும்பிசொன்னார். மாணிக்கவாசகரென்றவாறு (௬௬)

பொங்கரினிடையேவாழும்பொற்பிளங்குயிலேகூவி...... *
யிங்கழையெம்பிரானையென்பதுங்கிளியைநோக்கித்... *
திங்களஞ்சடையோன்பாதஞ்செப்பெனத்தசாங்கமென்னுந் *
தங்கிசைத்தமிழுஞ்சொன்னார்தன்னிகரொருவரில்லார்....*

எ-து. சோலையின் மத்தியத்திலேவாழ்கின்ற குயிலைப்பார்த்து அழகிய இளங்குயிலே இங்கே எமதுகடவுளைக் கூவியழையென்பதாகிய குயிற்பத்தும், கிளியைப்பார்த்துச் சந்திரனைத்தரித்த கடவுளைச் சொல்லென்னும் திருத்தசாங்கமும்பாடினார். தனக்கு நிகரொருவருமில்லாத மாணிக்கவாசகரென்றவாறு......(௬௭)

மண்ணிடைத்தம்மையாண்டவடிவினையன்றிமற்றோ .... *
ரண்ணலைக்கடவுளென்பார்க்கஞ்சுதும்வினையேனென்றும்
பண்ணுறச்சிறந்தசெய்யுள்பகர்ந்துநற்பன்னசாலை ..... *
யொண்ணகர்ப்புறம்புசெய்தங்கிருந்தனருண்மைமிக்கார்

எ-து. பூமியிலே தம்மை யடிமைகொண்ட கடவுளை யல்லாமல் வேறொருவரைத் தெய்வமென்பதற்குஅஞ்சுகின்றேன் வினையையுடையேனென்னும் சிறந்தபண்ணையுடைய அச்சப்பத்துப்பாடிப்பின்பு அந்தநகர்ப்புறத்திலே ஒருபன்னசாலைசெய்து அங்கிருந்தார். உண்மையிலேமிக்க மாணிக்கவாசகரென்றவாறு (௬௮).

பரம்பரப்பொருளாமிந்தப்பைந்தமிழோதிவையம்..... ❋
பெரும்பிறப்பகலவந்துபிறந்தவர்செய்தியெல்லா ... ❋
மிருந்தநற்றெருகுதிதோறுமியம்பிதஞ்மகிழ்ச்சிபெய்தி ❋
யரும்புகழ்த்தில்லையுள்ளாரியாவருமதிசயித்தார் ..... .. ❋

எ-து. உலகமானது வேதாந்தப்பொருளாகிய இந்தத்திருவாசகத்தமிழைச்சொல்லிப் பெரியபிறப்பினின்றுநீங்க வந்து திருவவதாரஞ்செய்த மாணிக்கவாசகருடையசெய்தியனைத்தும் அரியபுகழையுடையதில்லையிலுள்ளவர்யாருந்தங்கள்கூட்டங்கள்தோறுஞ்சொல்லி நல்லமகிழ்ச்சிபெற்று அதிசயித்தாரென்றவாறு.

தத்துவமுடிவிலாடுந்தாண்டவந்தம்முட்கண்டு ......... ❋
நித்தலுஞ்சென்றுமன்றினிமலனையன்பாலேத்தி.......... ❋
யித்திறமையர்தில்லையெல்லையில்வைகவிப்பாற் ........... ❋
புத்தரைவாதில்வென்றபுகழினையுரைத்தல்செய்வாம் .... ❋

எ-து. முப்பத்தாறுதத்துவத்தின் முடிவிலேசெய்கின்ற சபாநாயகராதுநிருத்தத்தைத் தமக்குள்ளேகண்டு நித்தியம்போய் அந்தக்கடவுளைப் பத்தியினாலேவணங்கி யிந்தப்பிரகாரம் மாணிக்கவாசகர் தில்லைமாநகரத்து எல்லையிற்செய்தபன்னசாலையிலெழுந்தருளியிருக்க, இப்பால் அவர் புத்தரைவாதிலேசெயித்த கீர்த்தியைச் சொல்லுவாமென்றவாறு...... .................... . (௪௰)

---

திருவம்பலச்சருக்கம்-முற்றுப்பெற்றது-ஆ சா௰௯.



# புத்தரை வாதில்வென்றசருக்கம்.



தாழுநீடுவேணியண்ணலுன் விடாவொர்மாதவ ........... .. ❋
ஞூழிஞாலவண்மையுண்மையாயுநேயதெஞ்சினன்........ ❋
சோழநாடுகண்டுதில்லைதொழுதுமின்புபழுதிலா ............❋
வீழநாடுதன்னைநாடவெண்ணியங்குறன்னினன்.......... ❋

எ-து. தாழ்ந்து நீடிய சடாபாரத்தையுடைய பரமசிவனுடைய இரண்டுபாதங்களையும் விடாத ஒருதபசியானவர் சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ளவரத்லைத ஆயத்தக்க இச்சையுள்ள மனமு

டையவராய்ச் சோழநாட்டைக் கண்டு தில்லைமாநகரை வணங்கிப் பின்பு குற்றமில்லாத ஈழதேசத்தைப் பார்க்கவேண்டுமென்று நினைத்து அங்கே போயினரென்றவாறு. .......... ..........(௯)

தண்ணுமாதிமாதவனலங்கொளீழநாடணு. ... .... .........*
மண்ணருனிருந்தவூரடைந்துசேரிடந்தொறு.............*
மெண்ணிலாதகாலம்வாழ்திதில்லைமன்றமென்றுகூ...... .. ...*
ருண்ணிலாவுமன்பினுலுரைக்கவேதொடங்கினுன்..........*

எ-து. அப்படிபோன தபசியானவர் முதன்மைபெற்ற நன்மையைக்கொண்ட ஈழநாட்டரசன் இருந்தவூரைச்சேர்ந்து மிகுந்தஉள்ளன்பினலேதானிருக்குமிடந்தோறுஞ்சிதம்பரம் அளவில்லாதகாலம்வாழ்கவென்று சொல்லத்தொடங்கினனென்றவாறு

சென்றுசேரிடந்தொறுஞ்சிறந்தசெம்பொனம்பல .... *
மென்றுகூறிவைகுநாளிலீழநாடன்முன்புபோய் .........*
நன்றிலாதமூடர்தாநயந்திறைஞ்சிமன்னகே .............. *
ளொன்றியாமுரைத்துமென்றுவந்திவ்வாறுகூறினர் ... .*

எ-து. தான்போய்ச் சேருமிடந்தோறுஞ் சிறக்கப்பெற்ற பொன்னம்பலம் வாழ்கவென்றுசொல்லி யிருக்குநாளில் அங்கேயிருக்கும் நன்மையில்லாத மூடராகிய புத்தர் ஈழதேசத்தரசாவுக்கெதிரேபோய் நயப்புடன்வணங்கி அரசனே ஒன்றுகேள் நாம் சொல்லுகிறோமென்று மகிழ்ச்சியுடன் இந்தப்படிசொன்னார்களென்றவாறு......................... ..................... .................. ..... ... (௩)

ஒற்கமில்திருத்தனுமொருத்தனிந்நகர்க்குளா...............*
னற்கலன்களக்குமாலைதானுமுண்பதையமே. ..... ......... *
நிற்கினுமிருக்கினுநிலாவுசெம்பொன்மன்றெனுஞ் ......*
சொற்கிளர்ந்துரைக்குமென்றுசொல்லிமுன்வணங்கினர் *

எ-து. குறைவில்லாத திறமையுடையவனுமொருததன் இந்நகரிலேயிருக்கின்றான் அவனுக்காபரணம் ருத்திராக்ஷமாலிகை, அவன் நாள்தோறும்புசிப்பதுபிக்ஷை, நின்றாலும் இருந்தாலும்பிரகாசத்தையுடைய பொன்னம்பலமென்னுஞ்சொல்லைச்சொல்லுகின்றானென்று முன்னேவணங்கினர்களென்றவாறு ..... (௪)

இன்றிங்கவனைக்கொணர்வீரென்றிசைத்தானிருபனுங் கவனுஞ், சென்றன்புடையாய் வருகவுனையழைத்தானிறன்மன்னவனென்ன, நன்றென்பதுவுந் தீதுமிலா நாளும்பலிபெற்றுண்பதொழிற், தொன்றுங்கருதாருடன்கருமமுள தோவேந்தற்கெனவுரைத்தான்...................... .... ...*

து அவ்வரசனுமவன் இன்று இங்கே அவனைக் கொண்டு

வாருங்கொளென்றுசொன்னான்- அவனும்போய் அன்புடையவரே
யும்மை அரசனழைக்கின்றான் வாருமென்றான் - அதற்கு அவர்
சொல்லுவார் நாள்தோறும் நன்மையுந்தீமையுமில்லாத பிச்சை
யெடுத்து உண்பதல்லாமல் ஒன்றும் நினையாதவர்களிடத்தும் அ
ரசனுக்குக் காரியமுண்டோவென்று சொன்னவாறு..............(௫)

ஊரிற்பலிகொண் டுண்கிற மக்கொன்றுங்கருமமில்லெனி
னும். பாரிற்பயில்வா ருயிர்புரத்தல பாரமாதிருபத் காதலி
னால், வேரிற்கமழ்தா ரெம்மரசன் றன்பாலவருதல் வேண்
டுமெனச், சீரிற்றிகழ்வேற் றூதருடன் சென்றா னொன்று
ந்தீமையிலான்.....................*

எ-து. ஊரிலேபிக்ஷையெடுத்துண்டாலும், காரியமொன்றுமில்லை
யானாலும், பூமியிலேயிருக்கின்றவர்களுடைய உயிரைரக்ஷித்தல்
அரசர்களுக்குப்பாரமாகும். ஆதலினால்-கமழ்கின்றவோரற்செய்
த மாலையையுடைய எங்களரசனிடத்திலே வரல்வேண்டுமென்று
சொலல நல்லதென்று சிறப்புவிளங்கிய வேலையுடைய தூதருட
னேபோனார். தீங்கொன்றுமில்லாத தபசியானவரென்றவாறு.

முத்தும்பிடகமூன் றுணர்ந்துசெயிர்நான்கொழிந்துமுதசீ
லமைந்தும்புனைந்துபார்மீதேயாறைந்தடக்குமியல்புடை
யோன், கந்தங்கெடுதன் முத்தியெனக்காட்டுங்குரவனிருப்ப
வுடன், சந்தஞ்சிறந்தபுயதிருபனிருந்தான்றுணைபுடைசூழ.

எ-து. ஆதியாகிய பிடகநூன் மூன்றுமறிந்து நான்குகுற்றமு
ம்நீங்கிச் சீலமைந்துந்தரித்துக் காமாதியாறும் பஞ்சேந்திரிய
ங்களும் அடக்கப்பட்ட இயல்பையுடையவனும் பஞ்சகந்தமு
ங்கெடுவதுமுத்தியென்று காட்டுகின்ற பௌத்தாசாரியன் தன்
னுடனேயிருக்கச் சேனைகள் புடைசூழ அழகுசிறந்த புயத்தை
யுடைய புத்தராசனுமிருந்தானென்றவாறு......................(௭)

உடுக்குந்தனிவெண் கோவணமுமொளிர் பொக்கணமுமா
த்திரையு, மெடுக்குஞ்சதங்கை நெடும்பிரம்புமிலகுந்திலத
த்திருமுகமு, மடுக்குஞ்சிறுபுன் முறுவலுநின் றசையுஞ்ச
டையுங்கண்டரசன், றிடுக்கங் கொளவந்தருகாக விருந்தா
ன்றிருவம்பலமென்று....................................*

எ-து அப்போது தபசியானவர் உடுக்கப்பட்ட ஒரு வெள்ளைக்
கோவணமும், பிரகாசிக்கப்பட்ட கபாலமும், சதங்கைகட்டிய
நெடியபிரம்பும், திலதப்பொட்டணிந்ததிருமுகமும், சிறியபுன்
சிரிப்பும் அசைகின்ற சடையும்பார்த்து அரசன் திடுக்கிடவந்து
அருகேயிருந்தார்; திருவம்பலமென்று சொல்லியென்றவாறு.

இருக்குந்தலைவன்றனைநோக்கி யிப்போதிருவம் பலமென்
றிங், குரைக்குந்தகைமை யெவன்கொலென வுலகாள்பவ
னுக்கவனுரைப்பான், பெருக்கும்புகழாற்றிகழ்வளவன்பிரி
யாவிருகட்பேரருளாற், புரக்குந்திருநாட்டறந்தழைக்கு
ம்புலியூரொன்றுளதால்........................ *

எ-து. இப்படியிருந்த தபோதனைப்பார்த்து இப்போது நீர்
திருவம்பலமென்று இங்கே சொல்லுந்தன்மை யென்னவென்று
வினுவ அவ்வரசனுக்கு அவர்சொல்லுவார். செல்வத்தை அதிகரி
க்கச்செய்யுங் கீர்த்தியினுலே பிரகாசிக்கின்ற சோழராசாவான
வன்பிரியாத தன்னுடைய கிருபாநோக்கங்களாலே ரக்ஷிக்கின்ற
சோழநாட்டிலேசிதம்பரமென்றொரு ஸ்தலமுண்டென்றவாறு.

அந்தப்பதிமுன்றில்லைவனமஃதேபுவனமனைத்திற்கு, மு
ந்தக்கிளருந்தெய்வதலமதனுன்மூலதானமதா, மிந்தப்பு
விக்குநாப்பணெனவிலங்கும்பொதுவாமிடமதனிற், சந்த
த்தனத்தாளுமைகாணத்தலைவன்றிருத்தாண்டவம்புரிந்தான்.

எ-து. அந்தஸ்தலம் முன்னே தில்லைவனம் அதுவே திரிபுவன
த்துக்குமுன்னே உண்டாகிய தெய்வஸ்தலமாம் அதனுல் மூல
ஸ்தானமென்றுசொல்லலாம். இந்தப்பூமிக்கு நடுவாகப் பிரகாசி
க்கின்ற சிற்சபையிலே சந்தனம்பூசப்பட்ட ஸ்தனத்தையுடைய
உமாதேவிகாணச் சபாநாயகர் நிருத்தஞ்செய்தாரென்றவாறு.

மன்னுந்திறலான்மனுமைந்தன் வடிவிற்றொழுநோய்மாற்
றிநெடும், பொன்னங்கிரிபோ லுருநல்கும் புனிதத்தடமு
ண்டதின்மூழ்கி, முன்னம்புவிமேற்றவமொன்றுமுயலாத
வருமைந்துதொழி, லென்னுந்திருத்தாண்டவம் புரிதல்க
ண்டாலுலகிலினிப்பிறவார்...................... *

எ-து. நிலைபெற்ற திறலையுடைய மனுச்சக்கரவர்த்தி குமாரனு
கிய இரணியவன்மனுடைய தேகத்திலிருந்த குட்டநோயைநீக்
கி நெடியமகமேருவைப் போலுந் திவ்வியதேகத்தைக்கொடுத்
த பரிசுத்தமாகிய சிவகங்கையென்னும் ஒருதடாகமுண்டு. முன்
னே பூமியிலேயொரு தவமுஞ்செய்யாதவரும் அதிலேமூழ்கிப்
பஞ்சகிருத்தியத்திற்குக் காரணமாகிய நிருத்தத்தைத் தெரிசித்
தால் அவர்கள் உலகத்திலேவந்து பிறவார்களென்றவாறு.. (௰௧)

நண்ணும்பிறவியொழித்துயிர்க்கு நலஞ்சேர்முத்திகொடு
க்குமதற், கெண்ணுஞ்சமயக்கடவுளரில்யானேவல்லேனெ
னப்பதமேல், வண்ணத்திகழ்பொற்கழலணிந்துமதுகைக்

அவ்வியமனத்தினாலேயனைத்துருவங்கள்கூடி ......... *
யிவ்வுயிர்பிறந்துமீளவிறந்திடுமென்றிரங்கி ......... *
வெவ்வெயில்வருத்தமுற்றார்மென்னிழல்விரும்புமாபோ .... *
லெவ்வியுமழுவுமேந்துநம்பனுக்கன்புமிக்கார் ......... *

இ-ள். அழுக்காற்றையுடைய மனதினாலே எல்லாவுருவங்களோடுங்கூடி இந்த உயிர்பிறந்து மறுபடி இறந்திடுமென்று இரக்கமுற்று கொடியவெய்யிலிலே வருத்தப்பட்டவர்கள் மெல்லியநிழலை யிச்சிக்குமாறுபோல மானுமழுவுமேந்திய பரமசிவனிடத்திலே அன்புமிகுந்தார் மாணிக்கவாசகரென்றவாறு ....... (௨௰)

தீத்திறவினையினாலேசிறைப்படுமுயிரையெல்லாம் ......... *
பார்த்துலகவாழ்விற்பயனிலையென்றுதேர்ந்து ......... *
கூத்தினர்தன்மைவேறுகோலம்வேறாகுமாபோ ......... *
லேத்தினர்மனத்தின்முன்போனிகழ்த்தினர்வழுதிநீதி ......... *

இ-ள். பொல்லாததீவினையினாலே கட்டுப்பட்டுப் பிறப்பிறப்பில் வருந்துகின்ற சீவகோடிகளைப்பார்த்து உலகவாழ்விலேயொருபயனுமில்லையென்றுதெளிந்து கூத்தாடிகளுடைய கருத்துவேறும் வேஷம்வேறுமாவதுபோல உலகவாழ்க்கையைப் பொய்யென்று மனதிலே நினைத்தவராய் முன்போலப் பாண்டியராசனுடைய நீதிமுறையை நடத்திக்கொண்டுவந்தார் வாதவூரரென்றவாறு. ........................ (௨௧)

வாழ்முடைப்பிறவியிற்றோன்றுமறையவர்க்கிறைவருண்மை ....... *
சூழுணர்வென்றுநாலாஞ்சத்திநிபாதமெய்திப் ......... *
பாழ்மயக்கெழுத்துமொன்றும்பராபரமுணர்த்துஞான ....... *
குருபரன்றிருத்தாள்சென்றுகூடுதல்வேண்டுமென்று ....... *

இ-ள். அநுக்கிரகத்தினாலே பூலோகத்திலே திருவவதாரஞ்செய்த மாணிக்கவாசகர் உண்மையறிவை தருவதென்னப்பட்ட அதிதீவிரசத்திநிபாதத்தைப்பெற்று உயர்ந்த அஞ்செழுத்தினைப்பொருளாயுள்ளசிவத்தை அறிவிக்கும் ஞானாசாரியன் திருவடியைக் கூடல்வேண்டுமென்று நினைத்தாரென்றவாறு ................... (௨௨)

மற்கடவிலங்குதன்னைவ்வளங்கெழுவிளவின்மேவு ......... *
நற்பலிகொள்ளவேண்டிநயந்துகலமெலறிவார்போலச் ......... *
சற்குருவுளரேயென்றுநாடுவார்தர்க்கமெல்லாஞ் ......... *
சொற்கலைஞானசைவர்தம்முடன்சொல்லலுற்றார் ......... *

எ-து. குராங்காகிய மிருகத்தினுமேலே வளம்பொருந்திய விளைவி
னுடைய நலமபழம்பெறவிரும்பி நயப்புடனே கல்லைவிட்டெறி
வார்கள்போல் நல்லகுருவுண்டோவென்று தேடுவோராகிய மாணி
க்கவாசகர் வாதங்களெல்லாம் சொல்லுகின்ற கல்வியிலே வல்லவை
வாசாரியர்களுடனே பேசிப்பிரசங்கம்பண்ணினுரென்றவாறு. ௨௩

வாங்கெழுபுவியினுள்ளவாவியுங்காவுமோடி ........... *
விளங்கிசைவண்டுதண்டேன்மிகுமலர்தேடுமாபோ ........ *
லோங்கொளாரநிமலனன்னூலோதினருண்மையெல்லா ........ *
மாராய்ந்தறிவுணர்ந்ததீரர்யாவரொன்றுயுநாளில். ............ *

எ-து. வளம்பொருந்திய பூலோகத்திலேயுள்ள தடாகங்களிலு
ஞ் சோலைகளிலுஞ்சென்று விளங்குகின்ற இசையையுடையவண்டு
கள் குளிர்ந்த தேனிறைந்த மலர்களைத் தேடுவதுபோல மணங்
கொள்ளச்சிவாகமங்களைக்கற்றறிந்த மாணிக்கவாசகர் மெய்ப்பொ
ருளெல்லாம் அரலைசெய்து அறிவிலேயறிந்த தன்மையையுடை
ய ஞானசாரியர் யாவரென்றாராயுநாளிலென்றவாறு......(௨௪)

[ வேறு. ]

மேதகுவனிதையரொங்கனுய்வீசியகவரியசைந்தெழ ........ *
மாதவமுனிவர்களந்தணர்மாசறுகவிஞர்செறிந்திட .......... *
வேதமின்மதிகுலபுங்கவனேர்கெழுமணிமுடியின்றிர ......... *
ளாதவன்மிசையெழவந்தரியாசனமதனிலிருந்தனன் ......... *

எ-து. மேன்மையையுடைய மங்கையர்கள் வீசுகின்ற சாமரை
களொங்குமசையவும் மகத்தாகிய தவஞ்செய்கின்ற முனிவர்க
ளும் பிராமணர்களுங் குற்றமற்றவித்துவசனங்களும் நெருங்கவு
ம் பழுதில்லாதசந்திரகுலத்திலேவந்த அரிமர்த்தன பாண்டியரா
சாவானவன் அழகுபொருந்திய திரட்சியையுடைய மணிகள்பதித்
த கிரீடமாகிய சூரியன்சிரசிலே உதயமாகும்படிவந்து சிங்காத
னத்திலே எழுந்தருளியிருந்தானென்றவாறு..........(௨௫)

தாதமிமார்பனெடியபுவிசார்தருமாழ்கடலின்கரை ........... *
நீதிலமாதுரகங்கொடுசேர்கெழுமாரியர்வந்தன .......... *
ரோதமிலாயதுகண்டனமியாமெனவேதொழுதன்பொடு ....... *
மேதினிகாவலன்முன்னிலமேதகுதூதர்விளம்பினர் ......... *

எ-து. அப்பொழுது ஆத்திமாலையணிந்த மார்பையுடையசோ
ழராசாவினுடைய நெடியதேசத்திலே சேர்ந்த கடற்கரையிடத்
தே குற்றமற்ற மேன்மைபொருந்திய குதிரைகள்கொண்டு சிறப்

கொடியுங்கட்டியருட், பெண்ணம்பிகைகண் காணநடஞ்
செய்தானந்தப்பெருந்தருக்கால்.................. ........ ௺
எ-து. பொருந்திய பிறவியைநீக்கி ஆத்மகோடிகளுக்கு நன்மையான மோக்ஷத்தைக்கொடுப்பதற்கு நினைக்கின்ற அனேக சமயதெய்வங்களில் யானேவல்லவனென்று திருவடிமேல் அழகுவிளங்கிய பொன்னினாற்செய்த வீரக்கழலையணிந்து வலிமையுடைய கொடியுங்கட்டி அந்தக்கர்வத்தால் அருட்சத்தியாகிய உமாதேவிகாண நடனஞ்செய்தானெனறவாறு... .........(௰௨)
தேக்குஞ்சடில முடிக்கடவு ளிருதாள்கருதாத் தீமனமும்,
வாக்குஞ்செயலுங் கொடியாருமொருகாற்பொன்னம்பல
மென்னி, லாக்கந்தருமஞ்செழுத்திருபத்தோராயிரத்தோ
டறுநூறு, நாக்கொண்டுரைக்குமதற்குநிகரொன்றான்குன்றா
நற்புகழான்.... .. . ....... . ....... ..... ... ....... ........ ..✻
எ-து நிறையப்பெற்ற சடாமுடியையுடையபரமசிவனுடைய இரண்டுபாதத்தைவணங்காத தீயமனமும் வாக்கும் செய்கையுமுடைய கொடியவர்களும் ஒருதரம் நிலைபெற்ற பொன்னம்பலமென்றுசொன்னால் செல்வத்தைத்தருகின்ற பஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத்தறுநூறுதரம் நாவைக்கொண்டு சொல்வதற்கு நிகரல்லவாவென்றார். குறையாத நல்லகீர்த்தியையுடைய தபசியானவனென்றவாறு...... ......... ........... ... ......! (௰௩)
நீறுந்திருவஞ்செழுத்துமிலா திருபாதிருவம்பலமென்று,
கூறும்பொருளிங்கிதுவாகுமென்றான்குன்றுமெனுங்குண
த்தான், றேறும்பிடகமூன்றுமுனா செய்யுந்தலைவனலலா
து, வேறுங்கடவுளொன்றுளதோ வென்றேபுத்தன்வெகு
ண்டுரைப்பான்.. ...... .... ........................ ...................✻
எ-து. மலையென்றுசொல்லுங் குணத்தையுடைய தபசியானவர் விபூதி பஞ்சாக்ஷரமில்லாத அரசனே திருவம்பலமென்று நாம் சொன்னதற்குப் பொருள் இதுவாகுமென்றார். அப்போது தேறுகின்ற பிடகாகம மூன்றும் சொன்னதலைவனல்லாமல் வேறே ஒரு தெய்வமுண்டோவென்று கோபித்துச்சொன்னான் புத்தகுருவானவனென்றவாறு....... .. .... ..... ... ....... ............(௰௪)
சென்றேதில்லையெனும்பதியிற் சேர்வேன்வாது செய்தவு
ன்று, னின்றேநடிக்குங்கழலீடுநீடுங்கொடியுமீங்கறுப்பே,
னென்றேகடவுள்புத்தனெனவுலகோரறியவுரைத்தந்
ன்றேபோதிநிழற்பெருமாள் பள்ளியென்ன வமுக்குவிப்
பேன் ............. ........................................................ ✻

எ-து. அப்படியானால் தில்லைமாநகருக்குப்போய் வாதுசெய்து அவரிருந்து திருத்தஞ்செய்கின்ற பாதத்திலிடுகின்ற வீரக்கழலையும் பிடிக்கின்றகொடியையும் அறுத்துப்போடுவேன். புத்தனொருவனேதவிர வேறுதெய்வமில்லையென்று அந்தச்சபையை அரசமரநிழலிலிருக்கும் புத்தன்கோயிலென்று சொல்லும்படி வைப்பேனென்றான். புத்தகுருவானவனென்றவாறு.......(௰௫)

இந்தக்கருமந்தினமூன்றில்யானேமுடிப்ப னெனவெழுந்து, சந்தச்சிவிகை மேற்கொண்டு தன்றாள்வணங்குங் கணஞ்சூழ, நந்தக்கிலருந்திளைக்கடலு நாடுங்காடுமகன்றேகிப், புந்தித்துயரங்கொண்டொல்லைசென்றான் புத்தன்புலியூரில்................................*

எ-து இந்தக்காரியத்தை மூன்றுதினத்தில் யானேமுடிப்பனென்று அழகியசிவிகையின்மீதிலேறிக்கொண்டு தன்னுடையபாதத்தை வணங்குகின்ற பௌத்தக்கூட்டங்கள்சூழ மிகவும்பிரகாசிக்கின்ற அலையையுடைய கடலும் நாடும் காடும்நீங்கிப் புத்தியிலே வியசனங்கொண்டு சீக்கிரத்திலே புத்தகுருவானவன் சிதம்பரத்துக்குப்போயினனென்றவாறு...................(௰௬)

[வேறு.]

மன்னனுந்தனதுசெல்வமகட்குளமூகைநீங்கப் .........*
பொன்னினம்பலத்திலேகவென்பதுபொருந்தவுன்னித்...*
தன்னெடுந்தானைசூழத்தனிப்பெருஞ்சிவிகையேறிச்....*
சென்னிநன்னாடுசேர்ந்துதில்லையினெல்லைபுக்கான்........*

எ-து. புத்தராசனுந் தன்னுடைய செல்வம்போன்ற புத்திரிக்கு முன்னமேயுண்டான ஊமைத்தன்மைநீங்கச் சிதம்பரத்திற்குப்போகவேண்டுமென்பதை நினைத்துத் தன்னுடையசேனைகள்சூழ ஒப்பற்றபெரிய சிவிகையிலேறிக்கொண்டு சோழநாட்டில்வந்து தில்லைமாநகரத்துக்கு வந்தானென்றவாறு......(௰௭)

இங்கிவன்செல்லுமுன்னமொய்ந்தியபுத்தனங்கி.................*
செங்கரங்கூதில்லைபெல்லைச்சிவிகையினிழிந்துசென்று.....*
பொங்குதண்புனல்சேர்சென்னிப்புலீச்சரவரன்பொற்கோயிற்*
றங்குசெங்கனகசாலந்தயங்குமண்டபத்திலானான்....... *

எ-து. இந்தப்புத்தராசன்வருதற்கு முன்னேவந்த புத்தகுருவானவன் அக்கினியைதரித்த சிவந்தகையையுடைய பரமசிவனுடைய தில்லைமாநகரத்து எல்லையின்முன்னே சிவிகையைவிட்டிறங்கி யிருந்த குளிர்ச்சிபொருந்திய கங்கையைத்தரித்த சிரசையுடைய பரமசிவனது ஆலயத்திலே பொன்னினாற்செய்த மண்[illegible] சேர்ந்தானென்றவாறு.......................(௰௮)

ஆங்கவனிருப்பச்சென்றவரசனுமிறைஞ்சியேத்தி .... .... *
யோங்கியமகிழ்ச்சியெய்தியமர்ந்துழிபுரகராசி .... ...... *
தாங்கியசடிலன்கோயிற்றன்னிலுட்கருமஞ்செய்வா......... *
ரீங்கிவர்வரவுகண்டேயாவருமொருங்குசேர்ந்தார் .......... *

எ-து. அங்கேயிருந்த புத்தகுருவைப் புத்தராசன்வணங்கித் துதிசெய்து உயர்ந்த மகிழ்ச்சியடைந் திருந்தபோது சர்ப்பக் கூட்டத்தைமுடித்த சடையையுடைய பரமசிவனது கோயிலிலே பணிவிடைசெய்பவர்கள் இவர்கள்வருதலைக்கண்டு எல்லாரும் ஒன்றாய்ச்சேர்ந்தார்களென்றவாறு.........................(௧௯)

[ வேறு. ]

தத்தமனநொந்துகனலுறெனவெகுண்டே.......... *
சித்தமயர்வெய்தும்வகைசின்மொழிகள்கூறு..... *
வத்தனுறைதில்லைநகரெல்லையயகன்றே ........ *
புத்தகடிதேகிதுபொறேமெனவுரைத்தார் ......... *

எ-து. அப்படிசேர்ந்தவர்கள் தங்கள்தங்கள் மனநொந்து அக்கினியைப்போற்கோபித்து அவர்களாயாசங்கொள்ளும்படி சில வார்த்தைகளைப்பேசிக் கடவுளிருக்கின்ற தில்லைமாநகரினெல்லையைவிட்டுப் புத்தனே சீக்கிரத்திலோடிப்போ இது நாங்கள் பொறுக்கமாட்டோமென்று சொன்னார்களென்றவாறு ...(௨௰)

தார்வளவன்முன்னருயர்தர்க்கவுரைகொண்டே...... *
தீர்பரவுசைவநிலையன்றெனமொழிந்தே ..... ........ *
சீர்மருவுபுத்தனுயர்தெய்வமெனவிப்போ .......... *
தேர்பெறவுரைப்பதலதேதுவதிலென்றான் .... ...... *

எ-து. வெற்றிமாலையையணிந்த சோழன்முன்னே உயர்ந்ததர்க்கம்பேசி நீங்கள்போற்றப்பட்ட சைவமார்க்கம் நிலையன்றென்று சொல்லிச் சிறப்புப்பொருந்திய புத்தனே உயர்ந்த தெய்வமென்ற அழகுபொருந்த இப்போது சொல்வதல்லாமற் பேர்வதில்லையென்றானென்றவாறு ................................(௨௧)

புத்தனவனிவ்வுரைபுகன்றபினெவர்க்கு........ ...... *
மித்திறமுரைக்குவமெனக்கடிதகன்றே .......... . *
மெய்த்தவர்கள்வேதமுதலோர்பரிகலத்தோர் ..... *
தத்தமனைதோறுமிதுசாற்றினர்களன்றோர் .......... *

எ-து. புத்தகுருவானவன் இந்தவார்த்தையைச்சொன்னபின்பு யாவர்க்குமிதைச்சொல்லுவோமென்றுசீக்கிரத்திலேயுண்மையாகிய தபோதனர்களுக்கும் தில்லைமூவாயிரவர்களுக்கும் பரிகலத்தார்களுக்கும் அவரவர்கள் வீடுகள்தோறும்போய்ச் சொன்னார்களென்றவாறு ..................................(௨௨)

புண்ணுழையும்வேனிகர்புகன்றமொழிகேளா.......✻
வண்ணுறைகோயிலிடையாவருமடைந்தே.......✻
வண்ணமணிமண்டபமதெய்திவருபுத்த ..............✻
னெண்ணமதுகேட்குவமெனக்கடிதுசென்ருர்......✻

எ-து. புண்ணிலே வேல் நுழைந்ததுபோல இவர்களெல்லாஞ் சொன்னசொல்லைக்கேட்டுச் சபாநாயகரெழுந்தருளி யிருக்கின்றகோயிலிலே எல்லாரும்போய் அழகிய ரத்தினம்பதித்த மண்டபத்திலிருக்கின்ற புத்தகுருவினுடைய நினைப்பென்னவென்று கேட்போமென்று சீக்கிரத்திற் போனர்களென்றவாறு......(உ௩)

தெய்வநரரானவர்கள்செல்லவெதிர்வாரா.............✻
மெய்யுணர்வில்புத்தனைவெகுண்டுபலசொல்லா.... ✻
வுய்வதறியாதவொருநீபயமிலாதே.. ..... .... .......✻
யிவ்வகையிருந்தமதியாமையெதுவென்ருர்......... ✻

எ-து. தெய்வத்தன்மையை யுடைய தில்லைமூவாயிரவர் போக எதிர்கொண்டுவாராத உண்மைஞானமில்லாத புத்தனைக்கோபித்துப் பலபேச்சுகள்பேசிப் பிழைக்கும்வகையறியாதநீ இங்கே அஞ்சுதலில்லாமல் மதியாமலிருந்த தன்மை யென்னென்று கேட்டார்களென்றவாறு.......... ..... ....... ........................ (உச)

அங்கமறையாகமபுராணமவையாலே.......... .......✻
நுங்கடவுளேகடவுளென்றுநுவல்வீரோ ... ... .........✻
லெங்கடவுளேகடவுளென்றுநவில்வேன்யா..... .....✻
னிங்கெனெதிர்கூறுமெனவேயவனுரைத்தான்.......✻

எ-து. ஆறுசாஸ்திரமும்நான்குவேதமும் இருபத்தெட்டாகமமும் பதினெண்புராணமும் ஆகிய அவைகளாலே உங்களுடைய தெய்வமேதெய்வமென்று சொல்லுவீர்களானல் எங்கள்தெய்வமேதெய்வமென்றுயான்சொல்லுவேன் இங்கே என்னெதிரே சொல்லுமென்றுசொன்னன். புத்தகுருவென்றவாறு ......(உரு)

போற்றுமறையந்தணர்கள்புத்தனைவெகுண்டே.... ✻
தோற்றனையெனக்கலைஞர்சொல்லவுனைவெல்வோ...✻
மாற்றமினியுன்னுடனுரைக்குமதுமற்ருேர்..... .....✻
சேற்றினெதிர்கல்லெறிதல்செய்வதலதுண்டோ...✻

எ-து. யாவராலுந் துதிக்கப்பட்ட தில்லைமூவாயிரவர்கள் இதுசொன்ன புத்தகுருவைப்பார்த்துக் கோபித்து உன்னை வித்துவான்கள் தோற்றாயென்று சொல்லும்படி செயிப்போம்-இனி உன்னுடனேபேசுவது சேற்றின்மேற் கல்லெறிவதுபோலல்லாமல் வேறுண்டோவென்ருர்களென்றவாறு... .............(உசா)

நல்கிதருவாருமொருஞானிகுறைசெய்தா..........*
னின்றதன்வெகுளியைநிறுத்தல்கடனுமா ........*
லின்றிழிபுநின்னுடனிகட்சியெனினுஞ்சீ ..... ..... .*
ரொன்றுமிலையானவுனையோருநாயில்வெல்வோம்.*

எ-று. ஒருத்தருக்கு நன்மையைச்செய்யப்பட்ட பெரியோர்களும் ஒருநாயான துகுணத்தால் அங்கேநின்று அதன்கோபத்தை ஆற்றுவது முறைமையாகுமென்பார். ஆதலால் இன்று இழிவினையுடைய உன்னோடுபேசுகிறது நமக்குத்தகாதகாரியமானாலும் சிறப்பொன்றுமில்லாத வுன்னை யொருசொல்லிலே செயிப்போமென்றார்கள். தில்லைமூவாயிரவரென்றவாறு ..... ..... (௨௭)

மிக்கதிறன்மன்னவருமெய்யுணர்வினோருந் ..... ....*
தொக்கசபைமுன்னர்நமதர்க்கவுரைசொன்னாற் . ..*
றக்கதெனலாமிதுதகாததிதுவென்றா ..... ..... ...*
லெக்கலகமும்மிலையிதேகருமமாமால்....... ........ .*

எ-று. மிகுந்த திறலையுடைய அரசர்களும் மெய்யுணர்வினையுடைய பெரியோர்களும் கூடியிருக்கின்ற சபையெதிரே நம்முடைய தர்க்கவார்த்தையைச்சொன்னால் இதுதக்கது இதுதகாதென்று அவர்கள் சொல்லுவார்களானால் எந்தக்கலகமுமில்லை இதுவே காரியமாகுமென்றார் தில்லைமூவாயிரவரென்றவாறு.

உத்தரமுரைக்கவறியாதுபுலியூரர். ..... ..........*
புத்தனைமுனிந்தனர்புடைத்தனர்களென்றே . ...*
யித்தலமுரைத்துவிடுமென்றுவரைவன்பான். ... ...*
மெய்த்தவருரைத்தெழுதுமோலையைவிடுத்தார். .*

எ-று உத்தரஞ்சொல்லமாட்டாமல் தில்லைமூவாயிரவர் புத்தகுருவைக் கோபித்தார்கள் அடித்தார்களென்று இந்தவுலகஞ்சொல்லுமென்று சோழராசாவைவரும்படி ஒருஓலையெழுதிவிட்டார்கள் இவர்களெல்லாமென்றவாறு. .... ..... ........ (௨௯)

அந்தணர்பெருந்தவருங்கலையுணர்ந்தோர் ...... ..*
வந்தனுகுநாளைமணிமன்றுதொழுவென்றே.. ..... *
புந்திமகிழோலைபலபோக்கியபின்வெய்யோன்.... *
முந்துறவொளித்தனன்முளைத்தனனிராவோன் ......*

எ-து. பிராம்மணர்களும் பெரியதபோதனர்களும் அரியகலைக்கியானத்தில்வல்லவரும் நாளைச்சிதம்பரத்தைத் தெரிசிக்கவந்து சேருமென்று புத்திமகிழும்படியாகிய பலவோலைகளெழுதிவிட்டார்கள். அப்போதுசூரியன் மறைந்தான். சந்திரனுதயமானானென்றவாறு ......................................(௩௰)

[ வேறு. ]

துங்கவானென்னுமாதின்சுடர்நுதற்றிலதமென்னக்............... *
கங்குலாமடந்தைபார்க்குங்கவின்கொள்கண்ணாடியென்னச்.... *
சங்கவார்குழையாரிட்டதரளவெண்கவிகையென்னத்............ *
திங்கண்மாகடவுட்டோன்றச்சிறந்ததுஞாலமெல்லாம்........... *

எ-து. உயர்ந்த ஆகாசமாகிய மங்கையினுடைய ஒளிவிளங்குகின்ற நெற்றியிலணிந்த திலதப்பொட்டுப்போலும், இராவாகியமங்கையானவள் பார்க்கும் அழகுபொருந்திய கண்ணாடிபோலும், நெடியசங்கக் குழையையுடைய பரமசிவனுக்கிட்ட ஒருவெள்ளிய முத்துக்குடைபோலும், சந்திரன்றோன்ற உலகமெல்லாஞ் சிறப்புப்பெற்றதென்றவாறு......... .......... .... ... (௩௧)

இன்றொருதினமுந்தோராவிங்கிருநாளையாங்க ...................... *
ளூன்றனதுயர்ச்சியின்மைகாட்டுவோமுலகிற்கென்று............ *
நன்றிகொண்மனையிற்சென்றேயாருநலுணவுமாந்தி........... *
யன்றிருண்மேன்மையாளராருந்துயில்பயிலுங்காலை ...... ... . *

எ-து. இன்றொருபொழுதுமாத்திரம்புத்தனே இங்கிருப்பாய். யாங்கள் நாளை உன்னுடையதாழ்வை உலகத்திற்குக் காட்டுவோமென்று நன்மையைக்கொண்ட வீட்டிற்குப்போய் அறுசுவையும்நிறைந்த நல்லஉணவையுண்டு அன்றாாத்திரி மேன்மைபொருந்தியவர்களெல்லாம் நித்திரை செய்யும்போதென்றவாறு.

அழகுறமன்றிலாடுமையர்கைப்பிரம்புதாங்கித்.......... .. . ... *
தழைசடைமுடியுமேனிசாத்தியநீறுமாகி.. ....................... ...... *
விழைதருவடிவங்கொண்டுவெளிப்படக்கனவில்வெய்யோ...... *
னெழுவதன்முன்னரெய்தியாவர்க்குமிதுபுகன்றார் ..... ......... .. *

எ-து. அழகுபொருந்தபொன்னம்பலத்தில் திருத்தஞ்செய்கின்ற சபாநாயகரானவர்கையிற்பிரம்புகொண்டு தழைந்தசடைமுடியும் திருநீறணிந்ததிருமேனியும் உடையவராய் எல்லாரும் விரும்புகின்ற திருவடிவங்கொண்டு சூரிய உதயமாகுமுன்னே வந்துகனவிலே எல்லார்க்கும் இதுசொன்னாரென்றவாறு..... (௩௩)

வருந்துவதொழிமினம்மூரெல்லையில்வைகியன்பா. ........... . *
விருந்தனன்வாதவூரனிவ்வுரைகேட்டபோதிற்... ..... ....... .. *
பொருந்தியதர்க்கநூலாற்புத்தனைவெல்வானின்னே............ *
பருந்தவமுடையநீர்போயழைத்திடுமவனையென்றார்.. ......... *

எ-து. வருந்துவதை ஒழியுங்கள் நம்முடைய தில்லைமாநகரத்து எல்லையில் திருவாதவூரனாகிய மாணிக்கவாசகனிருக்கின்றான். இந்தச்செய்தியைக் கேட்டால் பொருந்திய தர்க்க சாஸ்திரத்தைக்கொண்டு புத்தனைவாதுசெய்துவெல்வான். ஆதலாலிப்பொ

மூதே அரியதவத்தையுடைய தில்லைமூவாயிரவரே நீங்கள்போய்
அவனையழையுங்களென்றார் சபாநாயகரென்றவாறு ...... .(௩௪)

கண்டனர்கனவுதன்னில்விழித்தனர்நகைமன்றி... ... ........ *
லொண்டொடிபாகனல்பாலுரைத்ததுகருத்திலாய்ந்து ........ *
கொண்டனர்மகிழ்ச்சிசெங்கைகுவித்தனர்முடியிற்கோயின்... *
மண்டபமிசையிலெல்லாமாந்தரும்வந்துதொக்கார் .... ... *

எ-து இப்படி சொற்பனத்திலே கண்டார்கள். பின்புவிழித்தார்கள் பொன்னம்பலத்திலே உமாதேவி பாகராகிய சபாநாயகர் அன்பினாலேசொல்லியதைக்கருத்திலாராய்ந்துமகிழ்ச்சிகொண்டார்கள். சிரசின் மேலே சிவந்தகையைக்குவித்தார்கள். கோயின்மண்டபத்திலே எல்லாரும்வந்து சேர்ந்தார்களென்றவாறு.

புல்லறிவுடையபுத்தன்புகன்றதற்கிரங்கிப்பின்னை ........... *
தொல்லையில்கருணையான்வந்திருங்கனவதனிலெய்திச். ........... *
சொலவியமொழியினாலேசோதிகொண்முகத்தராகி........... *
வல்லிருட்கிடைந்துவெய்யோன்வரவிரிகமலமொத்தார் .. ... *

எ-து. அற்பவறிவையுடைய புத்தனாருசொன்ன பேச்சுக்கு இரக்கமுற்றுப் பின்பு அளவில்லாத கிருபையினாலே கடவுள்கனவிலேவந்து சொல்லியசொல்லினாலே முகமலர்ச்சி யுடையவராய் இருளுக்கு ஒதுங்கிப் பின்பு சூரியன்வரவிரிந்த தாமரைமலரையொத்தார். தில்லைமூவாயிரவரென்றவாறு ...........(௩௫)

தெய்விகமானமன்றிற்றிருநடம்புரியுநாதன்........ ............ *
றைவருநீறுஞ்செய்யசடையுநற்பிரம்புமாக.......................... *
மைவிரிகங்குற்காலைவந்துநன்மகிழ்ச்சியெய்த .... ............ *
விவ்வகைமொழிந்தானென்றேயாவருங்கனவுசொன்னார் ....... *

எ-து. தெய்விகமான சபையிலே திருநடனஞ்செய்யுஞ்சபாநாயகர் விபூதிபூசிக்கொண்டு சிவந்தசடையையுநல்ல பிரம்பையுமுடையவராகக் கரியநிறத்தையுடைய இராத்திரியில்வந்தருளி நல்லமகிழ்ச்சியுடைய இப்படி அனுக்கிரகஞ்செய்தாரென்று யாவருந்தாங்கள்கண்டகனவைச்சொன்னார்களென்றவாறு.

அத்தனைமன்றுளாடுமையனைவியந்துகூறித்... ........ .. ........ *
தத்தமிலன்புகூர்ந்துதனித்துளவ்வருத்தநீங்கி.. .................. *
மெய்த்தவவாதவூரர்மேவிடத்தணுகுவோமென்.. ............ ..*
றுத்தமபன்னசாலையொல்லையிற்குறுகினார்கள்.............. ....... *

எ-து. அத்தனாகியும் சிற்சபையிலே நிருத்தஞ்செய்கின்ற ஐயனாகியும் இருக்கின்ற சபாநாயகரை அதிசயித்துச்சொல்லித் தங்கள் தங்களுக்குள்ளே அன்புமிகுந்து தனித்து மனவருத்தநீ

நீகி மெய்த்தவத்தையுடைய மாணிக்கவாசகர் இருக்கின்றவிடத்துக்குப் போவோமென்று உத்தமமாகிய பன்னசாலையிற் சீக்கிரத்திற்போனார்கள். தில்லைமூவாயிரவரொன்றவாறு ......... (ஈஅ)

கூடினர்பன்னசாலைகூரருட்குன்றையன்பா ....... ......... ....*
ருடினர்நயந்துகண்டார்நளினவாசனத்தினெய்தி ........... .*
மூடினரிருந்தயோகம்பெயர்ந்தனர்வியந்துமன்றி .......... *
லாடினருரைத்தவெல்லாமாங்கவர்க்கியம்பினார்கள் ........... *

எ - து. அப்படி போனவர்கள் பன்னசாலையிலிருக்கின்ற சிறந்த கிருபாமலையாகிய மாணிக்கவாசகரை அன்பினாலேதேடி நயப்புடனே கண்டார்கள். அப்போது அவர்பதுமாசனத்தின்மேலிருந்த யோகம்நீங்கினார். அதுகண்டு சபாநாயகர் கனவினிடத்திலேவந்து அநுக்கிரகஞ்செய்தவையெல்லாம அவருக்குச்சொன்னார்கள் தில்லைமூவாயிரவரொன்றவாறு ......... .... ....... (ஈகூ)

[ வேறு. ]

அந்தமொழியன்பினர்செவிப்புலனிலங்குதலுமன்றிறைபணிந்ததனுணரா, வந்தவருடன்கடிதுசென்றுதிருமன்றனைவணங்கியருள்பெற்றுமயலாஞ், சிந்தையரிருந்தமணிமண்டபமதெய்தியவர் தீயமுகநாடிலிடரோ. நந்துமெனவேயெழினிகொண்டுமறைவித்தெதிரிருந்தனர்நலங்கொளணைமேல்.

எ - து. அந்தத் திருவார்த்தையானது மாணிக்கவாசகர் செவியினிடத்திலே சேர்ந்த மாத்திரத்தில் முன்னமே கடவுள்சொல்லியிருப்பதை நினைத்து வந்ததில்லைமூவாயிரவருடனே சீக்கிரம்போய் அழகிய சபாநாயகரை வணங்கிக்கிருபையைப்பெற்றுப் பௌத்தர்களிருந்த மண்டபத்திற்குப்போய் அவர்கள் தீமையுள்ள முகத்தைப்பார்த்தால் துன்பமுண்டாகுமென்று திரைபோட்டுக்கொண்டுஆசனத்திலெழுந்தருளியிருந்தாரொன்றவாறு

மன்றுமறையந்தணர்புராணிகருங்கலைகள்வல்லவர்நலோர்களுடனே, செஞ்னிவளவனகடிதுவந்துதிருமன்றனெதிர்செய்றுதொழுதங்கணகலா, மின்றுமணிமண்டபமதெய்தியருளன்பனைவியந்தடிவணங்கியருகா, நன்னரணையின்புறமிருந்தனன்விரிந்தகலைநாணிறைவுகொண்டமதிபோல்.

எ - து. நிலைபெற்ற வேதப்பிராமணர்கள் பௌராணிகர் கலைஞானம்வல்லவர்கள் பெரியோர்களுடனே சோழராசா சீக்கிரத்தில்வந்து அழகியசபாநாயகரைத் தெரிசனம்பண்ணிக்கொண்டு அதைவிட்டுப் பிரகாசம்பொருந்திய ரத்தினமிட்டிழைத்த மண்டபத்திற்குவந்து கிருபைமிகுந்த மாணிக்கவாசகர் திருவடி

யைவணங்கி அவருக்குப் பக்கத்திலே பூரணசந்திரன்போல ஆச னத்திலிருந்தானென்றவாறு.... .............. ......... ...... (௬௧)

ஈழவாநாடனுமெழுந்தடிபணிந்துஇறை யிட்டகுறைநல் கியிறைவா, வாழிமிகவாழியென நின்றபொழுதங்கவனை மன்னர்பெருமானுமகிழா, வேழமிவைதலைவிலை யில்லையி மணிக்கென வியந்தருகிருத்திபெவருநன், சூழமவைகண்டு மூழியங்கயலிருந்தனர்கள்சூழ்ந்துயரிசொல்லுமயலோர்.

எ-து ஈழதேசத்து ராசனும் எழுந்து சோழராசாவைப் பணிந்து குறையாகவிருந்த இறையையுங்கொடுத்து அரசனே மிகவும் வாழக்கடவாயென்று துதித்தபோது அந்தஅரசனை அரசர் களரசனாகிய சோழராசாவும சந்தோஷித்து நீகொடுத்தயானை யுந்தவும் நலமதாயின. நீகொடுத்தரத்தினத்துக்கு விலையில்லை யென்று அதிசயித்துப் பக்கத்திலிருக்கச்சொல்லி எல்லாருஞ்சூ ழ்ந்திருக்குஞ் சபையினிடத்திலே பக்கத்திலிருந்தார்கள். ஆலோ சித்துச சாக்ஷி சொல்பவர்களென்றவாறு .... .......... (௬௨)

தில்லைநகரந்தணர்கள்போதனர் சிறந்தினிதிருந்துழி விரிந் தசிவநூல், வல்லவரிழிந்தகுணபுத்தனுடன்வாதுசெயுமன் றுசபைகாணவருவோர், தொல்லைமறைதந்தவன் முகுந்த ன்முனிவோரொழுவர்சூழிருநான்குதிசைமே,லெல்லையி லிருட்பவருருத்திரர்கள்விஞ்சையரிராப்பகலிலங்குகதிரோர்.

எ-து இவ்வீழவாயிரவர்களும் முனிவர்களும் சிறப்பாக விருந் தமாத்திரத்திலே மாணிக்கவாசகர் இழிவுபெற்றகுணத்தையுடை யபுத்தனுடனே வாதுசெய்யும் நிலைபெற்ற சபையைக்காண வ ருபவர்கள் யாவரென்றால், பிரமதேவன் மகாவிஷ்ணு சப்தமு னிவர்கள் அஷ்டதிக்குப்பாலர்கள் உருத்திரர்கள் விஞ்சையர்கள் இராப்பகலும்விளங்குகின்ற சந்திரசூரியர்களென்றவாறு (௬௩)

[ வேறு. ]

தன்பெருந்தானைசூழவிருந்ததண்பொன்னிநாடன்... .......... ※
றென்பெருந்துறைசூழ்நாடன்திருவடிவணங்கிநின்று........ ※
நின்பரஞ்சைவஞானநிலைமையைநிறுத்தல்பின்னை ..... .......... ※
யென்பரம்புத்தர்தம்மையிங்குயிர்செகுப்பதென்றான்........ ※

எ-து. தன்னுடைய சேனைகளெல்லாஞ் சூழும்படி யிருந்த சோழன் மாணிக்கவாசகர் திருவடிகளைவணங்கிநின்று சுவாமி உம்முடையபாரம் சிவஞானநிலைமையை உலகத்திலேநிறுத்துவ து. என்பாரம் புத்தரை உயிர்போக்குவதென்றானென்றவாறு.

வரவறிவ்வண்ணமயிற்கூறவந்தபொய்ப்புத்தரெல்லா..... ..........*
முரமயர்வெய்தவாதவூரருண்மகிழ்ச்சியெய்திக்... .... .........*
கவவுறாபகர்வாய்வந்தகாரணமுரைநீயெனக்............. ....*
கிளர்செவிநுழைவேல்போலக்கேட்டவனிதனைச்சொல்வான்...*

எ-து. இப்படிசோழராசன்சொல்ல-வந்திருக்கின்ற அபத்த ம்பேசும் புத்தர்களெல்லாம் மனவருத்தமடைய மாணிக்கவாச கர் மகிழ்ச்சியடைந்து, புத்தனைப்பார்த்துத் திருட்டுவார்த்தை சொல்லப்பட்டவனே நீவந்த காரணத்தைச் சொல்லென்றுகே ட்க வேலாயுதஞ் செவியிலே நுழைந்ததுபோல் அவ்வுரைகே ட்ட புத்தகுருவவ் இதைச்சொல்வானென்றவாறு.........(௪௫)

மன்னுமெய்க்கடவுளல்லான்மற்றிலைகடவுளென்றே.... .........*
யிந்நெடும்பதியிலெய்தியிம்பியிங்கெவருங்காணப் .... .......*
பொன்னினம்பலத்தேயெங்கள்புத்தனைவைத்தல்வேண்டி ....*
நென்னல்வந்திருந்தேனிங்குவேறிலைநினைத்ததென்றான்... .....*

எ-து. நிலைபெற்ற எங்கள்தெய்வமல்லாமல்வேறே தெய்வ மில்லையென்று இந்தவூரில்வந்துசொல்லி இங்கே எல்லாருங்கா ணப் பொன்னம்பலத்திலே எங்கள்புத்தனை வைக்கவிரும்பி நே ற்றேவந்திருக்கின்றேன். இதல்லாமல் யானினைத்தது வேறொன் றுமில்லையெனறான். புத்தகுருவென்றவாறு.................(௪௬)

என்றலும்வாதவூரரெம்மிறைவர்புன்முறுவலெய்தி................*
முன்றவமொன்றுமில்லாய்முயலிபமாவதுண்டோ..... ..........*
நன்றதுநிற்கவுன்றனற்பெருங்கடவுடானுஞ்.......... ...........*
சென்றவனடியிற்சேருஞ்செய்தியுங்கூறுகென்றார்.... ..... ....*

எ-து. இப்படியென்று சொல்லியவளவில் மாணிக்கவாசகர் புன்னகைகொண்டு முன்பிறப்பிலே தவமொன்றுமில்லாதவனே முயல்யானையாவதுண்டோ. நல்லது அதுநிற்க உன்னுடையந ல்ல பெரியதெய்வமும், ஆத்மாக்களவனடியிற் சேருஞ்செய்தி யுஞ்சொல்லென்று கேட்டாரென்றவாறு........................(௪௭)

அண்ணலாருரைத்தபோதிலங்கவன்வெகுட்சியெய்திக் ........*
கண்ணிலாதவற்குவெய்யோன்கதிரொளிகாட்டலாமோ........*
நண்ணலாவெங்களுத்தனற்புகழுரைக்கினன்று.......... ...........*
வெண்ணிலாயிரங்கள்வேண்டுமென்றுமினிதுபுகன்றான்.........*

எ-து. இப்படி மாணிக்கவாசகர் சொன்னவுரையில் அந்தப் பு த்தகுருவானவன் கோபமடைந்து கண்ணில்லாதவனுக்குச் சூரி யகிரணத்தினொளியைக் காட்டக்கூடுமோ. பொருந்துவதற்கரி தாகிய, எங்கள் புத்ததேவனுடைய நல்லகீர்த்தியைச் சொல்ல

வேண்டுமானால் நல்லநாவானவைகள் பல்லாயிரம்வேண்டுமென்று பின்பு இதுசொன்னுனென்றவாறு.......................(௬௮)

அறந்திகழ்பிடகநன்னூலோதியன்புடையனுகிப் ....................*
பிறங்குபல்யோனிதோறும்பிறந்துயிர்க்குறுதிசெய்து ........*
மறந்தருகோறலாதிநால்வகையொழித்துமேன்மை...... ......*
சிறந்துவபோதிநீழற்சேர்வனெம்மிறைவனுவான் ..............*

எ-து. தருமம்விளங்குகின்ற நல்லபிடகாகமஞ்சொல்லி அன்பையுடையவனுய்ப் பிரகாசிக்கின்ற அனேக யோனிகள்தோறும் பிறந்து ஆத்மகோடிகளுக்கு உறுதிசெய்து பொல்லாங்கைத்தருகின்ற கொலை களவு பொய் கள்ளுணல் என்னும் நாலுகுற்றங்களையும்நீங்கி மேன்மைசிறந்திருக்கின்ற அரசமாநிழலிலேசேர்ந்திருப்பான். எமதுகடவுளென்றவாறு................ .....(௬௯)

மேவியகருவிற்சேருமுருவம்வேதனைகுறிப்புப் ....................*
பாவனையுடன்விஞ்ஞானம்பஞ்சகந்தங்கள்கூடி..................*
யோவில்பல்லுணர்வுண்டாகியொழிவதுபிறவித்துன்ப.........*
மாவதுபொன்றக்கேடாயழிவதாமுத்தியென்றான் ............*

எ-து. பொருந்தியகருப்பத்திற்சேருகின்ற உருவம் வேதனை குறிப்புப் பாவனை விஞ்ஞானம் ஆகிய பஞ்சகந்தங்களுங்கூடி ஒழிவிலலாத அனேக அறிவுண்டாய் நீங்குவது பிறவித்துன்பமாம் அது நீங்ககேடாயழிவது மோக்ஷமென்றுனென்றவாறு.

வாதவூரண்ணலாரும்வன்புனற்பொன்னிநாடன் ..................*
தீதிலாமுகத்தினூடுசிறந்தருட்பார்வைநலகிப்..............*
பேதையாயறிமால்கொண்டுபித்துரைபகரும்புத்தற் ..........*
கேதியாமின்றுசொல்வதென்றுபினிதுபகன்றார்..................*

எ-து. அப்போது மாணிக்கவாசகரும் நீர்வளமிகுந்தகாவேரிசூழ்ந்தநாட்டுகிய சோழராசாவினது களங்கமற்றமுகத்தைப் பார்த்துக் கிருபாநோக்கஞ்செய்து அறியாமையினுல மயக்கங்கொண்டு பைத்தியவார்த்தைசொல்லும் புத்தனுக்கு இன்றயாமெய்சொல்வதென்று பின்பு இது சொன்னுரென்றயாறு.(௭௰)

தருமமுண்டென்றுநன்னூல்சாற்றினன்றலைவனென்பை.... ....*
மருவியவுணர்வுண்டாகிமறைந்திடுங்கணத்திலென்பை ..... ....*
பொருளுடனுரைநீதேடிப்புகலுமுனுணர்வுபோமு..... ........*
பெருருநின்னூல்சொல்வதெப்படிகூறல்வேண்டும ..............*

எ-து. தருமமுண்டென்று புத்தனைவன் பிடகநூல்சொன்னுனென்றாய். பொருந்திய அறிவுதோன்றி க்ஷணநேரத்தில் மறைந்துபோமென்றாய். சொல்லும்பொருளும் நீதேடிச்சொல்லு

முன்னே உணர்வுகெட்டாய் அஞ்ஞானத்தைத் தருகின்ற உன்னூ
லைசொல்வதனைப்படிசொல்லென்றார் மாணிக்கவாசகரென்றவாறு
ஆதாலலறநூலெனப்படுவனக்கி லயுயிர்கட்காகப் .... .......... .... *
பேதமாய்யோனிதோறும்பிறந்தனனிறைவனென்றாய் ........ *
தீதுசேரொருவர்மாலைத்தீர்க்கவந்தவர்கடாமும் .............. ...*
போதமால்கொள்ளிலம்மால்போவதங்குள்ளதாமோ ..... ......*
எ-து. ஆகையினாலே தருமசாஸ்திரமென்பது உனக்கில்லை.
ஆத்மாக்களுக்காக அனேகம் யோனிகள்தோறும் உன்கடவுள்
போய்ப் பிறந்தானென்றாய். குற்றம்பொருந்திய ஒருவர்மயக்
கத்தைத் தீர்க்கவந்தவர்களும் அதிகமயக்கத்தைக் கொண்டால்
அந்தமயக்கம்போகுமோவென்றார்மாணிக்கவாசகரென்றவாறு.
கொல்வதுகருதாவெங்கள்கோவெனவுரைத்தாய்முன்னம் ......*
பல்வகையோனிதோறும்பார்மிசைப்பிறக்குநாளில் .......... ..*
வெல்புலிநரியேயாகிவெம்பசியுற்றுன்மற்றிப் ...... ............. *
புல்லொடுதழையேயாதின்பானின்பெரும்போதிநாதன் ......... *
எ-து. எங்கள் கடவுள் கொல்லநினையானென்றுசொன்னாய்.
முன்னே அனேகயோனிகள்தோறும் பூமியின்மேற் பிறக்குங்
காலத்தில் வெல்லுகின்றபுலிகளாயும் நரிகளாயும் பிறக்கும்போ
து வெவ்விய பசிவந்தால் புல்லுந்தழையுந்தின்பானோ. அரசமர
நிழலிருக்கும் உன்னுடையகடவுளென்றவாறு ..... ........(௩௪)
கரவெனுமுன்றனூலிற்கந்தமைந்துடனேகூடி........ ...... ....*
யுருவமுமழியுமென்றாயுன்னிறைக்குருவமெங்கே ...... .........*
விரவியயோனிதோறுமுயிர்க்கருள்செய்யவேண்டி.. ............*
மருவொருவடிவங்கொண்டானென்பதேமதியிலாதாய் ....... . *
எ-து. பொய்யாகிய உன்னுகமத்தில் ஐந்துகந்தங்களுடனே
கூடத்தேகமுமழியுமென்று சொன்னாய்- அப்போது உன்கடவு
ளுக்கு உருவெங்கே. அனேகயோனிகளில் ஆத்மாக்களுக்கு அரு
ள்செயும்பொருட்டு ஒருவடிவங்கொண்டுவந்தானென்பதென்ன
புத்தியில்லாதவனேயென்றார். மாணிக்கவாசகரென்றவாறு.(௩௫).
காரணவுயிரிற்கூடுங்காரியவுருவின்றேனுன் ........................*
சீரணிபோதிநீழற்சேரிறைக்குருவமில்லை.......... ................*
பூரணஞானமில்லாய்பொன்றுகைமுத்தியென்னும்............*
பேருணர்வில்லாவுன்றன்பிடகநூல்யாவர்சொன்னார் .........,..*
எ-து. காரணமாகிய ஆத்மாவோடே கூடுகின்றகாரியமாகிய
வடிவில்லாதிருந்தால் உன்னுடைய சிறப்புப்பெற்ற அரசமாநி
ழலிலேயிருக்குந் தெய்வத்துக்கு வடிவில்லை. நிறைந்த அறிவில்

னாதவனே பஞ்சகந்தமும் கெடுவதுமுத்தியென்று சொல்லும் பேரறிவில்லாத உன்பிடகாகமத்தை யார்சொன்னாரென்றவாறு.

இருபதிற்றொருவராகவெண்ணுமுன்புத்தரெல்லாம் ............ *
வருவதுசிறந்ததாயர்வயிற்றினைக்கீறியென்னை .................. *
பரிவொடுசுமந்துபெற்றோருயிர்கெடப்பழுதுசெய்தே .......... *
யருநரகத்தில்வீழுமவர்களோகடவுளாவார் .. ............ ....... *

எ-து இருபதொருவரென்றெண்ணப்பட்ட உன்னுடைய புத்தர்களெல்லாம் பிறப்பது சிறப்புப்பெற்ற தாயர் வயிற்றைக் கீறியென்றுசொன்னாய் அப்படியேசுமந்துபெற்றதாய்மாருடைய உயிர்நாசத்தையடையக் குற்றஞ்செய்து அரியநரகத்தில் வீழ்வார்களோ தெய்வமாவார்களென்றவாறு ........ (௫எ)

கரவுடைப்பூதநான்கின்கலப்பினிற்பேதமல்லா . ..... .......... *
துருவினுக்குயிர்வேறில்லையென்பதைநின்பொய்ம்மைநூலில். . *
னிரவினிற்றுயிலுங்காலுன்முகத்துடனேகிப்போகு.. ........ *
மரவினைப்பூதபேதமறிந்ததோவறிவிலாதாய்.. .. .... ...... *

எ-து. கரவினையுடைய நான்குபூதத்தினுடைய கலப்பிலே பேதமேயல்லாமலேதோன்றிய வடிவுக்கு உயிரொன்று வேறில்லையென்பாய் நீசொல்லிய அபத்தசாஸ்திரத்தில் இராத்திரியிலே நித்திரைசெய்யும்போது உன்முகத்திலேயேகிப்போகும்சர்ப்பத்தையித்தப்பூதங்களறிந்ததோவறிவிலாதவனேயென்றவாறு.

உருவமுமுயிருங்கூடிப்புணர்வுனக்கில்லையிந்த ................ ... *
வுருவமிங்கிறந்தகாலையுயிர்கடிதகன்றுபோகு.......... ....... *
முருவமுமுயிருங்கூடிப்பிறக்குமேலதனாலன்ற.... .......... ... *
ஓருவமுமுயிரும்வேறாமென்றனையுன்றன்வாயால்............. *

எ-து உருவும் உயிரும் ஒன்றாய்க்கூடும் அறிவு உனக்கில்லையென்றாய் இந்தவுருவம் நீங்கினகாலத்தில் உயிரும் சீக்கிரத்தில்நீங்கிப்போகும். உருவமும் உயிரும் ஒன்றாய்க்கூடிப் பிறக்குமானால் அதனால் உன்னுடைய உருவும் உயிரும் வேறாகுமென்று உன்வாயாற்சொல்வாயென்றார்மாணிக்கவாசகரென்றவாறு.

வானமுமில்லைவானத்தோசையுமில்லைவான.... ............ .....*
மானதில்வழக்கதாமென்றாற்றுவையுன்றனூலிற்.............. *
கானிலம்புனறீநான்குங்கலப்பதற்கிடமதாகு........... .........*
நீறவிலோசைவானினிகழ்ந்துரைசெய்தியென்பாய்..............*

எ-து. ஆகாசமுமில்லை அதனிடத்தே சத்தமுமில்லை அந்த ஆகாசம் இல்வழக்காமென்றுசொன்னாய். உன்னாகமத்தில்பிருதுவி அப்பு தேயு வாயு நான்குபூதமும் இருப்பதற்கு இடம் ஆகா

சமல்லவோ. நீசொல்லப்பட்ட சொல்லினுரைசை ஆசாசத்திலுண்
டாகியதென்றுசொல்லுவாயென்றார்மாணிக்கவாசகரென்றவாறு

இடமிருந்திசைதானென்பதில்வழக்கென்றுநீயே ...... ...... *
வடநெடுந்திசையிற்போதிமரமெனவணக்கஞ்செய்வை . ..... *
புடவியிலறிவிலாரும்பித்தரும்பொய்ம்மையோரு .............*
மூடனிகழவையிற்கூறிலொக்குநீயுரைப்பவெல்லாம் .......... .*

எ - து. இடமிருந்த திசையென்றுசொல்வது இல்வழக்கென்
றுசொல்வாய் இப்படிசொல்லும் நீயே நெடிய வடதிசையிலே
அரசமரமிருக்கிறதென்று வணக்கஞ்செய்வாய் பூமியிலே அறி
வில்லாதவர்களும் பயித்தியங்கொண்டவர்களும் அபத்தம்பேசு
கிறவர்களும் இருக்கிறசபையிலே உன்சொல்லெல்லாம் பொருந்
துமென்றார் மாணிக்கவாசகரென்றவாறு.. ....................(௯௧)

மரமுயிரல்லவென்னைமன்னுமைம்பூதமான ........ .... ....... *
வுருவினர்போலநன்னீருணவிறுத்கிளைகொண்டோங்குஞ் .... *
சருகெழுமுணவின்றுகிலாதலாற்சனனபேதத் ....................*
தருவினையருத்தவெங்கோனுருயிர்க்கமைத்ததென்பாய் ..... • *

எ - து. மரங்கள் உயிரல்லவென்று சொல்லுவாய் நிலைபெற்ற
பஞ்சபூதத்தினு லுண்டாகிய தேகத்தை யுடையவர்கள்போல
நல்ல நீரை உண்கையினலே இலைகள்தளிர்த்து வளர்ந்திருக்கும்.
அநில்லாவிட்டால்சருகாகும். ஆகையினலே செனனபேதத்தில்
கன்மங்களைப் புசிப்பிக்க எமதுகடவுள் உயிர்களுக்கு அமைத்த
வடிவாகுமென்று சொல்வாயென்றவாறு ....... ............(௯௨)

வன்பெரும்பழுதுகோறன்மன்னியவூசித்தானேசெத்த ...........*
புன்புலைதின்னனன்றென்றுரைப்பைநின்பொய்ம்மைநூலிற் . *
றின்மையென்றுனக்குநல்லூனுடலுயிர்செகுத்தேயூட்டி .....*
யுன்பசிதணிப்பார்பாவமெய்துவதுனக்குநன்றே ..... ......... *

எ - து. ஒருஉயிரைக்கொல்வது பழுது பூமியிலே தானே செ
த்தமாமிசத்தைத்தின்பது நன்றென்றுசொல்வாய் உன்பொய்
யாகமத்திலே தின்னென்று உனக்குநல்லவுயிரைக்கொன்று மா
மிசத்தை உண்பித்து உன்பசியைத் தணிப்பார்க்குப் பாபம
டைவது உனக்குநல்லதோவென்றவாறு ...... . .............(௯௩)

காரண நிற்கவெம்முறுங்காரியங்கெடுதலின்றெடன் .............. .....*
றாரணம்பரவுமெங்கோனுகமம்புகல்வார்சொல்வர் ...... .. ..... *
பேரணங்குயிருஞ்சேரப்பொன்றுதன்முத்தியென்னும் ......*
பேரணக்குற்றநீயேபிறிவறியாதுசொல்வாய் ..... ...............*

எ - து - காரணமிருக்க எப்போதுங்காரியங்கெடுவதே மோ

...மைனது தேவர்கள்பரவுகின்ற எங்களுடைய கோனாகிய சிவனுடைய ஆகமஞ்சொல்லப்பட்டவர்கள் சொல்லுவார்கள் போதால் வருந்தும் உயிருங்கூடக்கெடுவதுமுத்தியென்கின்றபெரிய வருத்தங்கொண்டநீபேசுகிறதையறியாமற்சொல்வாயென்றவாறு

அழிந்திடினைந்துகந்தமுத்தியென்றுரைத்தாலைந்து.........*
மழிந்திடின்முத்திபெற்றாரானவினவும்போதி...............*
லழிந்திடுமைந்தினுண்டாமுணர்வெனவுரைக்கிலைந்து.........*
மழிந்தனவில்லையாமுத்தியாவதுமில்லையென்றார் ..................*

எ-து. பஞ்சகந்தமும் அழிந்தால் முத்தியென்றுசொன்னாய் பஞ்சகந்தமும் அழிந்தால் முத்திபெற்றவர்யாவரொன்று வினவும்போதில் அழிந்த அஞ்சிலும உண்டான அறிவென்று சொன்னால் அப்போது பஞ்சகந்தமும் அழியவுமில்லை மோக்ஷமுமில்லையாமென்றார். மாணிக்கவாசகரென்றவாறு....................(௬௫)

[ வேறு. ]

பொங்குபுகழ்மங்கியுளபுத்தனும்வெகுண்டே ......*
யெங்கடவுளேதுபெறுமுத்தியிலையென்றீ..........*
ருங்கடவுள்யாதுமதுமுத்தியெதுவென்னத்.........*
தங்குசிவஞானமுணர்சைவரிதுசொல்வார்.......... *

எ-து. மிகுந்தகீர்த்தியானதுமங்கியிருந்த புத்தனுங்கோபித்து எங்களுக்குத் தெய்வமுமில்லை மோக்ஷமுமில்லை யென்று சொன்னீர். உம்முடைய தெய்வமாவதேது. நீங்களுடையும்மோக்ஷமெது வென்றுகேட்கச் சிவஞானத்தை யறிந்த சைவராகிய மாணிக்கவாசகர் இதுசொல்லுவாரென்றவாறு..... ......... (௬௬)

ஆலமணிநீழலிலிருந்தறமுரைக்குங்.....................
கோலமதுகண்டுபலர்கும்பிடநடிப்பான்............ —
நீம்லணியுநீறனுமைகூறனருண்மேவுஞ்................—
சீலனவனற்பெருமைசெப்பவெளிதாமோ..... ...

எ-து. அழகிய கல்லாலின் நீழலிலிருந்து தருமஞ்சொல்லுகின்ற வடிவைக்கண்டு அனேகம்பேர் தெரிசிக்க நிருத்தஞ்செய்வான். விபூதிதரித்த திருமேனியையுடையவன் உமாதேவியையொருபாகத்திலுடையவன். கிருபையையுடையவன் இப்படிப்பட்ட கடவுளதுபெருமை சொல்வதற்குஎளிதோவென்றவாறு.

தில்லைமணிமன்றிலுறைதிங்களணியெங்கோ.........*
னெல்லையுளதோமொழியவென்றருள்புரிந்தே.......*
சொல்லுமளவிற்பலதொடுத்துமுயலாதே..........*
தில்லுமிதுவுமெனநீசனினுரைத்தான்...............*

எ-து. தில்லைமாநகரில் அழகிய பொன்னம்பலத்திலிருக்கின் சந்திரனையணிந்த எம்முடைய கடவுளானவர் ஒருமுடிவு உண்டானு

ரன்.

புப்பொருந்திய ஆரியதேசத்தார் வந்திருக்கின்றார்கள் பழுதற்ற
பாண்டியராசனே யாங்களது பார்த்தோமென்று வணங்கி அன்பி
னுடனே புவிகாவலனாகிய அரசன்முன்னே மேன்மைபொருந்திய
சிலதூதர்கள் சொன்னார்களென்றவாறு..............(உ௬)

ஏவல்செய்வார்களிலிங்கிவரோபரிவானவரென்றிகல்...........*
மேவியதூதரைவன்றிறன்மீனவர்கோனுமகிழ்ந்தபின்......*
வாயுநன்மாதுரகங்கொடுவாருமெனவுடனுந்தன...........*
தாவியுமாயரனன்புடையார்முகநாடிமொழிந்தனன்.........*

எ-று. நம்முடைய ஏவல்செய்பவருக்குள்ளே இவர்களே அன்பு
டையவர்களென்று அந்தவலிமைபொருந்திய தூதர்களைச் சௌரி
யத்தையுடைய பாண்டியராசன்மகிழ்ந்து பின்பு தாவுகின்ற நல்ல
குதிரையைக்கொண்டு வாருமென்று தனதுடைய வுயிருப்போன்ற
வராயுஞ் சிவனிடத்திலே அன்புள்ளவராயுமிருக்கின்ற வாதவூரர் மு
கத்தைப்பார்த்துச் சொன்னானென்றவாறு ..............(உஎ)

மீனவர்கோன்மொழியின்படிவேணியனேசரிசைந்தபின்....*
ஞானனசோதியுடன்புவியாளவன்வாசிகொளும்படி........*
மானவிமானமெனுந்திருவாழ்வுளகோயில்புகுந்தனன்......*
ஈனமிலாநெறிவந்தபொன்னேழுகோடிவழங்கினன்....*

எ-று. அப்படிசொன்ன பாண்டியராசனுத்தரவின்படி சிவனு
க்குநேசராகிய வாதவூரர் உடன்பட்டபின்பு மலர்ந்தமுகத்தையு
டையவனைப் பூவுலகையாளுகின்ற பாண்டியராசன் குதிரைகொ
ள்ளும்படிக்குத் தெய்வவிமானமென்று சொல்லத்தக்க செல்வம்
பொருந்திய அரமனைக்குள்ளேபோய் நல்வழியிற்சம்பாதித்த தன்
னுடைய திரவியத்திலே நாற்பத்தொன்பதுகோடிபொன் கொடு
த்தானென்றவாறு.............................. (உ௮)

விற்படைவெற்றிமடந்தையுமிக்கமலர்த்திருவும்பயின்...... *
மற்புயவெற்பினனங்கயல்வைத்தவலத்தன்வழங்கிய........ *
பொற்புமிகுந்ததனங்கொடுபொற்கவனப்பரிகொண்டிட.... *
நற்பயணத்தைமுயன்றனர்நக்கனைநெக்குணர்கின்றவர்...... *

எ-று. விற்படையுடனே விஜயமங்கையும் மேலாகியதாமரைம
லரிலிருக்கின்ற ஸ்ரீதேவியுந் தங்குகின்ற புஜத்தை யுடையவனும்
மீனக்கொடியை வலதுபக்கத்தி லுயர்த்தவனுமிருக்கின்ற பாண்
டியராசன்கொடுத்த அழகுமிகுந்ததிரவியத்தைக்கொண்டு வேகத்
தையுடைய சிறந்த குதிரையைக் கொள்ளுதற்கு நல்லவேளையில்

பிரயாணங்கொள்ள முயற்சிசெய்தார் பரமசிவனையே உருகிநினை
க்கிற மாணிக்கவாசகரென்றவாறு ... ............. (உகூ)

மெய்த்தவருற்றபெருந்துறைவித்தகனாக்குருவாகும்படி ..... *
யித்தகுநற்பொருள்கொண்டுநிரப்படியிற்செலுமென்றலி .... *
னத்தக்குபுத்திபொழிந்துயிரப்பதமுத்திபெறும்படி . . ... *
யுய்த்துஞ்சதுரியுடன்பொருவொத்தனனுத்தமபத்தவன் .... *

எ-று. உண்மையாகிய தவத்தினையுடையோர்களிருக்கின்ற தி
ருப்பெருந்துறையிலே ஞானதேசிகனாயடையும்படி இத்தகை
குதியுள்ள நல்லபொருளினை யெடுத்துக்கொண்டு இந்தப் பூமியிலே
போமென்று சொன்னபடியால் பழையபதிவினையெல்லாமழிந்து
உயிரானதுமேலாகிய மோக்ஷத்தைப்பெறும்படிச் செய்யநின்
ன்ற அருட்சத்திக்குச் சமானமாகும் உத்தமபத்தியுடையவனாயின
னென்றவாறு .... ..... ............... ...... (௩௰)

பற்றிலர்பெற்றசிவன்கழல்பற்றினனாக்கவென்டபி .. ..... *
முற்றமலக்கிறைவன்றனைபோக்கமைத்தருள்கொண்டு .... *
யிற்றுவசந்தனெடும்படைமிக்கபுலிக்கொடியன்படை .... *
மற்றுளமொற்றவர்தம்படைவர்க்கமுமுற்கொடெழுந்தன .... *

எ-று. ஒருபொருளினும் பற்றிலாதவராயும் பரமசிவனுடைய
திருவடியிற் பற்றுள்ளவராயும் இருக்கின்றவரா வன்னம் பாராட்
டிய தமிழ் விளங்கியிருந்த அந்தப் பாண்டியமன்னனானவன்
பாண்டியனுக்குச் சமானமாக மதிக்கத்தக்க திருவாதவூரராகிய
மாணிக்கவாசகனா விற்கொடியுடைத்த சேரமானுடைய பெரிய
படைசேனைகளும் மிகுந்த புலிக்கொடியுடைத்த சோழனுடைய
சேனைகளும் மற்றுமுள்ள அரசர்களுடையசேனைகளும் முற்பட்டு
புறப்பட்டனவென்றவாறு ............. ..... .. (௩௧)

உக்கிரநச்சுரகங்களிறுச்சிபணிப்பவசைந்தடி ... ....... *
வைக்குமுரத்தனவெங்கயமைக்கிரியொக்கமலிந்தன ....... *
பக்கமுமுற்பிறகுந்துடிபற்பலகொட்டவிநூறுவ ......... *
தக்கமனத்தில்விரைந்துளதத்துபரித்திரள்வந்தன. .... .. *

எ-று. உக்கிரமான விஷமுள்ள ஆதிசேஷனுடைய தலைக
ளும் அஷ்டமாநாகங்களினுடைய தலைகளும்நடுங்க அசைந்து அடி
பெயர்க்கின்ற வலிமையுடையனவாகிய வெவ்வியயானைகள் நீலகி
ரிகளுக்குச்சமானமாய் நெருங்கின.—இரண்டுபக்கமும் முன்னு
ம் பின்னும் அனேகந்துடிகளடிக்க மனோவேகத்தினுஞ் சீக்கிர
மாகச்செல்லுகின்றனவாகிய தகுதியுள்ள குதிரைக்கூட்டங்களவந்
துகூழ்ந்தனவென்றவாறு ....... ...............(௩௨)

[ வேறு. ]

கொங்கணர்கலிங்கரொடுகொங்கர்துளுநாடர் ...... *
சிங்களர்களொட்டியர்தெலுங்கரொடுசீனர் ...... *
தங்குதிறன்மாளவர்மலாடர்தமிலொன்று ........ *
பெங்கணுமிடைந்தவர்களெண்ணமுடிவில்லார் .... *

எ-து. கொங்கணதேசத்தார் கலிங்கதேசத்தார் கொங்குதேசத்தார் துளுவதேசத்தார் சிங்களதேசத்தார் ஒட்டியதேசத்தார் தெலுங்கதேசத்தார் சீனதேசத்தார் மாளவதேசத்தார் மலையாளதேசத்தார் இவர்களெல்லாம் தங்களுக்குள்ளே ஒன்றாகக்கூடி எண்ணுதற்கு அளவுபடாதவர்களாய் எவ்விடத்தும் நிறைந்தார்களென்றவாறு. ................................ (௬௩)

இத்திறமெழுந்தபடையெங்கணும்நெருங்கத் .... *
தத்துபரிமீதுளதமிழ்க்கவிஞர்சூழச் ........... *
சித்திரமடந்தையர்இரண்டருமருங்கு .......... *
மொய்த்துவரவீணைகுழன்முன்னரிசைகொள்ள .... *

எ-து. இந்தப்பிரகாரமெழுந்த சேனைகள் எவ்விடத்துநெருங்கத் தத்திநடக்கின்ற குதிரையின்மேலே தமிழ்க்கல்வியின் மிக்க புலவர்கள்சூழ்ந்துவர அழகிய மங்கையர்கள் கூட்டங்கொண்டு இரண்டுபக்கத்திலும் நெருங்கிவர வீணையும் புல்லாங்குழலும்முன்பாக இசைகள் செய்துகொண்டுவர வென்றவாறு. ...... (௬௪)

கட்டுமளகத்தினர்கனத்துளதனத்தார் ........... *
பட்டுடைமருங்கினர்பனிக்கவரிவீச ............ *
வட்டமதிவெண்குடைவயங்கமுரசெங்குந் ...... *
கொட்டவுயர்காளமொடுகோடுகள்கறங்க ........ *

எ-து. கட்டுகின்ற கூந்தலையுடையவரும் கனத்தஸ்தனபாரமுள்ளவரும் பட்டுவஸ்திரமணிந்த இடையையுடையவருமாகிய மங்கையர்கள் குளிர்ந்தகாற்றைத்தருகின்ற வெண்சாமரைகள் வீசவும் வெள்ளியசந்திரவட்டக் குடைகள்பிடிக்கவும் பேரிகைகள் எங்கும் அடிக்கவும் உயர்ந்த சின்னங்களோடு சங்கங்கள்தொனிக்கவுமென்றவாறு. ............................ (௬௫)

மிண்டுபுயபாடகர்வியந்துகரவாரங் ........... *
கொண்டுபுடைசூழ்மொழியசேர்குழலர்பாடத் .... *
தண்டரளமல்கியதவிச்சிவிகைமேல்கொண் ..... *
டெண்டிசையுமெட்டுபுகழ்கயற்கொடியிலங்க ..... *

எ-து. நெருங்கியுள்ள பாடகர்களதிசயித்து வாழ்த்திக்கொ

ண்டு பக்கத்திலேஎழுந்துலாவும் அழகுசேர்ந்த கூந்தலையுடைய மங்கையர்கள்பாடவும் குளிர்ச்சிபொருந்திய முத்தினாற்செய்த நெருங்கிய ஒப்பற்றசிவிகையின்மேலேறிக்கொண்டு எட்டுத்திக்கும் மிகவும்புகழ்கின்ற பீலிக்கொடி பிரகாசிக்கவுமென்றவாறு.(௧௬)

மங்கலமனைத்தினெடுமாளிகையகன்றே. .. ..... *
துங்கமணிபக்கமணிசொக்கரைவணங்கி........ *
யங்குவிடைபெற்றுமறையந்தணரின்மிக்கார்..... *
திங்கண்மரபிற்குரிசில்கோயிலுறைசென்றார். ....*

எ-து. இந்தப்பிரகாரம் இவைகளெல்லாந் தம்மைச்சூழும்படி சுபமானதினத்திலேநெடிய திருமாளிகைவிட்டுநீங்கி உயர்ச்சிபொருந்தியசங்குமணியணிந்த சொக்கநாதரைத்தொழுது அனுப்புவித்துக்கொண்டு வேதப்பிராமணரின்மிகுந்த மாணிக்கவாசகர் சந்திரவமிசத்திற்றோன்றிய பாண்டியராசனிருக்கும் அரமனைக்குப் போனரென்றவாறு. ........................ (௧௭)

சென்றுதமிழ்மாறனருள்பெற்றெழில்சிறக்கும் .. *
வென்றிவரைவன்புவியின்மேன்மையொடுசெல்வார். *
குன்றனையமாடமொடுகோபுரநெருங்கு........ *
நன்றிமதுரைப்பதியைநன்கொடுகடந்தார்...... *

எ-து. பாண்டியராசனுடைய அரமனைக்குப்போய் அவனுடைய கிருபையும்பெற்றுக்கொண்டு அழகுசிறந்த வெற்றியையுடைய சோழராசாவிருக்குஞ் சோழதேசத்துக்கு மேன்மையுடனேசெல்லுகின்ற மாணிக்கவாசகர் மலைக்குச்சமானமாகிய உப்பரிகைகளும் கோபுரங்களும் நெருங்குகின்ற நன்றியையுடைய மதுராபுரியை நன்மையோடு நீங்கினரென்றவாறு .......(௧௮)

நெடுங்குடதிசைக்கடனிறைந்தொலிசிறந்தே .... *
யுடைந்துதயநற்றிசையினுற்றுவருமாபோன் .... *
மடைந்தபதியுங்கடமும்வெற்புமிவையெல்லாங் .. *
கடந்துவழிசென்றுபலகாவதமகன்றார்..........*

எ-து. நெடிய மேற்றிசைக்கடலானது நிறைவுடனேசத்தமிகுந்து உடைந்துபோய்க்கீழ்த்திசையிற்புரண்டு வருகிறதுபோல நெருங்கியநகர்களும் காடுகளும் மலைகளுங்கடந்து வழிக்கொண்டு அனேககாதவழி நீங்கினர் மாணிக்கவாசகரென்றவாறு. (௧௯)

என்றுமுளரொன்றுமுடலின்னுநகர்தோறுஞ் .. *
சென்றவழிமாறியொருதெய்வவழிசெல்வார்......*
நன்றியுறமுத்திபெறநம்பர்தமதன்பா ....... *
லன்றுயர்பெருந்துறையடைந்தபடிசொல்வாம்.. *

எ-று. என்றுந் தோன்றித்தோன்றிக் காணப்பட்டுக்கொண்டுவருகிறதேகமென்னும் ஊர்கள்தோறுஞ்சென்று வழிதப்பி ஒருபுத்ய்வத்தன்மையாகிய வழியிலே செல்வாராகிய வாதவூரர் நன்மைபொருந்திய மோக்ஷத்தையடைய பரமசிவனுடைய அன்பினாலே அன்று உயர்ந்த திருப்பெருந்துறையிற் சேர்ந்தன்மையைச் சொல்லுவாமென்றவாறு ............................(௬௰)

---

மந்திரிச்சருக்கம் முற்றுப்பெற்றது. ஆ. ௬௭.



# திருப்பெருந்துறைச்சருக்கம்.

பழமறைமுழுதுணரந்தணர்பலர்தொழநடமுயல்கின்றவர் .. ✱
மறுவுமைகரமிசைகொண்டிடமருவியகவுரிமகிழ்ந்திட...... ✱
மழைதருமிரசிதபொங்கொளிவிடுமுயர்கயிலைவிலங்கலில்...... ✱
எழுமுதமணிமண்டபமதனிடையருள்கொடிருந்தனர்.... ✱

எ-று. பழமையாயுள்ள நான்குவேதங்களையும் ஓதியுணர்ந்த தில்லைமூவாயிரவர் வணங்கப் பொன்னம்பலத்திலே திருத்தஞ்செய்கின்ற கடவுளானவர் மழுவுமானுந் திருக்கரங்களிற்கொண்டு வாமபாகத்திலிருக்கும் உமாதேவி மகிழ்ச்சியடைய யாவரும் விரும்பும்படி உயர்ந்த வெள்ளிமயமாகிய கைலாசகிரியில் அழகிய ஒரு பொன்மண்டபத்திற் கிருபையுடனே எழுந்தருளி யிருந்தாரென்றவாறு ............................ (௧)

மதுமலர்காமிசைகொண்டுநின்வழிவழியடியவரொன்றுதம் ... ✱
முதுமறைதெரியமொழிந்தெதிர்முறைமுறைமுனிவர்வணங்கின
ரிதுபரனருளைவழங்குவதெனவரிபிரமரொழுந்துதம்....... ✱
பதநிலைபெறவருளென்றிருபரிபுரகழல்கள்பணிந்தனர்...... ✱

எ-று. தேனையுடைய மலர்களைக் கைகளிலேகொண்டு உமக்குவழிவழியாகிய அடிமையுடையோமென்று பழையவேதங்களையோதித் திருமுன்னேநின்று வரிசைவரிசையாகமுனிவர்கள் வணங்கினார்கள் இது கடவுளனுக்கிரகம் பண்ணுகிறகாலமென்று பிரமவிஷ்ணுக்களெழுந்திருந்து தங்கள்பதங்களை நிலைபெற அனுக்கிரகம் பண்ணுமென்று சிலம்பணிந்த இரண்டு திருவடித்தாமரைகளையும் பணிந்தார்களென்றவாறு ............................ (௨)

பரவருமணிகள்விளங்கியபணவரவணியாரணங்குமு ........... *
முருவியந்தரளவடந்திகழ்மதிநுதன்மலைமகளுக்கும் ...... *
கிரவியுமதியுமிருந்தெனவெதிரெதிரிலிருந்தகண்டன ..... *
ராகரசிவசிவவென்றுளமயிர்வுறவழுதனரன்பினர் .......... *

எ-து. சொலித்த நகிய ரத்நங்கள் விளங்கிய படத்தையுடைய சர்ப்பங்களைத் தரித்த பாதமிவனுடையவடிவமும் குளிர்ச்சிபொருந்திய முத்துமாலைகள் பிரகாசிக்கின்ற நெற்றியும் பிறைபோலும் நெற்றியையுடைய உமாதேவியினுடையவடிவமும் சூரியனுஞ் சந்திரனும் இசைந்து இருந்ததுபோல ஒன்றுக்கொன்று இசைந்து பிரகாசிப்பதைப் பார்த்தவர்களாய் அரகரசிவசிவவென்று மனங்கசிந்து அன்பினால் ஆனந்தக்கண்ணீர்விட்டழுகின்றார்கள் அன்பர்களென்றவாறு .................................. (௩)

அடியொழிமரமெனநொந்துபின்னவனியில்விழவெழுந்தகன் *
றுடனுறைபெருமைவழங்குவதுளதுகொலெனநினைநெஞ்சொடு *
மடலவிழ்கடிகமழ்தருமலர்பலமுறைமுறைசிந்தமுவா .... *
விடமிசைதனமகிழ்ந்திமையவரொருமிஞ்சினர் .... *

எ-து. சம்பாதித்த புண்ணியங்களெல்லாந் தெய்வலோகத்திலனுபவித்து அதுமுடிந்தபின்பு அடியற்றமரம்போல பூமிக்கு பூலோகத்திலேவந்து பிறக்கிறதொழிந்து உன்னுடைய சமீபத்திலிருக்கும் பெருமையை வழங்குவதுமுண்டோவென்று நினைக்கிற நெஞ்சுடனே இதழ்விரிந்த வாசனையுடைய பஞ்சதருவினுடையமலரை அனேகந்தரந்தூவி நினைக்கத்தக்கவிடம் இதுவென்று மகிழ்கின்ற தேவேந்திரனுந் தேவர்களும் வணங்கினார்களென்றவாறு .................................. (௪)

வேறு.

திண்டிறன்மிருஞ்சரிகையுமுழுகமும்பிரம்புங் ....... *
கொண்டருகுநின்றுகுருநந்தியருள்கூரப் ....... *
புண்டரிகமாதுபுவிமங்கையெழில்சிங்கா ........ *
வண்டர்மடவார்களுலகன்னையுறமன்ன ......... *

எ-து. மிகுந்த வலிமையுடைய உடைவாளும் பிரகாசிக்கும் பிரம்புங் கொண்டு அருகேநின்று குருவாகிய நந்திகேஸ்வரர் கிருபைமிகுந்திருக்கச் சீதேவியும் பூதேவியுங் குறைவில்லாத அழகையுடைய தெய்வமங்கையரும் உலகத்துக்குத் தாயாகிய உமாதேவியின் பக்கத்திலிருக்கவென்றவாறு ............... (௫)

துன்றுபலபூதகணநாதர்புடைசூழக் ............ *
கின்னரர்கள்கந்திருவர்கீதவிசைபாட............ *
மின்றுமுடிமன்னுநதிவீசுதிரைதன்னி .......... *
னொன்னவொளிர்சாமரைபெழுந்தழகுசெய்ய..... *

இ-ள். அனேக பூதகணநாதர்கள் நெருங்கி பக்கங்களிலே சூழ்ந்துநிற்கக் கின்னரர்களுங் கந்தருவர்களுங் கீதவிசைகள்பாடப் பரமசிவனுடைய மின்றுகின்ற முடியிலிருக்குங் கங்கையினுடைய வீசுகின்ற அலைபைப்போல ஓங்கி வெண்சாமரைகள் அழகு செய்யவென்றவாறு.......................... (௬)

இந்தவரமல்குசபையின்னல்கெடமன்னுந்...... *
தந்தைமணிமன்றிலுறைதாண்டவபதந்தோன்.... *
செந்தமிழின்வந்தசிவஞானவமுதுண்டா......... *
மந்தமிலருட்கடலையாண்டருளவேண்டி......... *

இ-ள். இப்படிப்பட்ட வரங்கள்மிகுந்த சபையினிடத்திலே துன்பங்களெல்லாம நீங்க நிலைபெற்றிருக்கின்ற எல்லாவுலகங்களுக்குந் தந்தையாயிருப்பவரும் அழகிய கனகசபையில் எழுந்தருளியிருந்து திருநடஞ்செய்கின்றவருமாகிய கடவுளானவர் செவ்விய தமிழிலே வந்த சிவஞான வமிர்தந்தோன்றுகின்ற அளவில்லாத கிருபைக்கடலாகிய மாணிக்கவாசகரை அடிமையாக்கிக்கொள்ள விரும்பியென்றவாறு.............................. (௭)

மைத்தகடல்மன்னவர்கடம்முருவில்வம்மென் .. *
றந்தவகையபத்தர்கணநாதரையழைத்தே ......... *
சித்திருதேசிகசிறந்தவடிவங்கொண் ............ *
டுத்தமநெடுங்கயிலையோங்கலநீங்கி......... *

இ-ள். கருங்கடல்சூழ்ந்த புவியிலே யிருக்கின்ற மனிதரைப் போலு வடிவங்கொண்டு நம்முடனே வாருங்களென்று அப்படிப்பட்ட அடியார்களையும் கணநாதர்களையும் அழைத்துக்கொண்டு மோக்ஷத்தைத்தருகின்ற சிறப்புப்பெற்ற ஆசாரிய மூர்த்தங்கொண்டு உத்தமமாகிய நெடியகைலாசமலையை நீங்கியென்றவாறு.(௮)

கொன்னெறுழிதபன்றுருவுகொண்டொருவர்தேடும் *
பொன்னடியெனுஞ்சலசமண்மிசைபொருந்தப் .. *
பன்னுமறைவல்லவர்பரிந்தழல்வ[illegible]பார்...... *
மன்னுமொருதெய்விகவரம்பதியில்வந்தார்..... *

இ-ள். பெருமைபொருந்திய ஒருபன்றி வடிவங்கொண்டு மகா விஷ்ணுதேடிய பொன்மயமாகிய திருவடித்தாமரைகளைப் பூமியி

லே பொருந்தவைத்துப் பண்ணுகின்ற வேதத்திலே வல்லவராயும் அன்புகொண்டு யாகஞ்செய்பவராயுமிருக்கின்ற பிராமணர்கள் நிலைபெற்றிருக்கும் ஒப்பற்ற தெய்வத்தன்மையுள்ள வளப்பத்தையுடைய திருப்பெருந்துறையிலேவந்து சேர்ந்தாரென்றவாறு.(௯)

வெம்பிறவிவேலைதனில்வீழ்பவர்களெல்லா .......... *
நம்புசிவநாமமெனுநற்புணைபிடித்தா ............. *
லெம்பரனருட்கரையிலேறுதுறையாமா ......... *
லம்புவிமொழிந்துரைபெருந்துறையதன்பேர் .... *

எ - து. வெப்பத்தையுடைய பிறவிசாகரத்தில் விழுந்துகிடப்பவர்களெல்லாம் பெரியோர்கள்நம்புகின்ற சிவநாமமென்னும் நல்ல தெப்பத்தைப் பிடித்தால் எமது கடவுளுடைய கிருபையாகிய மோக்ஷக்கரையில் ஏறுவதற்குத் துறையாதலாலே உலகமெல்லாம் திருப்பெருந்துறையென்று அந்தப்பதிக்குத் திருப்பெயர் சொல்லுமென்றவாறு ............ ............... (௰)

நனையில்பெருந்துறையெனும்பதியின்ஞாங்கர் .... *
கானமிகுபுன்னைவளர்கந்தமுளசந்தம் .......... *
வானுயர்சண்பகமாந்திகழ்நாரத்த ......... *
தேனினமூரன்றெழுசெருந்திகள்பொருந்தி .. ... *

எ - து. குற்றமற்ற திருப்பெருந்துறையென்னும் நகரத்தின் அருகெல்லாம் வாசமிகுந்த புன்னைமரங்களும் வளர்கின்ற மணமுள்ள சந்தனமரங்களும் ஆகாயத்தையளாவியுயர்ந்த சண்பகமரங்களும் பிரகாசிக்கின்ற நாரத்தைகளும் வண்டினங்கள் சத்தித்தெழுகின்ற செருந்திமரங்களும் பொருந்தியென்றவாறு .... (௰௧)

கோடுகவினும்பெரியகோங்குமிகவோங்கும் . .. *
பாடலநெடும்பலவுபைங்கமுகுதெங்கு ........ *
நீடளியினாத்தெழுநிரைக்குராவுகூத ..............*
மேடவிழ்செழுங்கவிரிலஞ்சிகண்மலிந்து ...... *

எ - து. அழகிய கொம்புகளையுடைய பெரிய கோங்கமரங்களும் மிகவுமுயர்ந்த பாதிரிமரங்களும் நெடிய பலாமரங்களும் பசிய கமுகமரங்களும் தென்னமரங்களும் நீடுகின்ற வண்டுகளினாற் தொடப்பெற்ற வரிசையாயிருக்கின்ற குராமரங்களும் மாமரங்களும் இதழவிழ்ந்த முருக்கமரங்களும் மகிழ்மரங்களும் நெருங்கியென்றவாறு ..... .......................... (௰௨)

மாக்கவின்பிகுங்கலவமஞ்ஞைசிறையன்னங் ....... *
கூககுரல்செயுங்கரியகோகிலநெருங்க ........... *

மீக்குலவுமந்தியினமூழ்ந்துதொறுமேவ்வே...... *
வார்க்குழியிறெங்கணுமடர்த்திசைதொடங்க.... *

இ-ள். மகத்தான அழகுமிகுந்த தோகையுடைய மயிலும் இறகையுடைய அன்னங்களும் கூவுதல்செய்கின்றகரியகுயில்களும் நெருங்க மரக்கிளைகளின்மேலே யிருக்கின்ற குரங்குக்கூட்டங்கள் எழும்பிக்குதிக்குந்தோறும் மேலுமேலுஞ் சத்திக்கின்றவண்டுகளெவ்விடத்தும்நெருங்கி இசைகள்பாடவென்றவாறு..(௰௩)

வீழ்ந்தநறவத்துளிவிழிப்புனலதாகச்.......... *
சூழ்ந்துமூரல்வண்டிலிசைதோத்திரமதாகத்.... *
தாழ்ந்துமலரேந்தியிறைதன்றிருமுனில்மேற.... *
வாழ்ந்துருகுமன்பரெனமன்னுமொருபூங்கா. *

இ-ள். தம்மிடத்திருந்து வீழப்பெற்ற தேன்றுளிகள் கண்ணீராக வண்டுகள்சூழ்ந்து பாடுகின்ற ஓசை தோத்திரமாக வணக்கத்துடனே மலரை யேந்திக்கொண்டு பரமசிவனுக்கெதிரேயிருந்து மனமுருகுகின்ற அன்பர்கள்போல நிலைபெற்றிருக்கும் ஒப்பற்ற பூஞ்சோலையென்றவாறு.......................... (௰௪)

வாய்த்தவளமிவ்வகைவயங்குமதனுப்ப....... *
மேனத்தருதவச்சினைகளெங்கணுநெருங்க........ *
மீத்துய்கழறக்குலைதழைத்துமிளிர்மெய்ம்மை.... *
பூத்தறிஞர்போன்மறழில்பொருந்துமொர்குருந்தம்

இ-ள். இப்படிப்பட்ட வளம்பொருந்திய அந்தச் சோலையினுள்ளே யாவராலுந் துறத்தற்கரியதவங்களென்னுங் கிளைகளானவை யெவ்விடத்தும்நெருங்க மேலாகிப் பிரகாசிக்கின்ற தருமமென்னுந் தளிர்கள்தழைத்து விளங்கிய உண்மையென்னும் மலர்களைப் பூத்து அறிவுடையவர்களைப்போல் அழகுபொருந்தியிருக்கு மொருகுருந்தவிருக்ஷமென்றவாறு.......................(௰௫)

ஆர்வமுடன்வந்தினமகப்படவளைக்கும்.......... *
பார்வையெனமாந்தர்படிவங்கொடுநடந்தா..... *
ரோர்வருகுருந்தமொடிலங்குமுயர்காவிற்....... *
சேர்குவமெனத்திருவுளத்தருள்சிறந்து.......... *

இ-ள். ஆசையுடனேவந்து நல்லினங்களை அகப்படும்படியாய் வளைக்கின்ற ஒருபார்வைமிருகம்போல மானுடவடிவங்கொண்டு வந்தகடவுளானவர் அழகிய குருந்தவிருக்ஷத்தோடும் பிரகாசிக்கின்ற உயர்ந்த சோலையினிடத்துச் சேர்வோமென்று திருவுளத்திற்கொண்டாரென்றவாறு.......................(௰௬)

வந்துதிகழ்தொண்டர்புடைசூழ்மகிழ்வெய்திக் .... *
கொந்தவர்மலர்ப்பொழிற்குருந்தடிபொருந்தி .... *
யந்தமுதலில்லவரருட்டமிழ்மறைப்பாச .... *
பந்தமறுமெல்லைதனைப்பார்த்தினிதிருந்தார் .... *

எ-து. அப்படியாகவந்து பிரகாசிக்கின்ற அடியார்கள் புடைசூழ மகிழ்ச்சியடைந்து கொத்துக்கொத்தாய் மலர்கள் நிறைந்த குருந்த விருக்ஷத்தின்கீழே எழுந்தருளியிருந்து அந்தமுமாதியுமில்லாத பரமசிவனுடைய தமிழ்வேதமுறைப்பாராகிய திருவாதவூரருடைய பாசம்நீங்குகின்ற காலம்பார்த்து இனிதாகவிருந்தாரென்றவாறு .................... (௰எ)

பொங்குபுனல்யாறுபலபோய்விழுகடற்போ .... *
லெங்குமுளநல்லுயிர்களெய்துமொளியாகுந் .... *
திங்களணிவேணியரிருப்பவடிசேருந் .......... *
துங்கமறையாளர்பலர்துன்றுநெறிசென்றார் .... *

எ-து. மிகுந்த சலத்தையுடைய அனேகநதிகள் போய் வீழ்கின்ற ஒருகடல்போல உலகமெங்குமுள்ள சுத்தாத்மாக்களடைகின்ற சோதியாகிய மூன்றாம்பிறையைத்தரித்த சடாபாரத்தையுடைய பரமசிவன் அவ்வாறிருக்க அவருடைய பாதங்களை யடைகின்ற உயர்ந்தவேதியராகிய திருவாதவூரர் பலபேரும் நெருங்கிச் செலுகின்ற அந்தமார்க்கமாகவே வந்தாரென்றவாறு... (௰அ)

[ வேறு. ]

செம்மனத்திருவாதவூர்ச்செல்வர்தமைப்புல்லாத .......... *
பொய்ம்மயக்கந்தரும்பாசம்போலமலர்ந்தனபூவை .... *
யெம்மயக்குமொழிப்பாருக்கினிப்பிறவியில்லையெனக் ..... *
கைம்மறிக்குமவர்போலமலர்ந்தனவங்குளகாந்தள் ......... *

எ-து. அந்தமார்க்கத்திலே-நல்லமனத்தையுடைய திருவாதவூரிற்பிறந்த மாணிக்கவாசகரை அடையாத பொய்யாகிய மயக்கத்தை விளைக்கின்ற பாசம்போல் [illegible]யாமரங்களில் கரியமலர்கள்மலர்ந்தன, எந்தமயக்கமும் நீக்குமிவருக்கு இனிமேற் பிறப்பில்லையென்று கையைமறித்துக் காட்டுமவர்போல அங்கிருக்குங்காந்தளெல்லாம் மலர்ந்தனவென்றவாறு .................... (௰௯)

விற்காட்டுங்கரத்துமதனம்பாகிவெம்பிறவி ................ *
யிற்காட்டியாவரையுமாகுலஞ்செய்வெம்பாவ ............ *
நிற்காட்டிலொழிப்பவரார்நீயருள்கவெமக்கென்று ......... *
பற்காட்டிநிற்பவர்போன்மலர்ந்தனமென்பனிமுல்லை ....... *

எ-து. கருப்புவில்லைக் காட்டிய கையையுடைய மன்மதனுக்கு

ஓரம்பாகி யாவரையும் வெப்பமிறப்பிலேவிட்டு வருத்தஞ்செய்கி
ற எங்கள்பாவத்தை உன்னைக்காட்டியும் நீக்குவார்கள் யாவர்
நீயெங்களுக் [illegible]கிரஞ் செய்யென்று பல்லைத் திறந்துகொண்டு
நிற்பவர்போலத் திருவாதவூரரெதிராக மலர்ந்துநின்றன மிருது
வாகிய குளிர்ந்த முல்லைகளென்றவாறு ............... (௨௰)

பொற்புடைய தமிழ்பாடும்புண்ணியரெப்பொருளினுமாஞ் .. *
சிற்பரனுண்மையில்விழிக்குந்திருநயனஞ்சேர்தலினு ...... *
மிற்பதாம்பிறவியிதுவென்றிரங்கிநீண்மரங்கள் ........... *
கற்பனையையுணர்ந்துமலர்க்கண்ணீர்கள்பொழிந்தனவால் .... *

எ-து. அரிய தமிழ்வேதம் பாடுகின்ற புண்ணியராகிய திரு
வாதவூரர் எப்பொருள்களிலும் கலந்துநிற்கும் அறிவுருவமாகி
ய பரமசிவன் உண்மையாக நோக்கிச்செய்யும் சக்ஷுதீக்ஷையை
ப்பெறுகிறபடியால் இந்தப்பிறப்பு உலகங்கொண்டாடத்தக்கதா
யிருப்பதென்று இரக்கமுற்று நெடியமரங்கள் அந்த மகிமையை
யறிந்து மலர்ந்து தேனாகிய கண்ணீர்கள் பொழிந்தனவென்றவா
று ......... ... ................. .. ......... (௨௧)

முன்னைவினைப்பெருங்காடுமூடுறவைம்புலவேடர் ........... *
துன்னியலைத்திடர்செய்யுந்துன்பவழிசெலலாம ......... .. *
வுன்னருநற்சிவஞானவுபதேசத்தமிழ்செய்வா ......... .. *
ரின்னவகைத்தாங்கானமெய்தியவற்றெதிர்நீங்கி ............ *

எ-து. பழவினையாகிய பெரியகாடு மூடத்தக்கதாக ஐம்புல
ன்களாகிய வேடர்கள நெருங்கி அலைத்து வருத்தஞ்செய்கின்ற து
ன்பவழியிலேபோகாமல் யாவராலும் நினைத்தற்கரிய சிவஞானவுப
தேசமான தமிழ்ப்பாடல் செய்யுந் திருவாதவூரர் இப்படிப்ப
ட்டதாயுள்ள காட்டுவழியைக் கடந்தென்றவாறு ..... (௨௨)

[ வேறு. ]

விரிந்தகடலுக்கிடைவிழுந்திடருழந்தே ......... *
திரிந்தவர்நயந்துகரைசென்றணுகுமாபோல் .... *
வருந்தவுழலவித்தவினையொத்தருள்வசத்தா .... *
லருந்தவர்பெருந்துறைமருங்கினிலணைந்தார் .... *

எ-து. விசாலமாயுள்ள சமுத்திரத்துக்கு நடுவேவிழுந்து துன்
பப்பட்டலைகின்றவர்கள் சந்தோஷித்துடனே கரையை யடைவ
துபோல தம்மை வருந்தும்படி இதுவரைக்கும் வருத்திய இருவி
னைகளும்ஒத்துத், திருவருளினாலே மாணிக்கவாசகர் திருப்பெருந்
துறைக்குச் சமீபத்திற் சேர்ந்தாரென்றவாறு ........... (௨௩)

இந்தவுலகஞ்சிவனிருக்குமுலகாகச் ............ *
சிந்தையருள் கொண்டுதிருவாசகமுரைப்பார் ...... *
பந்தமறவந்தமிழ்பாங்குறுகவென்றே .... .... *
வந்தனைபெருந் துறையின்மைமையுரைசெய்வாம்.. *

இ-ள். இந்தவுலகஞ் சிவலோகமாக மனதிலே திருவைமென்று தமிழ்வேதமாகிய திருவாசகமுரைக்கும் திருவாதவூரானவர் பாசநீங்க முடிவில்லாத பரத்தைபடையும்படி வந்துசேர்ந்த திருப்பெருந் துறையின் வளத்தைச்சொல்லுவாமென்றவாறு (௨௪)

மாத்தியர்குலத்தலைவர்வன்பிறவியெய்வந் ...... *
தீர்த்துலகவையாருள்செய்யுமிடமென்றே ...... *
தோத்திரமுரைத்துயிசைவந்துகசார்சித்தும் .. . *
பூத்திரளுயர்ந்தவகைபோன்றதலர்பொங்கர். .... *

இ-ள். ஆமாத்தியர்குலத் தலைவராகிய மாணிக்கவாசகருடைய வலிமைபொருந்திய பிறவித்துன்பத்தைத் தீர்த்து லோக நாயகராகிய பரமசிவன் அனுக்கிரகஞ்செய்யவந்த விடமென்று தோத்திரஞ்செய்து மேலேயிருந்து தேவதைகள் தூவுகின்ற புஷ்பத்திரள்களுதிர்ந்ததுபோலிருந்தது மலர்ந்திருக்கின்ற பூஞ்சோலையென்றவாறு ........................................ (௨௫)

[ வேறு. ]

பேறறிந்துதவமுயல்வோமென்றுபெருந் துறைநாடி ...... *
யாறியங்கியிளைக்குமவர்க்களிக்கவெதிர்நிற்பவர்போற் ...... *
கூறுமின்பநிழல்செய்துகுறையாதபத்திரபுட .... ........ *
னீறணிந்துசோறேந்திநின்றனதான்றியகைதை .......... *

இ-ள். பெறவேண்டியதின்னதென்று தெரிந்து அதைப்பெறத் தவஞ்செய்வோமென்று திருப்பெருந்துறையைக் குறித்து வழிநடந்திளைக்கும மாணிக்கவாசகர்க்குக் காண்டாடப்படுகிற இன்பமாகிய நிழலைச்செய்து குறைவில்லாத அம்புடனே நீறணிந்துதிருவமுதேந்திக்கொண்டு நிற்கின்றசிவனடியார்கள் போல மகரந்தப்பொடிகளைப் பூசிக்கொண்டு வெள்ளிய மலர்க்குடைகளையேந்திநின்றன நெருங்கிய தாழைகளென்றவாறு .... (௨௬)

நிலந்தனில்வந்தொருகுருந்த நிழலிலேயெவ்வுலகும் ........ *
கலந்தபொருளிருந்தபடிகண்டுமனங்களிப்பெய்தித் ...... *
துலங்கியதங்கண்ணீருஞ்சொரிந்துகரங்குவிதமுக ..... *
மலர்ந்தபெருந்தவர்போலமலர்ந்தனபுண்டரிகங்கள் ...... *

இ-ள். பூலோகத்திலேவந்து ஒருகுருந்த நிழலிலே எந்தவுலகத்திலுங்கலந்த வஸ்துவாகிய பரமசிவமெழுந்தருளியிருந்தபடி

கண்டு மனமகிழ்ச்சியடைந்து விளங்கப்பெற்ற தங்களுடைய கல்வியைச் சொரிந்து கைகுவித்து முகமலர்ச்சியடைந்த பெரிய தபோதனர்களைப்போல உள்ளே நெகிழ்ந்து தேனாகிய நீரைச் சொரிந்து அரும்பாகிய கைகளைக் குவித்து மலர்ந்தன தாமரைகளென்றவாறு.................................. (௨௭)

ஆன்றபயன்பிறர்நுகரவகத்தினிமையுளதாகத்.............. *
தோன்றியநல்லறிஞர்போற்றுவன்றிபெழுந்தனகன்னல் .... *
லேன்றகுலமாதர்தமதிறைவர்முகநாடிலவர் ............... *
வான்றகைபதிலேபோலவனைந்துவிளைந்தனசெந்நெல்...... *

எ-று. தமக்குள்ளே நிறைந்த பிரயோசனத்தை அன்னியர் புசிக்க உள்ளே யினிப்புளதாகத் தோன்றிய நல்ல அறிவாளர்கள் போல் இனிப்புள்ள ரசம்நிறைந்து நெருங்கி யெழுந்தன கரும்புகள், நல்லகுலத்திலேபிறந்த கற்புடையஸ்திரீகள்தங்கள் புருஷனைக்கண்டால .மேலாகிய அவர்கள் தன்மைபோல் செந்நெல்களெல்லாந் தலைவணங்கி விளைந்திருந்தனவென்றவாறு....(௨௮)

மூலைக்கிரியுங்கருங்கூந்தன்மொய்வனமுமரணாக்க்........... *
கொலைப்புருவவெஞ்சாபங்குனித்துவிழிக்கணையேவி........ *
நிலைப்பிறநற்பொருட்டேடிநினைந்துதவநெறியிற்.......... *
றலைப்படுவார்தமைவருத்துந்தன்மையினர்வயல்மாதர்...... *

எ-று. பள்ளஸ்திரீகள் தங்களுடைய ஸ்தனமாகிய மலைகளையுங் கரியகூந்தலாகிய நெருங்கிய காடுகளையும் கோட்டைகளாகக் கொண்டு கொல்லுகின்ற புருவங்களாகிய வெவ்விய வில்லுகளைவளைத்துக் கண்களாகிய பாணங்களைத் தொடுத்து அழிவற்ற நல்ல பொருளைத் தேடி நினைந்து தபோ மார்க்கத்திலே செல்பவராகிய மாணிக்கவாசகரை வருத்துகின்ற குணத்தை யுடையவராகுமென்றவாறு.................................. (௨௯)

[ வேறு. ]

இன்னவகைமன்னிவளர்காவுமெழின்மேவுங்...... *
கன்னல்வயலுந்திகழுதல்கண்டுவகைகொண்டே.. *
யின்னுடலம்பெறவினிப்புவியில்வாரா......... *
மன்னவர்பெருந்துறைவளம்பதியில்வந்தார் .... *

எ-று. இந்தப்பிரகார நிலைபெற்று வளர்கின்ற சோலையும் அழகுபொருந்திய கரும்பங்கழனியும் பிரகாசித்திருத்தலைப் பார்த்து மகிழ்ச்சியடைந்து துன்பத்துக்கிடமாகிய தேகத்தைப் பெறுதற்கு இனிப் பூமியிலேவாராத மாணிக்கவாசகர் வளங்களையுடைய திருப்பெருந்துறையில்வந்து சேர்ந்தாரென்றவாறு.... (௩௰)

மாதவர்மிகும்பதிபுகுந் ததின்மருங்கே............*
நாதனுறைதண்டலையினங்குபினதொண்ட.......*
ரோதுறுசிவாகமமொலிப்பொலிவுகேளா........*
யாதிஃதறிந் துரையிலேவலர்களென்றார்..........*

எ-து. மகத்தாகிய தபோதனர் நிறைந்துள்ள திருப்பெருந்துறையிலே புகுந்தவிடத்திலே அருகே குருமூர்த்தமாய்ப்பரமசிவமெழுந்தருளி யிருக்குஞ் சோலையினிடத்திலே நன்மைமிகுந்த அடியார்கள் படிக்கின்ற சிவாகமங்களினுடைய சத்தத்தைக் கேட்டு இது என்னசத்தம் தெரிந்துவந்து சொல்லுங்கள் தூதர்களேயென்றார் மாணிக்கவாசகரென்றவாறு.............. (௬௧)

சென்றவர்கள்வந் துசிவபத்தர்பலர்சூழக்..........*
கொன்றைமுடிவைத்தகுணமேருவையொப்பார் .*
நின்றதொர்குருந்தமரநீழலிலிருந்தா..........*
ரொன்றுமகிழ்ந்தனரினிப்பிறவியில்லார்........*

எ-து. அப்படிசொல்லக்கேட்டுப் போய்ப்பார்த்த தூதர்கள் வந்து அனேகம் அடியார்கள் தம்மைச் சூழ்ந்திருக்கச் சடாமுடியிலே கொன்றைமாலைதரித்த குணமலையாகிய பரமசிவனுக்கு ஒப்பான ஒருபெரியவர் அங்கேயிருக்கி[illegible] ஒரு குருந்தமர நிழலிடத்தே இருக்கின்றாரென்றதும் மகிழ்ச்சியடைந்தார் இனிப் பிறவியில்லாராகிய மாணிக்கவாசகரென்றவாறு....... (௬௨)

ஏவலருரைத்தமொழிகேட்டரனையெய்து.........*
மாவலொடுகாவினையணைந்தகமலர்ந்து .........*
மேவியமணிச்சிவிகைவிட்டிழிந்தே.........*
தேவர்பரவும்பரமர்தெய்வசபைகண்டார்.........*

எ-து. தூதர்களசொன்னசொல்லைக்கேட்டுக்குருமூர்த்தமாயெழுந்தருளியிருக்கின்ற பரமசிவனைச் சேரவேண்டுமென்கிற ஆவலுடனே அந்தச்சோலையிற்சேர்ந்து மனமலர்ச்சியுடனே தாமேறிவந்த ரத்நச்சிவிகையினின்றும இனிமையுடனேயிழிந்து தேவர்களால்வணங்கப்பட்ட மேலாகிய தெய்வசபையைக்கண்டார் திருவாதவூரரென்றவாறு........................ (௬௩)

[வேறு.]

அண்டமெலாங்கடந்தபொருள்பகருநாவி னரவுரைப்பார்
தெளிந்தயர்வாராய்வாராகித், தொண்டுபடுமடியார்களூற்
றொருபான்மேற்றோன்றாற்றோன்பானென்னுந் தொகு
திருப, வெண்டொடியங்கினனிருப்ப விருப்பாலெய்தியு
டனுலாத்துச்சிவஞானமுணர்வாரன்பு, மண்டியநெஞ்சினி

ல்வணங்கி வணங்கார்போல மந்திரியார் மேன்மையுடன்வந்
துநின்றார் ........................................*

எ-று. அண்டங்களெல்லாங் கடந்தபொருளாகிய கடவுளாற்சொல்லப்பட்ட வேதாகமங்களுடைய அர்த்தங்களைச் சொல்லுவாரும் அவைகளைத்தெளிந்து ஆராமைப்படுவாரும் ஆராய்வாருமாகிய அடிமைப்படுமடியார்கள் தொளாயிரத்துத்தொண்ணூற்றொன்பது பேர்கள் சூழும்படி உமாதேவியை யொருபாகத்திலேயுடைய பரமசிவனெழுந்தருளியிருக்க விருப்பத்துடனே அவ்விடத்திலடைந்து அன்புபெருகிய மனத்தால்வணங்கிக் காயத்தால் வணங்காதவர்போல மேன்மையுடனே வந்துநின்றார் உடனே சிவஞானத்தைப்பெறுவாராகிய மாணிக்கவாசகரென்றவாறு.... (கூச)

உருத்திரநற்றிருமணியையிலங்குகாதிலொண்சிரத்திற்கந்தரத்
திலொளிர்நாண்மார்பிற், கரத்திலணிந்திலங்குதிருமுண்ட
மயிகண்கரந்தநன்னுதன்மேற்கவினச்சாத்தித், திருத்திக
ழும் மேவரியகுரம்பொன்மேனிதிகழ்வதுகண்டகமகிழ்வார்
செந்தகையீர், பொருத்தமுறும்புத்தகமேதையாவென்னப்
பொய்ம்மையிலாச் சிவஞானபோதமென்றார் .........*

எ-று. அழகிய ருத்[illegible]ஷத்தை-விளங்குகின்ற செவியிலும் ஒளியையுடைய சிரசிலும் கண்டத்திலும் விளங்குகின்ற மார்பிலும் கையிலுமணிந்து ஒளியையுடைய விபூதியை திரிபுண்டரமாக அக்கினிக்கண்ணை யொளித்த நல்ல நெற்றியிலே அழகுபெறத்தரித்து சிறப்புப்பொருந்திய மேன்மையுடைய அழகிய பொன்னையொத்த திருமேனி பிரகாசிப்பதைக்கண்டு மனமகிழ்ச்சியுறுவாராகிய மாணிக்கவாசகராமவர் அவரைநோக்கி ஐயா சிவந்த திருக்கரத்திலே பொருந்தியிருக்கின்ற புத்தகம் என்னவென்றுகேட்க அப்பெரியவர் மெய்ம்மையான சிவஞானபோதமென் றருளிச்செய்தாரென்றவாறு.................................. (கூரு)

என்றலுமே சிவமேதுஞானமேதிங் கிலங்கியிடும்போதமே
தியம்புவீரோ, லன்றவடநீழலிலிருந்தார்நீரோவடியே
னுமுமக்கடிமையாமேயென்ன, நின்றசிவமொன்றதனைத்
தேர்தல்ஞான நிகழ்போதந்தேர்ந்ததனைத் தெளிதலாமெ
ய், ஒன்றியநற்பொருள்வினவிநிற்பார்சிந்தையுருகும்வ
கையுறாவிசய்தாருவமையில்லார் ......................*

எ-று. சிவஞானபோதமென்று அவர் அருளிச்செய்தவுடனே சிவமாவதென்ன ஞானமாவதென்ன விளங்குகின்ற போதமாவதென்ன இவை சொல்லுவீரோயானால் அந்நாளில் கல்லாலவிருக்குந்தி

க்கிழே பெருந்தருளியிருந்தவர் நீரே அடியேனும் உமக்கடிமை யாவேனென்றுசொல்லச், சிவமென்றது ஒப்பற்றமெய்ப்பொருள். ஞானமென்றது அதனைத்தெரிதல். போதமென்றது தெரிந்ததைத் தெளிதலாமென்று பொருந்திய இந்த மௌனபொருளை விளங்கின்ற திருவாதவூராருடைய மனமுருகும்படி அருளிச் செய்தார் தமக்குநிகரில்லாத குருமூர்த்தமாய்வந்த பரமசிவனென்றவாறு.......................... (௬௬)

[வேறு.]

உத்தமரின்னவாறிங்குணர்த்தவுமுவந்தாலாஞ்.............. *
சத்திநிபாதமெய்துந்தன்மையராதலாலே.............. *
யத்திருமல்குநாடுமையரிங்கென்னையாளர.............. *
வித்திருமேனிகொண்டாரென்பதுமனத்திலெண்ணி....... *

எ-து. உத்தமராகிய பரமசிவனுடையவர் இந்தப்பிரகாரஞ் சொன்னமாத்திரத்திலே மகிழ்ச்சியடைந்து இருவினையொப்பு மலபரிபாகமடைந்து அதிதீவிர பக்குவமடையுந் தன்மைபொருந்திய வராகையினாலே அந்தப் பொன்னம்பலத்திலே திருக்கூத்தாடுகின்ற ஐயரே இங்கே யென்னை யாளும்பொருட்டுக் குருவடிவமாகிய இந்தத் திருமேனி தாங்கிக்கொண்டு வந்தாரென்று மனத்திலே நினைத்தார் மாணிக்கவாசகரென்றவாறு............. (௬எ)

மின்னினுநிலைமையில்லாவிழுப்பொருளியாவும்வேண்டே...... *
னுன்னடியிணைத்துதாயேனுறபவமொழித்தல்வேண்டு..... *
மென்னையின்றடிமைகொள்வாயெம்முயிர்க்கிறைவாவென்று.. *
முன்னுறவணங்கிநின்றார்முகமெலாங்கண்ணீர்வார......... *

எ-து. மின்னலைப்போல நிலையில்லாத துக்கத்தைத் தருகின்ற பொருள்களியாவையும் விரும்பமாட்டேன் உன்னுடைய திருவடியைச் சேர்ந்து அடியேன்பொருந்திய ஜனனதுக்கத்தை நீக்கல் வேண்டும். என்னை யின்றைக்கு அடிமையாகக்கொள்வாய் எங்களுடைய உயிருக்கு இறைவனே யென்று முன்னேபொருந்த வணங்கிநின்றார் முகமெலாம் கண்ணீரொழுகவென்றவாறு.... (௬அ)

இவ்வகைபுகன்றுமுன்னோன்முன்னுறவிரங்கிநிற்பத்......... *
திவ்வியாதரமேயானசெய்தியொன்றநாடி............. *
யவ்வடியவரின்மிக்காரொருவரிவ்வடிமைதன்னை.......... *
வெவ்வினையகற்றியாளவேணுமென்றிறைஞ்சிநின்றார்...... *

எ-து. மாணிக்கவாசகரானவர் இந்தப்பிரகாரஞ் சொல்லிக் குருவடிவங் கொண்டுவந்தமுன்னோனாகிய பரமசிவனுடைய திருமுன்னே நிரம்பிநிற்ப இவர்மோக்ஷவிருப்பங்கொண்ட அதிதீவிரப

க்குவத்தை யுடையவரென்று அறிந்து அந்த அடியார்களின்மிக்க ஒருவரெழுந்து இவ்வடியாருடைய பொல்லாத வினைகளைநீக்கி ர க்ஷிக்க வேண்டுமென்று வணங்கிநின்றாரென்றவாறு .....(கக)

கருப்புகுதினையார்தம்மேற்கண்ணருள்செய்துநெஞ்சிற் ..... *
பாரப்பறமிறித்தல்வேண்டிமெடுத்தபொற்பாதங்கொண்டு.... *
இருப்புனைமறையோர்போற்றத்தில்லையம்பலத்தேநின்ற .... *
வருட்பரானந்தவாரியாதவினைதற்கிசைந்தார்..... ...... *

எ-று. இனியொருகருப்பத்திலே சென்றுபிறத்தலை நினையாத வராமெயதிருவாதவூராரிடத்திலே கிருபைவைத்து அவர்மனத்தின்வி ரியுநீங்க மிதித்தவேண்டி தூக்கிய பொன்மயமான திருவடியை க்கொண்டு செல்வமிகுந்த தில்லைமூவாயிரவர் போற்றச் சிதம்பர த்திலே கனகசபையிலே நடனஞ்செய்கின்ற ஆனந்தமாகிய திரு வைக்கடலாகையினாலே அவர்வேண்டுகோளுக் கிசைந்தாரென்ற வாறு .................................... ......(சம)

அந்தருபகலோன்முன்னரலர்செயுமம்புசாத........... *
மொத்தவர்நம்மைநாடியுன்னையின்றடிமைகொள்ள......... *
விந்தலத்தணைந்தோநீமுன்னியற்றியதவத்தினாலே........ *
சிந்தைமிரங்கல்வேண்டாமெனத்திருவாய்மலர்ந்தார்........ *

எ-று. ஆயிரங்கிரணங்களைப்பரப்பிக்கொண்டுவருகின்ற சூரிய ன்முன்னே விகசிக்கின்ற தாமரைமலர்போன்ற திருவாதவூரரை நா டிப்பார்த்து உன்னைஅடிமைகொள்ளும் பொருட்டு நீ முன்சனன த்திலே செய்த தபோபலத்தினாலே இந்தத்திருப்பெருந் துறைக் கு வந்தோம் மனஞ் சஞ்சலப்பட்டு இரங்குதல்வேண்டா மென் று திருவாய்மலர்ந்தருளினர் குருசுவாமியென்றவாறு .... (சக)

வந்தநான்வறுமையுற்றேன்மாற்றெனஇலம்பாடென்று .... *
சிந்தையாகுலமுற்றுன்கைச்செழும்பொருளீதல்செய்வார்க்.....*
கிந்தநாளிக்கவேண்டுமெனவிதியின்மையாலே....... .. *
யுந்தநாளிற்நாளாகவடிமைகொண்டருளவெண்ணி........ *

எ- று. நான்மிகவும் வறுமை யடைந்தேன் அதனைத்தீர்க்கவே ண்டுமென்று மனோதுக்க மடைந்துவந்த வொருவன்கையிலேநல் ல திரவியங் கொடுப்பவர்க்கு இந்தநாள் கொடுத்தற்குரியநாளெ ன்றுபார்க்கும் விதியில்லாமையாலே அந்தநன்னளே இந்தநாளா க அடிமைகொண்டருள வெண்ணி யென்றவாறு.. .....(சஉ)

அந்தகுதொண்டர்க்கெல்லாமதிபராமவரைநோக்கி...... *
யித்தவமுடையோனைப்பயிடரொழித்தாள்வதிந்நாள் .... *

விச்சகவிதற்குவேண்டுங்கருமநீவிளைவிற்செய்கென் ............ *
றுத்தமவடிவங்காட்டுமுண்மையாருளைத்தல்செய்தார் ..... ...... *

ஏ-து. அப்படிப்பட்ட அடியவர்களுக்கெல்லாம் பெரியவராகிய ஒருவரைப்பார்த்து இந்தத்தவமுடையவனடைந்த அம்பத்தைத் தீர்கி இவனை அடிமைகொண்டோம் இந்நாளாகும் ஆகையினாலே சதுராப்பாட்டையுடையவனே இதற்குவேண்டிய காரியங்களை நீ சேர்த்துச் செய்வாயாகவென்று உத்தமவடிவங்கொண்ட உண்மையான குருவானவரருளிச்செய்தருளினவாறு... (சங)

முன்னவன்புகன்றவாறுமுயல்குலமெய்ந்நேயத்த ... ... ... *
மன்னுறுதவத்தின்மிக்கார்வகைமலர்த்தெரியலாலும் ......... *
பொன்னிடைமுத்தழுத்தமைப்பினைத்தபல்பட்டினாலும் ....... *
மந்தெறுமங்காவிற்றுடங்கானபூங்கோயில்செய்தே .............. *

ஏ-து. பரமசிவன் அருளிச்செய்தபிரகாரமுயற்சியுடைப்போமென்றுநிலைபெற்றதவத்தமேலமைந்த அந்தக்கணநாதர் விதம்விதமாகிய பூமாலைகளாலும் பொன்னையிடையிலேயழுத்தி முத்துமணிகளாலவிளிம்புசெய்த பலவகைப்பட்டினாலும் அந்தமநோகரச்சோலையினிடத்து அழகிய கோயில்செய்தெனறவாறு..... (சச)

செய்ததற்கோயிலுண்சிறந்தவாசனமுஞ்சேர்த்து ........ *
மெய்த்தகுதொண்டர்க்கெல்லாமிக்கவுறைவிடஞ்சார்ந்து ........ *
கைதவமுடையார்நெஞ்சிற்கனவிலுங்காணநில்லா .......... *
மைதருசோதிதாய்க்கோட்டஞ்சமைந்ததாவாய்ப்பவென்றார். *

ஏ-து. அப்படிசெய்த நல்லகோயிலினிடத்திலே சிறந்த ஒரு ஆசனமிட்டு உண்மையாகிய அடியார்களுக்கெல்லாமிருந்த அந்தக்கணநாதர் குருசுவாமியினிடத்திற்சென்று வஞ்சனையுடையவர்கள் நெஞ்சிலேயென்றனவிலுங்காணப்பெறாத நீலகண்டனே கோயிலவாய்ப்பாகச் சமைந்ததென்றுசொல்லுறவாறு.......... (சரு)

ஆயிடைக்குடபால்வெற்பிலாதவன்காரத்துறாலம் .............. *
பாயிருள்பரந்தபின்புகடிகையோர்பதினைந்தாகி .............. *
மேயநல்லுயிர்களெல்லாம்விழித்துயில்பயிலுங்காலத் ............ *
தூயதொண்டர்க்குமாயைதொலைப்பநல்லமையந்தோன்ற ...... *

ஏ-து. அப்போது மேற்குத்திசையிலுள்ள அஸ்தகிரியிலே சூரியன்மறைந்து உலகத்திலே யிருள்பரவியபின்பு பதினைந்து நாழிகைவேளையில் உயிர்களெல்லாம நித்திரைசெய்யும்போது பரிசுத்தராகிய திருவாதவூரர்க்கு மாயாமலநீங்கும் சமயம்வந்துதோன்றியென்றவாறு ........................................(சசு)

இங்கிவர்தம்மையாளுங்காலமீதென்றுதெய்வ ....... *
சங்கமந்தகன்றமுன்னேமஞ்சனச்சாலைசார்ந்து ....... *
குங்குமம்புழுகுசாந்தங்குழைத்துமெய்ம்முழுதும்பூசிக் ....... *
கங்கையினன்னீர்வாசங்கலந்தமென்பனிநீராடி ....... *

எ-து. இவ்விடத்திலே யிவரை யடிமை கொள்கின்ற காலமிது தானென்று தெய்வசபையைநீங்கிக்குருசுவாமியானவர்திருமஞ்சனச்சாலைக் கெழுந்தருளிக்குங்குமம்புனுகுசந்தனமுங்குழைத்துத் திருமேனிமுழுவதும்பூசிக்-கங்காதீர்த்தத்தாலும் வாசனைகலந்தகுளிர்ந்த நல்ல பனிநீராலும் ஸ்நானஞ் செய்தென்றவாறு.

மெய்ப்புனைதுகிலொன்மாற்றிவிலைமதிப்பில்லாதல்ல ....... *
வொப்பருஞ்செம்பட்டாடையுடுத்துயர்கோட்டமெய்திச் ....... *
செப்பிளமுலையாள்பாகன்றென்றிசையதனைநோக்கி ....... *
யப்பெருந்தவிசின்மேலங்கழகுறவிருந்தபின்னர் ....... *

எ-து. திருமேனியிலே பொருந்தியநீரைத் திருவொற்றாடையாலொற்றி ஒருவராலும் விலைமதிக்கப்படாத நல்லஒப்பற்றசிவந்தபட்டுப்பரிவட்டத்தையுடுத்து உயர்ந்தகோயிலிற் சென்றுசெப்பையொத்த இளமைபொருந்திய முலையையுடைய உமாதேவிபாகனாகிய கடவுள்தெக்ஷணை அபிமுகமாக அந்தப்பெரிய ஆசனத்தின்மேல் அழகுபொருந்த விருந்தபின்னரென்றவாறு....(௪௮)

உம்பருமலர்தூயேத்துமன்பருந்தூய்நீராடி ....... *
வெண்டுகில்புனைந்துநீறுவிளங்கியமெய்யராகி ....... *
முண்டகமலர்த்தாள்வைத்துமுத்திதந்தருளுமேனி ....... *
கொண்டவர்திருமுன்சென்றுகுறுகியுவகைகூர்ந்து ....... *

எ-து. தேவர்களும்மலர்களைத்தூவியேத்துகின்ற திருவாதவூரரும் பரிசுத்தமாகிய நீரிலே ஸ்நானம்பண்ணி வெள்ளைவஸ்திரமுடுத்துக்கொண்டு விபூதிதரித்ததேகத்தையுடையவராய்த் தமது சிரசிலே தாமரைமலர்போன்ற திருவடிகளைவைத்து மோக்ஷங் கொடுக்கத் திருமேனிகொண்டுவந்த ஆசாரியருடைய திருமுன்னே மிகுந்த மகிழ்ச்சியடைந்து சேர்ந்தென்றவாறு......(௪௯)

விண்ணவரதிபன்பொற்றாள்விளக்கியர்ச்சனைமுன்செய்து ....... *
தண்ணமர்பனிநீர்தோய்ந்தசாந்தமெய்ம்முழுதுஞ்சாத்தி ....... *
வண்ணமென்கழுநீர்மாலைவனப்பெறவணிந்தபின்னர்க் ....... *
கண்ணுறுபரிவுநீக்கக்கண்டுளமகிழ்ச்சிகொண்டு ....... *

எ-து. தேவர்களுக்கிறைவனாகிய பரமசிவனுடைய அழகிய திருவடிக்குமுன்னே அபிஷேகஞ்செய்து அருச்சித்துக் குளிர்ச்சி

பொருந்திய பனிநீராவிய சந்தனத்தை அழகிய திருமேனிமுழு வதுமபூசிச் செங்கழுநீர்மாலையை வரம்பொருந்தத் தரித்தபின்பு கண்களைப்பெற்ற அனைவருங்கண்டு மனமகிழ்ச்சி யடைந்திருந்த னவாறு... ........................................ (௫௧)

பருப்புடனுளிகோப்பழச்செழுந்தருவல்சேர்த்துச் ............ *
சருக்கரைகலந்துபாலிற்சமைத்தநல்லமுதனின்ன ............ *
யிருந்திடகனகக்கான்மேவிலங்குபொற்கலத்திலிட்டு ............ *
விருப்பொடுபடைத்துநெய்யுமிக்கமுக்கனியும்பெய்து ............ *

எ-து. பருப்புடனே செழுமைபொருந்திய தேங்காய்த்துரு வலும் சேர்த்துச் சருக்கரைகலந்த பாலிலே சமைத்த திவ்விய மா கிய திருவமுதினைப் பொன்னினாற்செய்த நாற்காலியின்மேல் பிர காசிக்கின்ற பொற்கலத்திலே அன்பினுடனேபடைத்து நெய்யும வாழைப்பழமும் மாம்பழமும் பலாப்பழமும் பெய்தென்றவாறு.

மாலயன்வலாரிமற்றவானவர்பிழைக்கமுன்னு .... . .... . ... *
னாலமுண்டவனேநல்லவமுதமுண்டருள்வாயென்று .......... *
சீலமாமகிழ்ச்சிபொங்குஞ்சிந்தையினோப்பக்கால .......... . *
காலனுமுண்டிரிநீராற்கரமலர்கழீஇயபின்னர் .................. . . *

எ-து. மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் இந்திரனும் மற்றத் தேவர்களும் பிழைக்கும்படி முன்னாளிலே விஷத்தையுண்டகட வுளே நல்ல அமுதையுண்டருள்வாயென்று நல்லகுணமும் மகிழ் ச்சியும் பொருந்தியமனத்தோடு வேண்டிக்கொள்ள அவ்வேண்டு கோளின்படியே பரமசிவன் அமுதுசெய்து சலத்தினாலே கைகழுவி ய பின்னென்றவாறு ........................................(௫௨)

வெள்ளிலைபழுக்காய்நல்லினாதருதூபதீபங் ......... .. ....... *
கொள்ளுநற்றேசுகாட்டிக்கோலநன்னீராசாந்தித் ............. . *
தெள்ளொளிவிளங்குமாடிதிருந்தமுன்றிகழ்வித்தெங்கு ..... . *
முள்ளவர்முடிமேலோங்கவொண்குடைவிதல்செய்து .... ...*

எ-து. வெள்ளைவெற்றிலையும் பாக்குங்கொடுத்து வாசனையைத் தருகின்ற தூபதீபஞ்செய்து அழகியதிருநீராசனித்துத் தெளிந்த ஒளிவிளங்குகின்ற கண்ணாடிகாட்டி எங்குநிறைந்தவராகிய பரமா சாரியருடைய முடியின்மேல் ஒளியையுடைய பட்டுக்குடை பிடி த்தென்றவாறு ........................................(௫௩)

சுற்றைவெண்கவரிசெம்பொற்காம்புநீடாலவட்டம் .... .... .... *
பற்றியன்புடனேவீசிப்பரிவுடனடியார்சூழப் .......................... *
பொற்றவிசிடையேமேவும்புண்ணியன்றிருமுன்பைம்போ..... *
ஒற்றலையுடனேவாதவூரரங்கிருந்தபின்பு......... ............... *

எ-து. கற்றையாகிய வெள்ளிய சாமரையும் சிவந்த பொன்னினாற்செய்த நெடியகாம்பையுடையஆலவட்டமும் எடுத்து அன்புடனேவீசி அடியார்கள்சூழப், பொன்னினாற் செய்த ஆசனத்திலே எழுந்தருளியிருக்கின்ற புண்ணிய சொரூபராகிய தேசிகோத்தமருடைய சன்னிதிமுன்னே மலரை யிரண்டுகைகளிலுமேந்திக் கொண்டு திருவாதவூரரங்கிருந்த தென்பென்றவாறு..........(௩௪)

மந்திரம்பதங்கள்வன்னம்புவனங்கடத்துவங்க ........ .... ......*
ளோந்துநற்கலைகளென்றுமறுவகையகற்றியந்தச் ....................*
சிந்தனைக்கரியமேலைச்சிவத்துடனறிவுசேரப்....... ...............*
பந்தனையொழிவார்தம்மேற்பரிந்தருட்பார்வைசெய்து.... .....*

எ-து. பதினொருமந்திரங்களும் எண்பத்தொருபதங்களும் ஐம்பத்தோரக்ஷரங்களும் இருநூற்றிருபத்துநாலு புவனங்களும் முப்பத்தாறுதத்துவங்களும் ஐந்துகலைகளுமாகிய ஆறு அத்துவாக்களையும் நீக்கி முடிவாகிய மனத்துக்கெட்டாத மேன்மைபொருந்திய சிவத்துடனே அறிவுபொருந்தப் பாசக்கட்டுகள்நீங்குவாராகிய மாணிக்க வாசகர்மேல் அன்புவைத்துக் கிருபாநோக்கஞ் செய்தென்றவாறு ........................................ ...........(௩௫)

எவர்க்குமெய்ஞ்ஞானமாமஞ்செழுத்தையுமுணர்த்தவேண்டி... *
யவத்தொழிலகற்றியாளுஞ்சிவத்தைமுன்னுகமாறித்................ *
தவப்பெருவடிவங்கொண்டார்தண்டமிழ்ப்பாடுமெய்யர்.... .......*
செவிப்புலன்வழியேசிந்தையுறத்திருவாய்மலர்ந்தார்.. ....... ....*

எ-து. பெரிய வடிவங்கொண் டெழுந்தருளி வந்தஞானதேசிகர் அதிதீவிரபக்குவமாவர்களுக்கும் உண்மையறிவாக விளங்கும் பஞ்சாக்ஷரத்தை அறிவிக்கவேண்டி அவத்தொழிலைநீக்கியாளுகின்ற சிவத்தைமுன்னுகமாறிக் குளிர்ந்த தமிழ்வேதம்பாடுகின்ற அன்பராகிய திருவாதவூரருடைய காதினிடத்தே மனத்திலேபொருந்தத் திருவாய்மலர்ந்தருளினாரென்றவாறு.....................(௩௬)

[வேறு.]

விரவுமன்பொருவடிவுகொண்டணைவார்- விழித்தபார்வையின்விளக்கின்முன்னிருள்போற், கருதிசெந்தமிழாக்கியமொழியார்-தொலைவிலாதவெந்துயர்ப்பவமொழித்து, பரவிமெய்பதம்பணிபவர்படிமேற்-படியவீழ்ந்தனர்வாழ்ந்தனர்பரிவான், மருவுமிங்கிவர்சென்னியிலிருதாள் - மகிழவைத்தனர்மதுதிருமுடிப்பார்..... ............................ ..... ..... .. .. . .. .......

எ-து- கலந்தஅன்பேஒருவடிவமாகக் கொண்டுவந்தருளிய பரமசிவனுடைய பார்வையினாலே விளக்கின்முன்னே யிருள்கெடுவ

ப்பவமகற்ற வின்குருவ- மாவதேயென வழுதுநெஞ்சழிந்
தார்.................................................................*

எ-அ. இப்படியிருந்த அந்தப்பெரிய கிருபையுடைய கடவுளை
திரோசேர்ந்து அன்புடைய திருவாதவூரர் தமலர்களித்துச் சிரசினி
டத்திலே தம்முடைய இரண்டுகரங்களையுங்குவித்துக்கொண்டுசிற
ப்புப்பெற்ற அதிக ஆசாமைநிறைந்தவராய் வருத்தப்பட்டு இந்த
ப்பூமியைத் தோண்டியும் மேலேபறந்தும் மகாவிஷ்ணுவும் பிர
மனும் கண் [illegible] ங்குதற்கரிய நீர் அடியேனுடைய அரியதுயரை
ச்செய்கின்ற பிறவியை நீக்குதற்கு இங்கே குருவடிவங்கொண்டுவ
ந்தது என்ன அருமையென்று அழுது மனமுருகினுரொன்றவாறு.

ஐயனேயெனையாண்டருள்புரிபு- மாதியேயுழையணிமழுவி
ருக்குங், கையனேகொடுங் காலனைமுனியுங்- காலனேயிருக
ண்மணிநுண்மணியே, செய்யனேயடிபோற்றியென்பெ
ரிய- செல்வமேயடிபோற்றிபொய்யினர்தம், பொய்யனே
யடிபோற்றியெவ் வுயிர்க்கும் போதமேயடிபோற்றியென்
றழுதார்...................................................................*

எ-அ. ஐயனேயென்னை ஆண்டுகிருபைசெய்யும் ஆதியே அழகி
ய மானுமழுவு மிருக்குங் கையையுடையவனே கொடிய யமனை
க் கோபித்துதைத்த திருவடியை யுடையவனே என்னுடைய விர
ண்டுகண்களிலே யிருக்குமணியே சிவந்த ரூபத்தையுடையவனே
உன்னுடைய பாதங்கள் போற்றி என்னுடையபெரியசெல்வமே
உன்னுடையபாதங்கள்போற்றி பொய்யருக்குப்பொய்யனேஉன்
னுடைய பாதங்கள்போற்றி எந்தவுயிருக்கும் அறிவுக்கறிவாயிரு
ப்பவனேஉன்னுடைய பாதங்கள்போற்றியென் றழுதருகினுரெ
ன்றவாறு................................................................(௬௩)

அந்நாளிரவான்றிருள் வைகறையெனும்போ- தணைதலும்பர
னருட்குருவடிவந், துற்றசாந்துடன்மூயங்குசெங்கழுநீர்த்-
தொடையலின்சுமை பொறுதெனத்துரங்கிக், கற்றமான்
காத்தேந்தியவிறைவன்- கவின்கொண் மார்பணிமலர்த்தொ
டைகழித்தங், குற்றவான்றுயரகன்றுநல்லடியா- ருடன்விர
ங்கினர்களங்கமொன்றில்லார் ....... . ..................................*

எ-அ. அன்றைத்தினம் இருள் நீங்கி விடியற்காலம்வருதலும் அரு
ளையுடையகுருவினது திருமேனியானது நிறைந்த சந்தனமும்
சேர்ந்த செங்கழுநீர்மாலையும் சுமையாதலிற் பொறுக்கமாட்டா
தென்றுகலங்கி மான்கன்றையேந்திய கையையுடைய அக்கடவுள்
அழகுபொருந்திய மார்பிலே அணிந்தசந்தனமாலைமுதலியவைக
ளைக்களைந்து தம்முடைய துன்பங்களெல்லாம்நீங்கி நல்லடியார்க

ளுடனே விளங்கியிருந்தார் ளெங்கடோன்றில்லாத மாணிக்கவாச
கரென்றவாறு............................................................ (௬௨)

வாதவூருறையிறைவர்தம்பெரிய-மாவையபோயிருண்மாய்ந்
துபின்னவர்பாந், போதமாகியந்துதுடர்விளக்கம்- போ
லவேயினன்புணரியிந்தோன்ற, வேதநாதர்தமிருபதமிறை
ஞ்ச- மெய்ம்மையாளரை வேறுகொண்டிருந்தங், கோது
மாகமத்தறிவரும்பொருளே- புகைக்கவேறினைந்தாரருமறை
த்தார்............................................................*

எ-து. திருவாதவூரிலே தங்கிய தலைவரான மாணிக்கவாசகருடை
ய பெரிதாகிய அஞ்ஞானநீங்கினதுபோல இருள் நீங்கிப்பின்பு அ
வரிடத்திலேவிளங்கிய சிவஞானமென்னுந் தீபம்போல் சூரியன்
கடலிலே உதயமாக அப்போது தமது இரண்டுபாதங்களையும்வ
ணங்கிய திருவாதவூரரை வேறே அழைத்துக்கொண்டு போயிருந்
து அங்கே சிவாகமத்திற்சொல்லப்பட்ட அறிதற் கரியபொருளை
சொல்லநினைந்தனர் வேதநாயகராகியும் முன்னாலே சனகர்முதலி
யநால்வருக்குங் கல்லாலின்கீழிருந்து தருமமுரைத்தவராகியும்
விளங்கியபரமாசாரியரென்றவாறு................. (௬௩)

களிம்புதோய்ந்தசெம்பனையனையுருவுங்- கருமைகூர்மலங்
கண்டதுகலக்கும், பளிங்குபோன்றதுன்றன்மையமலத்தி
ன்- பந்தினுடல்பலவெடுத்துழன்றாய், வளர்குலாய்புவன
த்தொறுஞ்செயுமுன்- வல்வினைப்பயன் வருமுறையெதிரே,
யளைத்துநாந்தர நுகர்ந்துமேனுகர்வு- மாக்கியேதிரிந்தனே
மன வழக்கால்............................................................*

எ-து. இருள்வடிவாகியமலமானது களிம்புதோய்ந்த செம்பை
ப்போல அநாதியே உன்னைப்பொருந்தியிருக்கும், உன்னுடையத
ன்மையானது எதிரிட்டவன்னங்களைப் பற்றுகின்ற பளிங்குபோ
லாம், அந்தமலத்தினது சம்பந்தத்தால் அனேகதேகங்களெடுத்
து உழன்றாய், வளம்பொருந்திய புவனங்கடோறுஞ் செய்யும்
உன்னுடைய வலியவினைப்பயன்கள்வருகிற கிரமத்தின்வழியே அ
ரைவைசெய்து நாம்நியதிசெய்ய நீ அதனைப்புசித்து அப்படிபுசி
க்குமிடத்து ஆகாமியவினையையும்விளைத்துக்கொண்டு திரிந்தா
ய்அஞ்ஞானத்தினாலென்றவாறு............................................ (௬௪)

செய்துளோர்பெறும் வினைப்பயனொருவர்- சேர்க்கவேண்
டுவ திலவெனினதுமே, லெய்துமேவிது நுகர்வதென்றறி
வதில்லைநீவினையெனிற்சடமதியா- வுய்தலாகிய நன்னெறியு
ணரா வுனையுமுன்வினைப் பயனையுமுணர்ந்து, மைதவாமல
மொழித்தருள்புரியா-வாழ்வுநல்குவதியாமெனமதிப்பாய்.*

எ-து. வினைகளைச்செய்த ஆத்துமாக்களுக்கு வினைப்பயனை ஒருவர் இடைநின்று சேர்க்கவேண்டுவதில்லையெனின் நீ சிற்றறிவுடையவனுனைபடியால் மேல்வருவது இன்னதென்றும்புசிப்பதுஇன்னதென்றும் அறிந்துசேரமாட்டாய் வினைதான் அறிந்துசேருமோவென்றால் சடமாதலின்அறியாதுபிழைத்தலாகிய நல்வழியை யறியாத உன்னையும் உன்வினைப்பயனையும் அறிந்து இருள்வடிவாகிய மலமொழித்துக் கிருபைநீங்காதமோக்ஷத்தைத்தருவோம்யாமென்றுமறிப்பாயாகவென்று அநுக்கிரகஞ்செய்தார் பரமாசாரியனென்றவாறு.......................................................(௬௫)

யவர்க்குமிம்மலஞ் சேரவிங்கொழியா - திருப்பதென்னைனிலின்னல்கொள்பிறவித், துவக்கெனுந்தம திருவினைப்பயனுந் - துலைபுரும் பொருளென நிறைநிகர்த்தா, லவர்க்குநம்பதங் கொடுத்திட லொழிப்போ - மதுவிலாதவராழுங்கியவ்வளவும், பவப்பெருங்கடல் வீழ்வர்தாம்பருவம் - பார்க்குமெம்மையுந் தம்மையும் பாரார்........................*

எ-து. யாவர்க்கும் இந்தமலத்தைச்சேர நீக்காமல் இருப்பதுஎன்னெனில் துன்பத்தைக்கொண்ட பிறவியினுடைய சம்பந்தமாயிருக்கிற தங்களுடைய இருவினைகளும் ஒருதுலையினிருதட்டினும் இடப்பட்டபொருளைப்போலே ஒத்தால் அவர்களுக்குமாத்திரம் நம்முடைய பதத்தைக்கொடுத்து அப்பிறவித்துன்பத்தை நீக்குவோம் அப்படிஇருவினையொப்புவாராதவர்கள் வருந்தப்பட்டு அவ்வளவுநாளும் பெரியபிறவிக் கடலில்வீழ்ந்தலைவார்கள்தங்கள்பக்குவத்தைப் பார்க்கின்றபதியாகிய நம்மையும் பசுவாகிய தம்மையும்விசாரியார்களென்றவாறு.......................................(௬௬)

என்றுகூடுமிப் பருவமென்றியம்பி- லியாமிருந்துறைவிடந்தொறுமிறைஞ்சி, நன்[illegible]சர்சிவபுண்ணியம்புரியு- நன்மையாலது நணுகுமென்றருளி, மன்றிலானவெம் மியல்புனக்குரைக்கின் - மாசிலாவுருவொன்றவற்றுருவ, மொன்றுபேரொளியொன்றருவுருவ-மொன்றுதானருளுருவமென்றுணர்வாய்.

எ-து. எல்லைக்குக்கூடும் இந்தப்பருவமென்று சொல்லுமிடத்தில் யாமிருக்கின்ற ஸ்தலங்கள்தோறும் போய்எம்மைத்தொழுது சிவஸ்தலத்தில்வசித்தல்முதலிய சிவபுண்ணியப்பத்தினையுஞ்செய்யும்நன்மையினாலே அவ்விருவினையொப்புவருமென்றுநீயறிவாயாக-கனகசபையிலேவிளங்கிய எம்முடைய இயல்பு உனக்குச்சொல்லுமிடத்தில் குற்றமில்லாத எமதுசொரூபமொன்று அவற்றில்அருவமொன்று அறிவுவடிவாகிய அருவுருவமொன்று அருளையுடைய வுருவமொன்று என்றருளினர் பரமாசாரியனென்றவாறு.

இந்தமூன்றினிலுருவுனக்கறிய-வினைந்தபோதருளியம்புயில்
வுருவம், வந்தியாவரும் பணிவதற்கெளிதாய்- வாழிலாந்
தாவருமருவுருவம், பந்தமாகிய மலவிருளகற்றும் - பரிதி
யாயுளபலவுயிர்க்குயிரா, பந்தமாதிகளைப்பருமொளியா-
யமலமாகுமவ் வருவெனு முருவம்............ *

எ-று. இந்தமூன்றுருவிலே உருவமானது உனக்கு அறியும் படியாக உபதேசித்தருளிய இந்தக்குருவடிவமாம். அருவுருவமானது எல்லாரும்வந்து வணங்குதற்கு எளிதாயிருந்து வரங்களெல்லாங்கொடுக்கும் இலிங்கவடிவமாம். அருவமானது பாசமாகிய மலவிருளை நீக்குகின்ற கோடிசூரியப்பிரகாசமாய் எல்லாவுயிருக்குமுயிராய் முடிவுமுதலுங்கண்டு அளத்தற்கரிய ஒளியாய் நிர்மலமாயிருப்பதாமென்றவாறு........................ (௬௮)

ஆவலாலெமக்காமலர்மரங்க-ளாக்கலம்மலர்பறித்தலம்மல
ராற், றுவிலாவகைத்தார்பலசமைத்த - றண்டமிலெம்புகழ்
சாற்றலன்புடனு, மேவுமாலயமலகிடன்மெழுகல் - விளக்க
நல்விளக்கிடுதலெம்மடியார்க், கேவலானவைசெய்யுமிச்சரி
தை- யியற்றவல்லவர்க்கெம்முலகளிப்போம்.... ............ *

எ-று. ஆசையினாலே நமக்காகிய புட்பமரங்களை வைத்தலும் அந்தப் புட்பங்களைக்கொய்தலும் அம்மலர்களினாலே கெடுதலில்லாமல் அனேகமாலைகள்செய்தலும் நீங்குதலில்லாத நம்முடைய கீர்த்தியைச்சொல்லுதலும் நாமிருக்கின்ற கோயிலுக்குத்திருவலகிடுதலும் திருமெழுக்கிடுதலும் பிரகாசிக்கும்படித் திருவிளக்கிடுதலும் எம்முடைய அடியார்களுடைய ஏவற்பணிகள்செய்தலுமாகிய இந்தச்சரிதைத்தொழிலைச் செய்யவல்லவர்களுக்கு எமது சிவலோகத்தில் வாழ்தலாகிய சாலோகபதவியைத் தருவோமென்றவாறு.

கந்தவர்க்கமுங்கிளர்மணப்புகையுங்-கவின்கொடீபமும்புனி
தமஞ்சனமுங், கொந்தவிழ்ந்ததன் மலருமற்றவையுங் - கொ
ண்டுமாயையின் குணத்திலொன்றிலா, வைந்துசுத்திசெய்
தகம்புறமிறைஞ்சி- யங்கியின்கடன்கழித்தருள்வழிநின், றி
ந்ததற்பெருங்கிரியையன்புடனே யியற்றவல்லவெம்மருகி
ருப்பார்........................................ *

எ-று. வாசனைத்திரவியங்களும் வாசனையுள்ள தூபவர்க்கங்களும் அழகினையுடைய தீபங்களும்பரிசுத்தமாகியதிருமஞ்சனமும் கொத்துவிரிந்த நல்லமலர்களும் மற்றப் பஞ்சகவ்வியம் பஞ்சாமிர்த முதலிய பூசாதிரவியங்களுங்கொண்டு மயக்கமான குணங்களொன்றுமில்லாதவராய்ப் பூதசுத்தி திரவியசுத்தி மந்திரசுத்தி ஆத்ம

ம்சுத்தி இலிங்கசுத்தியென்கின்ற ஐந்துசுத்திகளுஞ் செய்து உள்ளி
லும் புறத்திலும் எம்மைப்பூசைசெய்து அக்கினிகாரியமும் செய்
துமுடித்துச் சிவாகமப்பிரகாரம் தன்மைபொருந்திய பெரிய இந்
தக்கிரியைத்தொழிலை அன்பினுடனே செய்யவல்லவர்கள் எம்மு
டையபக்கத்திலிருத்தலாகிய சாமீப்பியபதவியைப் பெறுவார்க
ளென்றவாறு..... .... ........................................................(௭௰)

முக்குணம்புலனைந் தூடனடக்கி - மூலவாயுவையெழுப்பிருவ
ழியைச், சிக்கெனும்படியடைத்தொருவழியைத் - திறந்துதா
ண்டவச்சிலம் பொலியுடன்போய்த், தக்கவஞ்செழுத்தோ
ரெழுத்துருவாந் - தன்மைகண்டருட்டரும்பெருவெளிக்கே, பு
க்கழுந்தினரெமதுருப்பெறுவார்புவியில்வெட்டுவனெனுத்த
மெய்ப்புழுப்போல.......... ................. . .......................*

இ-ரை. சத்துவம் இராசதம் தாமதம் என்கின்ற மூன்று குணங்களையும்
பஞ்சேந்திரியங்களையும் அடக்கிப் பிராணவாயுவை யெழுப்புகின்
ற இரண்டுவழியாகிய இடைபிங்கலைநாடிகளை நன்றாக அடைத்துச்
சுழுமுனைவழியைத் திறந்து நடனச்சிலம்போசையுடனே சென்
று தங்குமையமுடைய ஐந்தெழுத்தாம் ஓரெழுத்துருவாகிய தன்மை
கண்டு அருளைத்தருகின்ற பரவெளியிலே புகுந்து அழுந்தினவர்க
ள் எம்முடைய உருவத்தைப்பெறுதலாகிய சாரூப்பியத்தை அ
டைவார்கள் பூமியிலே குளவிதன்னுருவாக்கிய மெல்லிய புழுப்
போலென்றவாறு..... .......... ... ......... ......... ... .... .... ....(௭௧)

பாந்தவான்கலை முழுதுமாகமநூற் - பகுதியும்பலசமயசா
த்திரமும், தெரிந்துதேர்ந்ததில் வாய்த்தமுப்பொருளின்-
செய்கையே பொருளெனமனந்தெளிந்து, புரிந்துபோந்து
எறிந்தசிற்றறிவினைத்துப் - போக்கியவ்வறிவெனச்சிவபோதம், வி
ரிந்துதோன்றுநெஞ்சுடையவித்தகரோ - மேன்மையானநம்
மெய்ப்பதம்பெறுவார்.......... ................................*

இ-ரை. விரியப்பெற்ற மேலாகியகலைஞானமுழுவதும் ஆகமநூலி
னுடைய பகுபாடுகளனைத்தும் பலசமயசாஸ்திரங்களும் தெரி
ந்து ஆராய்ந்து அவ்வாராய்ச்சியிலே முப்பொருளாகிய பதிபசு
பாசத்தினுடைய செய்கைகளே உண்மைப் பொருளென்று மனந்
தெளிந்து முற்செய்த கன்மத்தாற் கூடாகவந்த சிற்றறிவினைத்துடைத்துப் பேரறிவெனப்பட்ட சிவஞானம்விரிந்து தோன்று
கின்ற மனத்தையுடைய சதுரப்பாட்டினரோ உயர்வாகிய நம்மு
டைய சாயுச்சியபதத்தைப் பெறுவார்களென்றவாறு........(௭௨)

உருப்பொலாதவ ரிழிகுலத்தவர்நல் - லொழுக்கமில்லவரென்
றாலுமன்பிலர், விருப்பிலாதவ ரெனினுமெய்ந்நிலை-மிக்கசா
தனவேடமுங்கண்டால், நரிப்பிலாதுசென்றிறைஞ்சி நிறுமவனைய்
தித்-தக்கபோனகமளித்தவர்க்கெளிதா, விருப்பர்தாமவரடி
யவர்க்கடியா-ரென்பர்யாமெனுந்தருஞ்செருக்கறுப்பார்.*

எ-து. பொல்லாதவுருவுடைய வராயினும் இழிந்தகுலமுடையவ
ராயினும் நல்லொழுக்கமில்லாதவராயினும் என்றைக்கும் நம்மிடத்
திலே அன்பில்லாதவராயினும் அவர்களுடையமெய்யிலேவிபூதியு
ம் உயர்ந்த உருத்திராக்ஷவேடமுங் கண்டவுடனேதரியாம லெதி
ரேசென்றுவணங்கித் தகுந்த அறுசுவைப் பதார்த்தங்களுடனே
அவர்களுக்குத் திருவமுதுசெய்வித்து அவர்களுக்கு எளியராயி
ருந்து அவரடியார்க்கடியரா யிருப்பவர்கள் யாமென்னுந்தன்முனைப்புச்
செருக்கை யறுப்பாரென்றவாறு ........................ (எ௩)

விரிந்தசஞ்சித வினைகளன்புடனும்-விழித்தெயற்றது விருப்
பயிப்பிறட்டிந், பொருந்துமவ்வ விளையுடனுடனதும-புந்
திசேரருள்வருவினைபோக்கு, மருந்துயிர்ப்பொருளுயிருட
ம்புனவே-யலவதம்மனவாகுமிங்குனைப்போ, லிருந்தநம்
பெருவடிவைநின்கருத்தி-லிருத்துவாய்பொருளிதுவெனவரு
ளாத்தார் ........................................ *

எ-து. விரிந்திருக்கின்ற சஞ்சிதவினைகள் அன்புடனே யக்ஷதி
க்ஷையென்கிற நாம விழித்துப் பார்க்கும்பார்வையிலுமே வெந்
துபோயிற்று. விரும்பப்பட்ட இச்சனனத்திலே அநுபவிக்குமப
டியெடுத்துக் கட்டப்பட்ட பிராரத்தம். இந்தத்தேகத்துடனேயே
போம். நம்முடைய புத்தியில்தங்கிய திருவருளானது இனி மேற
வொட்டாமல் ஆகாமியவினைகளையொழிக்கும். அரிய துய்யதாகிய
இவ்ற உன்னுடைய பொருளும் உயிரும் உடம்பும் உன்னுடை
யவல்ல. நம்முடையவாகும் இங்கே உன்னைப்போலே மானிடவடி
வங்கொண்டுவந்த நமதுவடிவை உன்மனதிலிருத்திவைப்பாய்
இதுவே பொருளென்று அருளிச்செய்தாரென்றவாறு .....(எச)

அத்தனார்திரு வாய்மலர்ந்தருளு-மமலவாசகங்கேட்டகமகி
ழ்ந்து, பத்தனார்தமக் கெழுபிறப்பதுக்கும்-பாதமீதுறைப்ப
ணிந்தெதிரெழுந்து, பித்தனேனெனைப் பிழைதனக்கிரங்கும்-
பிஞ்ஞகாமிகப்பேதைமையுடையேன், முத்தனேமெய்காட்
டினையெனவே-மொழிந்துநின்று கைமுடியிசைக்குவித்தார்

எ-து. அத்தனாராகிய கடவுள் திருவாய்மலர்ந்தருளிய களங்கம
ற்ற உபதேசமொழிகளைக்கேட்டு மனமகிழ்ந்து திருவாதவூரர் தம்

முடைய எழுபிறப்பையும் நீக்குகின்ற குருவினது பாதமலரின்மே
ற்பணிந்து எதிரேயெழுந்து பித்தனுகிய என்னுடைய குற்றத்துக்
கு இரங்கியருளிய பரமசிவனே மிகவும் அறியாமையுடைய அடி
யேன் சீவன்முத்தனுகி உண்மைகாட்டினுயென்றுசொல்லி மனம
கிழ்ந்து கைகளைச் சிரசின்மேற்குவித்து வணங்கினுனென்றவாறு.

என்னதாகமுன் னினைந்துளபொருளு - மில்லதாகியவுடலமு
ம்யானு, நின்னவாகநின் னருள்கொடுநினைந்தே - னின்மலா
வெனநிற் றுநின் றுருகா, மன்னுதானைதன் மேலணிகலன்க
ண் - மதுரைமீனவல்வான்பொருளிறையோன், முன்னதாக
வைத் திறைஞ்சினாறஞ்சேர் - முதல்வனுர்முகமலர்வுகொண்
டிருந்தார் . ............ ............ ......*

எ - து. என்னதென்று தான்முன்னே நினைந்திருந்தபொருளும் எ
னக்கிடமாகிய தேகமும் யானும் உமது அருளைக்கொண்டு உம்மு
டையவைகளாகவே நினைந்தேன் நின்மலனேயென்று நின்று நிற்
றுருகித் தம்முடைய பட்டு வஸ்திரங்களும் மேலே அணிந்திருந்த
ஆபரணங்களும் மதுரையிலிருக்கின்ற பாண்டியன் குதிரைகொள்
ளக்கொடுத்த பொருள்களும் தமது குருவினெதிரேவைத்து நமஸ்
கரித்தார் தருமசொரூபராகிய பரமசிவனும் முகமலர்ச்சி கொண்
டிருந்தாரென்றவாறு............ ............ ............ (எசு)

[வேறு.]

பெருந்துறையுறைவாரன்புபெறுந்திருவடியராகி... ......... ... ..*
யிருந்தவர்தம்மின்மேன்மையெய்தினர்முகத்தைநோக்கித்......*
திருந்தியபொருளிதெல்லாந்திருப்பணிக்களியுமேலா.............*
டருந்தவர்க்குதவுமில்லாதலர்ந்தவர்க்கருளுமென்றார்... ..........*

எ - து. திருப்பெருந்துறையிலே எழுந்தருளியிருக்கின்ற பர
மாசாரியாரானவர் தம்மிடத்தில் அன்புடையவராயிருந்த அடியா
ர்களில் சிறந்த ஒருவர்முகத்தைப் பார்த்துத் திருத்தமாகிய இந்த
ப்பொருளை யெல்லாம் சிவாலயப் பணிக்குக்கொடும் அரிய தவத்
தையுடையவர்களுக்குக்கொடும் வறியவர்களுக்குக் கொடுமென்று
அருளிச்செய்தாரென்றவாறு........................ .... .........(எஎ)

தமபெருமுதல்வர்சொல்லுந்தகுமொழிப்படியேயுள்ள.........*
செம்பொருளியாவுமல்கிப்பிறத்துளர்தொலைந்தபின்ன..... ...*
ரம்பரன்னித்தஞானமருந்தினையருந்திப்பாச........................*
வெம்பிணியகற்றுயிர்ந்தவித்தகர்முத்தரானுர்..................... *

எ - து. தம்முடைய முதல்வராகிய பரமாசாரியர் சொல்லிய
தகுந்தசொற்படியே தம்மிடத்துள்ள திரவியத்தையெல்லாம்

னெரித்துவிட்டு அழகியகடவுள் அருளிச்செய்த ஞானமிர்தத்தை
ப் புசித்துப் பாசமெல்லாம் வெப்பமிணியை நீக்கப்பெற்ற அன்
பராகிய திருவாதவூரர் சிவன்முத்தரானாரென்றவாறு.........(௭௮)

திருத்திகழ்கவிகைக்கீழுஞ்சிறந்தபொற்சிவிகைமேலும்.............*
வரதற்குமேவுதலைமன்னவனெனவந்தா ...............................*
குருத்தெரியாதநீறுங்கோவணவுடையுஞ்சூடி.... ......................*
விரித்துளசிரமுங்கண்ணீர்ப்பிகப்பொழிவிழியுமானார்............ ....*

எ - து திருத்தமாகிய குடைநிழற்கீழும் சிறக்கப்பெற்றபொ
ற்சிவிகையின்மேலும் அழகுபொருந்திய சேனைகள் சூழ்ந்துவர
ஒரு அரசனைப்போலவந்த திருவாதவூரரானவர் உருவந்தெரியாம
ற் பூசப்பட்ட நீற்றையும் கோவணவுடையையும் சூடி விரிந்தி
ருக்கின்றசிரசையும் ஆனந்தபாஷ்பம் பொழிகின்ற கண்களையுமு
டையவராயினாரென்றவாறு........ ...............................(௭௯)

அன்புடனேத்திப்பரவுவர்கைதொழுவர்வீழ்வ .... ............... *
ரின்புறவழுவர்பையப்பாடுவரிரங்கினவர்.... ...... . .... ........*
நம்பகற்கங்குல்காணார்ஞானநலமதேகொண்டு. .. ...... ........ *
கொம்புனைபித்தர்பாலர்பிசாசர்தங்கொள்கையானார்..... ... ......*

எ - து தமக்கு அனுக்கிரகஞ்செய்த பரமாசாரியனை அன்புட
னே பார்த்துத்துதிப்பார். ஆனந்தபாஷ்பம்பொழிய அழுவார். கை
கூட்டித்தொழுவார். கீழேவிழுந்து நமஸ்கரிப்பார். ஆசைபொ
ருந்தமெய்யழுந்திருப்பார். புறங்காட்டாமல்முன்பாக நடந்துசெல்
வார். இரக்கங்கொண்டு திரும்பிவருவார். பகலும் இரவும் அறிய
மாட்டார். சிவஞானத்தையே பொருளாகக்கொண்டு கண்டோர்க
ளை அச்சஞ்செய்கின்ற பித்தர்பாலர் பிசாசர்களுடைய கோட்பா
ட்டையுடையவரானார். மாணிக்கவாசகரென்றவாறு. .........(௮௰)

மன்னுயிர்த்தலைமையுற்றார்வன்படைசுற்றமாகித் .... ......... .*
துன்னினரெல்லாமவற்றோன்றலைத்தொழுதுநின்று............ *
தென்னவன்முனியாவண்ணஞ்செழும்பரித்திரள்கொண்டேக ...*
வென்னுமதென்றுந்தோதிதுபழுதென்றிரங்கி.......... ........*

எ - து நிலைபெற்ற இத்தலைமைப் பொருந்திய திருவாதவூரரு
டைய வலிமைபொருந்திய படைத்தலைவர்களும் சுற்றத்தாருமா
கிய எல்லாரும் நெருங்கிப்பெரியோரைவந்துநின்று அவரைத்தொழுது
வணங்கி அரசனாகிய பாண்டியன் கோபியாதபடி செழுமை பொரு
ந்திய குதிரைக்கூட்டங்களை வாங்கிக்கொண்டு போகவேண்டுமென்
பதைத் தெரியாதிருக்கிறது பழுதென்றிரங்கியென்றவாறு. ..(௮௧)

ஐயநீவருதல்வேண்டுமென்றவரழைத்தபோதிற் ..................*
செய்யநீறணிவார்தாளைத்திறலினர்தம்மைநோக்கி.............*
மையலாருணர்வின்மிக்குரியாவர்நீர்மாயாபேதப்..........*
பொய்யெலாமுரைத்தல்வேண்டாம்போமினியகலவென்றார்.... *

வ-து. ஐயரோ நீர் வரவேண்டுமென்று அவரழைத்த போதில் செம்மையையுடைய திருவெண்ணீறணிகின்ற திருவாதவூரர் அந்தச்சேனாபதிகளைப்பார்த்து அஞ்ஞானத்திலேயிருந்த நீங்கள் யாவர்-மாயாபேதமாகிய பொய்யுரைகளெல்லாம் நம்முடனேசொல்லவேண்டாம். தூரப்போய்விடுங்களென்றுசொன்னவாறு......(அஉ)

என்னிவர்புகல்வதென்றேயாவருநின்றிரங்கித்.....................*
துன்னுநற்றுணைவரார்தம்முளேதுயரமெய்திப் ..............*
பன்னுறுநம்மொழியுட்கொள்ளார்பரிவிலரென்றுநீங்கித்.........*
தென்னவற்கிவ்வாறுசெப்புவோமென்றுசென்றார்...............*

ஏ-து. இவரிப்படிசொல்வது என்னவென்றுசேனாதிபதிகளெல்லோரும் இரங்கிநின்று தங்களுக்குள்ளே துன்பமடைந்து நாம் சொல்லுகின்றசொல்லையும் உட்கொள்ளாதவராயும் நம்மேலன்பிலாதவராயுமிருக்கிறாரென்று அவரை விட்டுநீங்கிப் பாண்டியராசனுக்கு இதைச்சொல்லுவோமென்றுபோனார்களென்றவாறு.(அங)

சென்றவர்வையைநாடன்றிகழ்கழலுமுன்னெய்தி..................*
வன்றிறன்மன்னபோற்றிமாமதுரேசபோற்றி.......................*
யென்றுபின்வாதவூரனெய்தியசெய்தியெல்லா .....................*
மொன்றியகவலைகூருமுளத்துடனின்றுசொல்வார்................*

ப-து. அப்படிபோனவர்கள் பாண்டியராசனுடைய சிறப்புப்பொருந்திய சபைக்கெதிரேபோய்நின்று பராக்கிரமத்தையுடைய அரசனேசரணம் பெரியமதுரைக்கு நாயகனேசரணமென்றுவணங்கினபின்பு திருவாதவூரர் நடந்தசெய்கைகளையெல்லாம் மிகுந்தகவலைபொருந்திய மனத்துடனே நின்று சொல்வார்களென்றவாறு..............................(அச)

நின்பெயர்புனைந்தோராகிநின்பெருங்கருமஞ்செய்வோ..........*
ரென்பவர்செய்கைதன்னையெங்ஙனம்யாங்கள்சொல்வோம்.......*
பொன்பொலிமௌலியோய்நின்புடைவிடைகொண்டுபோந்து *
மன்பெருந்துறையாமந்தவளநகர்புகுந்தபின்னர்................*

எ-து. தென்னவன்பிரமராயனென்று உன்பெயரைத் தரித்தவராகியும் உனக்கு மந்திரித்தொழில் செய்பவராகியும் இருக்கின்ற திருவாதவூரருடைய செய்தியை எப்படி நாங்கள்சொல்வோம் பொன்னினாற்செய்யப்பெற்று விளங்கிய கிரீடத்தைத்தரித்த அர

சனே உன்னிடத்திற்செலவு பெற்றுக்கொண்டுபோய் நிலைபெற்ற திருப்பெருந்துறையென்னும் பெயராயுடைய அழகியநகரத்திலே புகுந்தபின்பென்றவாறு.....................................(௮௫)

அந்நகர்மருங்கோர்காவிலவனைத்துளகுருந்தினீசன் .................*
றன்னடியார்களாகுந்தாபதர்பலருஞ்சூழ......................................*
மன்னியங்கொருவர்மேலாமாதவவேடம்பூண்டு ........................*
முன்னுறவிருந்தல்கண்டுமுடிவிலாமகிழ்ச்சிகொண்டு....................*

எ - று. அந்நகரத்துக்குப் பக்கத்தில் ஒருசோலையி லிருக்கிற குருந்தவிருக்ஷநிழலின்கண்ணே சிவனடியார்களாகிய தபசிகள் அனேகர்சூழ நிலைபெற்று அங்கே ஒருவர் மேலாகியமகிமைபொருந்திய தவவேடம்பூண்டு எழுந்தருளியிருப்பதைக்கண்டு அளாவிற சந்தோஷமுபெற்றனென்றவாறு..............................(௮௬)

அங்கவர்தாமுந்தாமுமனைபொருசிலசொற்கூறிச் ....................*
சங்கரசிவனேபோற்றியெனறவர்தாளில்வீழ்ந்து ......................*
செங்கரங்குவித்துச்சென்னிசேர்த்துவந்தனைசெய்து ...                *
பொங்கொளிமணிப்பூணுடைமபொருளெலாமுவந்துநல்கி .....*

எ - று. அந்தப்பெரியவரும் தாமும் அன்புடனே சிலவார்த்தைகள்பேசிச் சங்கரா சிவனே சரணமென்று அவருடைய பாதங்களிலே நமஸ்கரித்துச் சிவந்தகைகளைக்கூட்டிச் சிரசிலே வைத்துக்கொண்டு பூசித்து மிகுந்த ஒளியையுடைய ரத்தினாபரணங்களையும்,பட்டுவஸ்திரங்களையும், திரவியங்களையும் சந்தோஷமாய் அவருக்கே கொடுத்தென்றவாறு ................................ (௮௭)

குறைவிலாவாடைநீத்துக்கோவணமுடித்துச்சென்னி..............*
நறைமயிர்விரித்துநீற்றைமெய்யெலாமயத்துப்பூசி...                    *
முறைமையன்றிதுதானென்றுமொழிந்தவெம்முகமும்பாரார் . *
திறையமிமிந்தராணர்திருபவென்றிறைஞ்சிநின்றார்....          *

எ - று. குறைவில்லாத தம்முடைய வஸ்திரத்தை நீக்கிக் கோவணமாத்திரங் கட்டிக்கொண்டு தலையிலேயுள்ள மயிரைவிரித்துக்கொண்டு தேகமுழுவதும் விபூதியை விருப்பத்துடனேயணிந்து இப்படிச்செய்வது கிரமமலவென்று சொன்ன எங்கள்முகத்தையும் பாராதவராய்க் கிரமந்தப்பிய பித்தனைப்போலானார் பாண்டியனேயென்று வணங்கிநின்றார்களென்றவாறு...........(௮௮)

கேட்டதுமதுனைமாறன்கிளர்ந்தமெய்ம்முழுதுமவெர்வு...........*
காட்டிடவெகுளிபொங்கிக்கண்கனல்வடிவமாகி.................. .......*
வாட்டிறல்மன்னர்கனினைவண்மையருளரோலைவட.....................*
மீட்டுதுசெலவந்தானைபெவையிலவென்றுநக்கான்........................*

எ-று. அவர்கள் சொன்னவார்த்தையை மதுராபுரியரசனாகிய பாண்டியன் கேட்டுத் தேகமுழுவதும் வேர்வையுண்டாகக் கோபமிகுந்து கண்கள் அக்கினிவடிவாகச்சிவந்து வாய்புதைத்து நீலநிறத்தையுடைய அரசர்களுக்கு இப்படிப்பட்ட வார்த்தைசெப்புகின்ற மந்திரிகளுண்டானால் சம்பாதிக்கப்பட்ட நாடு செல்வம் சேனை முதலியவைகளில் குறைவென்னவென்று சிரித்தானென்றவாறு.

அம்பரிகொள்வானிந்தவரும்பொருள்கவர்வதாகக் ........ ......*
கெடுமதி புனைப்பார்தஞ்சொற்கேட்டுமாலெய்தினானைக்.... .. .... *
கொடுமைகொளிந்தவோலைகொடுத்தொருதினத்துநம்பாற் ..... *
கடுநடைத்தூதரோடிக்கைக்கொண்டுவம்மினென்றான் ........ .... *

எ-று. யுத்தத்திலே பகைவரைக் கொல்லத்தக்க குதிரைகளைக் கொள்ளும்பொருட்டு நாங்கொடுத்த அரியதிரவியங்களைக் கொள்ளையிட்டதாகக்கெடுமதி சொல்லுவார்சொல்லைக்கேட்டு மயங்கிய திருவாதவூரரை வேகமாகிய நடையையுடைய தூதர்கள்போய்க் கொடுமையாகவெழுதிய இந்த வோலையைக்கொடுத்து ஒருதினத்திலே நம்மிடத்திற்கு கைப்பிடியாகக் கொண்டுவாருங்களென்றான் பாண்டியராசனென்றவாறு..... .... ................ .......... ....(௬௰)

எயிலிற்சென்றதூதரெழிற்பெருந்துறையிலெய்தி................ *
பாயலிற்சிவனாருள்ளத்தமண்ணலைக்கண்டிறைஞ்சி ............... *
மேயலர்க்குருமேறன்னவெந்தொழில்வேந்தன்வாய்ந்த ......... *
காவலர்க்கதிபன்மாறன்றிருமுகங்காண்கவென்றார்.. .... .. ...... .. *

எ-று. அந்தப்பாண்டியராசன் ஏவலினாலே போனதூதர்கள் அழகியதிருப்பெருந்துறைக்குப்போய் அன்பினாலே சிவனுடைய திருவடிகளை வணங்கியிருக்கின்ற திருவாதவூரரைக்கண்டு வணங்கிச் சத்துருக்களுக்குக் கொடியதண்டத்தைச்செய்கின்ற இடியேறொத்த வேந்தனாகியும், மேன்மைபொருந்திய அரசர்க்கரசனாகியும், இருக்கின்ற பாண்டியனுடைய திருமுகம் இதுகாண்பீராகவென்று சொன்னார்களென்றவாறு......... .. . ................ ......... .........(௬௧)

அற்றமில்கொள்கைமிக்காரரன்றிருமுகமதன்றி ... .................... *
மற்றொருமுகமுங்காணமனமிலரிதன்மேலன்பு..... ....................*
பற்றிலர்பிறிதோரோலைப்படியெடுத்துரைமினென்ன ... ..... .....*
வுற்றதனியல்புவல்லானொருகியதுவந்துசொல்வான்...............*

எ-று. சோர்விலலாத கோட்பாட்டின் மிகுந்த திருவாதவூரர் பரமசிவன் திருமுகமல்லாமல் வேறொருமுகத்தையும் பார்ப்பதற்கு மனமில்லாதவராய் இந்தத்தூதர் கொண்டுவந்த திருமுகத்திலும் பற்றில்லாதவராய் வேறொருவோலைப்படியே யிதனையும் எடுத்

எ-து. பாண்டியன் எழுதிவிட்ட வோலையைக்கேட்ட மாணிக்கவாசகர்உமாதேவிபாகராகிய பரமசிவனுடைய அடியார்களே யெம்மை அடிமையாகவுடையரோயல்லாமல்தாமெனக்குத்தலைவனென்றும் தனக்குநான்பிழைசெய்தேனென்றும் பெரியவுலகத்தையாளுகின்ற அரசன்சொன்னது என்னவென்று மனத்திலேநினைத்தென்றவாறு...........................................................(கசு)

அந்தகனெழுதுமோலைகொண்டவன்றூதர்தாமும்.................*
வந்தெமையணுகமாட்டாருடையவர்மதுகையாலே.. ..............*
வெந்தொருகணத்தில்வீழமேவலர்புரங்கள்செற்றோர்............*
தந்தமரொருவர்க்கஞ்சத்தகுவரோவென்றுசாற்றி........ ........*

எ-து. எம்மை யடிமையாகவுடைய பரமசிவனுடைய வலிமையினாலே யமனெழுதுகின்ற ஓலையைக்கொண்டுவருவானால்விடப்பட்ட தூதரும்எமக்கிட்டத்தில்வந்து அணுகமாட்டார்கள் ஒருக்ஷணப் பொழுதிலேவெந்து விழும்படித் திரிபுரங்களையழித்த அக்கடவுளுடைய அடியார்கள் ஒருவருக்கு அஞ்சுவார்களோவென்று சொல்லியென்றவாறு.... ............................................(கஎ)

போயரன்திருத்தாளேத்திப்புண்ணியவடிவேபோற்றி............*
யாயிரஞ்சுடிகைப்பாம்பையலர்முடித்தாய்போற்றி.......... .*
மாயிருஞாலங்காக்குமன்னவனெழுதுமோலைப்.......... .... ...........*
பாயிரங்கேளென்றுமொழிந்தனர்பழுதிலாதார் ..... ..... ... *

எ-து. இப்படி நினைத்துப்போய்ப் பரமசிவனுடைய திருவடியைத் துதித்துப் புண்ணிய வடிவுமுடையவனே சரணம். ஆயிரம்பணமுடியையுடைய பாம்பை மலர்மாலையாகத் தரித்தவனே சரணம் மகத்தாகிய பெரியபூமியை ரக்ஷணைசெய்கின்ற அரசனெழுதிவிட்ட வோலையின் முகவுரையைக்கேட்டருளுமென்று பணிந்து ஸ்தோத்திரஞ்சொன்னார்பழுதில்லாத மாணிக்கவாசகரென்றவாறு.

கேடிலாவியலபிறைவுங்கேட்டிளமுறுவல்பூத்துப்...............*
பாடலாலெத்துந்தெய்வப்பான்மையர்க்குவந்துசொல்வார்......*
பீடிலாதவர்போலுள்ளரம்பேதுறவொழிவாயிந்த.. ..................*
நாடெலாமதிக்கநாமேநற்பரித்திரள்கொண்டேகி.... ..................*

எ-து. கெடுதலில்லாதவியல்பினையுடைய பரமசிவன் அதனைக்கேட்டுப் புன்சிரிப்புக்கொண்டு தமிழ்ப்பாடலால் தம்மைத்துதிக்குந்தன்மையையுடைய திருவாதவூரருக்குச் சந்தோஷித்துடனே சொல்வார் அறிவில்லாதவர்கள்போலக் கருத்திலேகொண்டபேதைமையை நீங்குவாயாக. இந்த நாடெலாமதிக்கும்படியாய் நாமேகுதிரைகொண்டுவருந்தென்றவாறு........ .......... ......................(கஅ)

தென்னவற்களித்துமீள்வோஞ்செழுந்திறற்றூதரோடு............※
மன்னனைக்குறுகிப்பெம்பால்வரவிடுமோலைதன்னுள்...............※
மூன்றுறக்கடிதுவந்தேனாவணித்திங்கண்மூல.............. ... ....※
மென்றுமதினத்திலிங்கேயெய்துநற்பரிகளென்பாய்..............※

எ-து. பாண்டியனுக்குக்கொடுத்துத் திரும்புவோம். மிகுந்த சௌரியத்தையுடைய தூதர்களுடனே அவ்வரச னிடத்துக்குப் போய் நீ வரவிட்ட ஓலையிலுலே முன்னதாகச் சீக்கிரத்திலவந்துவிட்டேன் ஆவணிமாத மூலநாளில் இங்கே நல்லகுதிரைகள் வருமென்று சொல்லுவாயாகவென்றவாறு........ ... ..................(௰)

தொன்மதிக்குலத்துமன்னன்றுயர்செய்வனென்றேசற்று........※
நீம்மனக்கவற்சிகொள்ளாதொழிகெனநீறுசாத்திப்................※
பொன்மணிக்கலன்களிப்புத்துகில்பிறவுந்தந்து...............※
மன்மனத்துவகைகூரமந்திரிப்பான்மைசெய்து ..................※

எ-து. பழமையாய்வருகின்ற சந்திரகுலத்துஅரசனாகிய பாண்டியன் துன்பப்படுத்துவானென்று சற்றும் உன்மனதிலே கவலை கொள்ளாதேயென்று விபூதிதரித்துப்பொன்னும்ரத்தினங்களாலுஞ்செய்த ஆபரணங்களும் அழகியவஸ்திரமும் வாகனமுதலியவைகளுங்கொடுத்து அவ்வரசன்மனத்தில் மகிழ்ச்சியடையும்படி மந்திரிகேற்றகோலஞ்செய்தென்றவாறு........ ....... (௰௧)

தென்றிசைக்கதிபன்றன்பாற்சென்றிதுகொடுத்துக்காண்டி..... ..※
யென்றுநன்மணியுநல்கியேகெனவிடுத்தபின்னர் ........ ....... .....※
அன்றகல்புனிற்றுவென்னக்கசிந்திருகண்ணீர்வார.... ......... .. ..※
நின்றுநின்றிறைஞ்சியையாநீத்தியோவென்றுநொந்து..... .......※

எ-து. தென்னாட்டிற்கு அதிபனாகிய பாண்டியனிடத்திலேபோய் இதைக்கொடுத்து நீகாண்பாயாகவென்று நல்லமாணிக்கமொன்று கொடுத்துப்போவென்று அனுப்ப அதன்பின்பு கன்றைநீங்கிப்போகுந் தலையீற்றுப்பசுப்போல இருகண்ணிலும் கசிந்துநீரொழுகும்படி நின்றுநின்று வணங்கி ஐயாவென்னை நீக்கினையோவென்றுமனநொந்தென்றவாறு.....................................(௰௨)

விழிப்புனலசிந்தச்சிந்தவிண்ணவன்விடைபெற்றேகிச் ..........※
சுழிப்புனல்வாவிசோலைசூழ்பெருந்துறையைநீங்கி ..................※
வழிக்குறுதுணையாயுள்ளவள்ளலைத்தொழுதுமோதிப்.......... ....※
பழிச்சுறுதூதரோடுமதுரையம்பதியிற்சென்றார்.....................※

எ-து கண்களிலேயிருந்து நீர் தாரைதாரையாயொழுக ஆராமையுடனே பரமசிவனிடத்திலே செலவுபெற்றுக்கொண்டுபோய்ச் சுழியையுடையநீர்மிகுந்த தடாகமுஞ் சோலையுஞ்சூழ்ந்த திருப்

பெருந்துறையைநீங்கி வழிக்குத்துணையாயிருக்கின்ற கடவுளுடை
ய பஞ்சாக்ஷரமும் உச்சரித்துக்கொண்டு சயலமைவணங்குகின்ற
தூதர்களுடனே மதுராபுரியிற்போந்தார்திருவாதவூரரென்றவாறு.

மதுரைமன்னவன்பூனேகிமனமிலாவணக்கஞ்செய்து ........ ... ❊
கதிர்மதிச்சடையோனீந்தகவின்கொண்மாமணிமுனலகி ....... ❊
யெதிருறநின்றபோதிலின்புறவழுநோக்கி ..... .............. ❊
விதிமுறையிருமிங்கென்னவிருந்தனர்விரிந்தநூலார் ..... ... .... ❊

எ-து. அம்மதுரை அரசனாகிய பாண்டியனிடத்திற்போய் மனத்தில் விருப்பமில்லாமற் புறத்தில வணக்கஞ்செய்து கிரணநிறைந்த சந்திரனைத்தரித்த சடையையுடைய பரமசிவங்கொடுத்த அழகுபொருந்திய மாணிக்கத்தைச் சமுகமாகவைத்து எதிராக நின்றமாத்திரத்தில் மனமகிழ்ச்சியுடனே பாண்டியராஜன் பார்த்து முறைமைப்படி இங்கேயிருமென்றுசொல்ல இருந்தார் விரிந்த நூலிலே வல்லவராகியமாணிக்கவாசகரென்றவாறு ........ (௩௪)

விலைமதிப்பிலாவந்தமேசகுமணியைப்பல்கா.... .... .... ❊
லிலையுறவியந்துநோக்கிநெஞ்சினுவகையெய்தித் . ... ..... ❊
தலையணிசிறந்தையுமோரிப்பவர்தமைநாடிச் ....... ..... .. ❊
சிலைமுகக்கரத்துமன்னன்செய்ததேதுரைமினென்றான் .... ...... ❊

எ-து. ஒருவராலும் விலைமதிக்கக்கூடாத அந்தமென்மைபொருந்திய மாணிக்கத்தைவியப்புடனே பலதரம் உற்றுப்பார்த்து மனத்திலேசந்தோஷப்பட்டுப் பரமசிவனைக் கருத்திலேவைத்திருக்கின்ற திருவாதவூரரைப்பார்த்து வில்லைக்கையிலேந்துகின்றபாண்டியன் நீர்செய்தகாரியமென்ன சொல்லுமென்று கேட்டானென்றவாறு .......... .............. (௩௫)

மலக்கொடும்பகையைவெல்வார்மன்னவன்முகத்தைநோக்கி.. ❊
நிலத்தொளிர்புகழின்மிக்காய்நீதருநிதிகொண்டேகி............ ❊
யிலக்கணக்குறைபாடின்றியிரிருகதியுமுண்டாங் ... .... ........ ❊
குலப்பரியினங்கள்யாவும்விலைக்குறக்கொண்டபின்னர் .......... ❊

எ-து. மும்மலங்களென்னும் கொடியபகைகளை வெல்லுகின்ற திருவாதவூரர் பாண்டியன் முகத்தைப்பார்த்துப் பூலோகத்திலே விளங்குகின்ற மிகுந்த கீர்த்தியுடைய அரசனே நீகொடுத்த திரவியத்தைக்கொண்டுபோய் இலக்கணங்களொன்றுங்குறைபாடில்லாமல்நான்குகதிகளுமுடைய நல்லசாதியான குதிரைக்கூட்டங்களெல்லாம் விலைக்குக கொண்டபின்பென்றவாறு.. .. .. ..... .....(௩௬)

அரும்பரித்தொகுதியெல்லாமணிதிகழ்மதுரைக்கேகப் ........ . ❊
பொருந்தியதினமேதென்னப்புகரர்விதியிற்றேர்ந்து............❊

ளுக்குச்செய்த பலபல ஆபரணங்களைத் தரித்துக்கொள்ளுமென்று கொடுத்து முன்போலத்தானே இராஜகாரியங்களெல்லாஞ் சொல்லி வீட்டுக்குப்போமென்று விடுத்தான் பாண்டியராசனென்றவாறு............ (௱௰)

தம்பதி மனையிற்சென்றுதாபதர்வைகப்பின்னர் ............*
நாம்பரிச்சமுகமெய்துநாளிரண்டென்றுமுன்னர் ............*
வெம்படைச்சுற்றநீங்கியிருந்துழிவிரிந்தசேயி ............*
யம்புவிக்கரசன்றன்முனமைச்சரிலொருவன்சென்று ............*

எ-று. தம்முடைய பெரிய அரமனைக்குப்போய்த் திருவாதவூரரிருக்கப் பின்பு நல்லகுதிரைக்கூட்டங்கள் வரவேண்டியதினத்துக்கு இரண்டுநாளுக்குமுன்னே விரியப்பெற்ற சமுத்திரஞ்சூழ்ந்த புவிக்கரசனாகிய பாண்டியன் வெவ்விய சேனாபதிகள் சுற்றங்கள் யாவரையும் நீக்கித் தனித்திருக்கும்போது மந்திரிகளிலே ஒருவன் முன்னே போயென்றவாறு............ (௱௰௧)

போற்றியெம்பொருனைநாடபோற்றியென்றிறைஞ்சிக்கூறு ......*
மாற்றமுண்டென்றுநின்பேர்புனைந்துவரிசைபெற்றோர் ......*
சாற்றருந்துரகங்கொள்ளநேரியன்றலத்திற்சார்ந்து ......*
நீற்றினனடியார்கையினின்பொருள்யாவுமீய்ந்தான் ......*

எ-று. பொருனைநாடனாகிய அரசனே சரணஞ்சரணமென்று வணக்கஞ்செய்து யான்சொல்லுகின்ற விண்ணப்பமொன்றுண்டு அஃதென்னெனில் தென்னவன் பிரமராயனென்று நின்பெயரைத் தரித்திருக்கின்ற வரிசைபெற்றோராகிய மந்திரியார் சொல்லுதற்கரிய குதிரைகொள்வதற்குச் சோழனுடைய தேசத்துக்குப்போய்த் திருநீறுதரிக்கின்ற பரமசிவனடியார்கையில் உன்னுடைய திரவியங்களெல்லாம் கொடுத்துவிட்டாரென்றவாறு ....... .. (௱௰௨)

தீயபெருந்துரோகியெழுதுநின்றோலைகாட்டும் ............*
பின்புவந்தனனீற்றமொழித்துயிர்பிழைத்தலெண்ணி ............*
யன்புடையவர்போலுன்றனடியிணைகுறுகிப்பின்னர் ............*
நன்பரித்திரளிங்கெய்துநாளுனக்களிப்பலென்றார் ............*

எ-று. பெரியவஞ்சமுடைய தூதர்கள்போய் நீரெழுதியவோலை காட்டியபின்பு அவர்வந்து உமது கோபத்தைநீக்கித் தம்முயிர் பிழைப்பதாகக்கருதி அன்புடையவர்கள்போல் உமதுதிருவடியைச் சேர்ந்து ஆவணிமூலத்தில் நல்லகுதிரைக்கூட்டங்களிங்குநாளுனக்குத் தருவேனென்றாரென்றவாறு............ .... (௱௰௩)

மற்றவர்மொழிந்தவெல்லாம்பொய்யுரைமன்னவென்னச் ......*
சொற்றமிழ்வையைநாடன்றுதனைவெருவநோக்கி ............*

பற்றமில்சுருதிவல்லாருட்பெருந்துறையிலெய்தி ................ *
புற்றவெம்பரிகளுண்டேலெல்லவந்துரைமினென்றான்........ *

எ-து. அந்தத்திருவாதவூரார்சொன்னவார்த்தையெல்லாம்பொய்வார்த்தையாகும் அரசனேயென்று சொல்லிப் பாண்டியராசன் உடனே தூதர்கள் அங்கம்படிப்பார்த்துச் சோர்வில்லாத வேதத்தில் வல்லபெரியோர்கள் வசிக்கின்ற மகிமைபெற்ற திருப்பெருந்துறைக்குட்போய் அங்கே குதிரைகள் இருக்கின்றனவாவென்று சீக்கிரத்தில் பார்த்துவந்து சொல்லுங்களென்று னென்றவாறு.

அருந்திறற்றூதரேகியத்தினங்கடிதுமீண்டு.............................. *
வருந்திமுன்சென்றுமன்னர்மன்னனைவணங்கிநின்று........ ..... *
பெருந்துறையென்றுமூரும்பிறதுறைபலவுந்தேடிக்............. *
கருந்தடங்கணிறைவேந்தகண்டிலம்பரிகளென்றார்........ ......*

எ-து. அரியதிறத்தையுடைய தூதர்கள்போய் அன்றைத்தினத்தானே சீக்கிரத்திலேதிரும்பி வருந்தினதோம் மன்னர்மன்னனாகிய பாண்டியன்முன்னேவந்து வணங்கிக் கரியமலைகள்போன்ற யானைகளையுடையவரசனே திருப்பெருந்துறையென்னுமூரிலும் அடுத்தமற்றவூர்களிலும் தேடிப்பார்த்தோம் குதிரைகளைக் காணவில்லையென்றார்களென்றவாறு.......................................(௩௰௨)

பாங்குறுநின்னவாறுபகர்தலும்வெகுட்சியெய்தி .. ..... ..... *
யீங்குநங்கருமஞ்செய்வனென்றிடர்செய்வான்றன்னைத்... ..... ...*
தாங்கருந்துயரஞ்செய்துதகைத்துறந்தனத்தையெல்லாம்.. .....*
வாங்குமின்றண்டலாளரென்றிகன்மன்னன்சொன்னான்....... .. *

எ-து. தூதர்களிந்தப்பிரகாரஞ்சொன்னமாத்திரத்திலே கோபமடைந்து இங்கேநம்முடையகாரியஞ்செய்கிறேனென்றுபோய் நமக்குத்துன்பஞ்செய்தவனைப் பொறுத்தற்கரிய துயரஞ்செய்துமறித்து நம்முடைய திரவியங்களையெல்லாம் வாங்குங்கள் தண்டற்காரர்களேயென்று ஆஞ்ஞாபித்தான் வலிமையையுடைய பாண்டியராசனென்றவாறு.......................................(௩௰௩)

மன்பெருந்தண்டலாளர்மறையவர்குலத்துமிக்கார்....... .........*
முன்புநின்றினையசொல்வார்முனிவுடைமுகத்தராகி......... .. .....*
நன்பரித்தொகுதிகொள்ளநயந்துமக்கந்தானீந்த..................*
தன்பொருளெல்லாம்வாங்கச்சாற்றினன்றெம்மன்னன்.. ... ......*

எ-து அரசனுடைய பெரியதண்டற்காரர்கள் பிராமணகுலசிரேஷ்டராகியதிருமாணிக்கவாசகர் முன்னேநின்று இவைகளைச் சொல்வார்கள் கோபத்தையுடைய முகத்தினராகி நல்லகுதிரைகளைக்கொள்ள நயமுடனே உம்முடையகையில் அந்நாளிற்கொடு

த்ததன்னுடைய திரவியமெல்லாம் வாங்கச் சொல்லினன் கோபத் தையுடையபாண்டியனென்றபின்னுஞ்சொல்வார்களென்றவாறு.

மற்றிதன்பயனியாதென்னின்மன்னவன்விடுப்பவெந்தி.........*
யுற்றவன்றூதர்வல்லேயோண்பெருந்துறையிலெய்திக்.........*
கொற்றவெம்பரிகள்காணார்மீண்டனர்கேவுறும்பாத் ............*
பற்றியதேசம்விட்டான்பாரினியாளவொட்டான்...................*

எ-து இப்போது நாங்கள் பணத்தைக் கேட்பதற்கு நியமித்த மெய்ம்மையெனில் அரசனாலே விடுக்கப்பட்ட வெற்றிபொருந்திய வலிமையுடைய தூதர்கள் சீக்கிரத்திலே திருப்பெருந்துறைக் குட்போய் வெற்றியையுடைய வெவ்விய குதிரைகளைக் காணுமல்வந் துவிட்டார்கள் ஆகையால் அரசனும் உம்மிடத்திலே வைத்தநேச த்தைவிட்டான் இனிப்பூமியையும் ஆளவொட்டானென்றவாறு.

தனமினித்தருதல்வேண்டுமென்றவன்றண்டலாளர்.................*
சினமுடன்புகலவாளாவிருந்தனுந்தீமைகூரு.........................*
நினையுடனமைச்சர்வாழ்வுநீக்கிமெய்வாக்கின்மன்னர்..............*
தனிபுறவலியிறுக்காவற்சாலையிலாக்கினார்கள்........................*

எ-து. திரவியமுழுவதுங்கொடுக்க வேண்டுமென்று பின்பு தண் டற்காரர் கோபத்துடனேசொல்லப் பேசாமலிருக்கவே அவர்க ள் தீமையிருந்த மனதுடனே அமைச்சுரிமையைநீக்கி உண்மை வாக்கையுடைய மாணிக்கவாசகரை வலிமையாகச் சிறைச்சாலையில் வைத்தார்களென்றவாறு.................................... (௩௰௬)

சற்றுமுட்டளர்விலாதன்மையின்வாதவூரர் ......................*
மற்றவர்செலுத்தச்சென்றவன்சிறைச்சாலையெய்த...................*
உற்றவர்வருத்தங்காணநாணமுற்றொளிப்பான்போன்று ........*
பொற்றடந்தேரின்வெய்யோன்போய்க்குடபான்மறைந்தான்..*

எ-து. சற்றுமியினும்மனத்தளர்ச்சியில்லாததன்மையையுடையவ ராய்த் திருவாதவூரானவர் அந்தத்தண்டற்காரர் செலுத்தப்போ ய்வலியசிறைச்சாலையையடைய, நல்லதவத்தையுடைய இவரது வ ருத்தத்தைப்பார்க்க நாணமடைந்து ஒளிப்பவனைப்போலப் பொன்மயமாகிய விசாலம்பொருந்திய தேரினின்றும் சூரியன் போய் மேற்குத்திசையின்கண்மறைந்தானென்றவாறு ௩௰௭

கள்ளுலாமிதழிமாலைக்கவின்பெறமுடித்தவேணி.....................*
வள்ளலாரேவச்சென்றவழுதிமேல்வெகுட்சிகொண்டு...... ......*
வெள்ளைவான்பிறைப்பற்றென்றவிழுங்கவங்காந்தபேயின்..... .*
கொள்ளிவாயனையவண்ணங்கொண்டதுசெக்கர்வானம்..... . ...*

எ-து. தேனுலாவியகொன்றைமாலைகளை அழகுபெறமுடித்த

சடையையுடைய பரமசிவன் எட்டிப்போய்ப் பாண்டியன்மேற் கோ
பங்கொண்டு வெகுண்டதுபோலாகிய பிறைப்பல்லானது தோன்ற
விழுங்கவரையைத் திறந்த கொள்ளிவாய்ப்பிசாசம்போல் வடிவுகொ
ண்டதுசெக்கர்வானமென்றவாறு ........................ (௩௨௧)

தெண்டிரையுலகினல்லறிஞர்க்குற்றதீங்கு .................. *
கண்டனசிரிப்போர்போலநகைத்தனகவின்கொண்முல்லை ........ *
யொண்டமிழ்வாதவூரர்க்குற்றதைபுணர்ந்தேதுன்பங் ........ *
கொண்டவரியம்போலக்குவிந்தனகமலமெல்லாம் .................. *

எ-று. தெளிந்த அலைநீர் சூழ்ந்த உலகத்திலே நல்லயோக்கியர்
களுக்குச் சம்பவித்த தீங்கைப்பார்த்த சிறியர்கள்போல வாச
னைகொண்ட முல்லைச்செடிகள் சிரித்தன ஒள்ளியதமிழ்வேதமோதா
நின்ற மாணிக்கவாசகருக்கு வந்ததீங்கைத்தெரிந்து துன்பங்கொ
ண்ட பெரியோர்கள்சிந்தைபோலக் குவிந்தனதாமரைமலர்களெல்
லாமென்றவாறு .................................... (௩௨௨)

தென்னவன்வைத்தகாவற்சிறையினிலுறையுந்தெய்வ ........ *
மன்னவரொருவர்கண்ணுறுதுயர்வாரோங்கிற்றென்ன .......... *
பிசினல்கொண்மனத்தார்போலவிருட்கரங்கொண்டுகூடி .... *
பொன்னருள்வாரர்கண்கள்புதைத்தனவிசும்புமெல்லாம் .. *

எ-று பாண்டியனால் வைக்கப்பட்ட சிறைச்சாலையிலே தங்கி
ய தெய்வத்தன்மையுடைய திருவாதவூரர் ஒருவர் கண்டதுயரமா
கிய வாரோங்கி துன்பங்கொண்ட மனமுடையவர்போல இருளாகிய
கைகளைக்கொண்டு அழகிய மதுரைமாநகரிலுள்ளவர்கள் கண்களைப்
புதைத்தன இராத்திரியாகிய பெண்ணென்றவாறு ... (௩௨௩)

மன்பகைதுரப்பநின்றமந்திரித்தலைவர்க்குண்டா ...... *
மென்புருமுறுதோயந்தேரவெவ்வெசெய்துமென்றிரங்கி .. *
யன்பனாயகன்றனெஞ்சாலழவுயிர்த்துமாழ்குற்ற ..... *
துன்புடைமடவார்போலத்துயின்றிலர்மதுரையுள்ளார் ..... *

எ-று. பாண்டியனுடைய பகையை நீக்கிவென்றுநின்ற ம
ந்திரிகளிலே முதன்மைபெற்ற திருவாதவூரருக்கு உண்டா
மென்று சொல்வதுமன்றோ ஐயோ இதற்குநா மென்னசெய்
வோமென்றிரங்கித் தலைவனைப்பிரிந்த ஆற்றாமையுள்ளமனத்தோ
டு அழலாகிய பெருமூச்சுவிட்டு மயங்குகிற துன்பத்தையுடை
ய மாதர்போல அவ்விராவில் நித்திரைசெய்திலர் மதுரையிலுள்ள
வர்களெல்லாமென்றவாறு .................................. (௩௨௪)

செம்மனப்புனிதற்குண்டாந்தீங்குதங்கிழமையாலே .......... *
வெம்முரசுகடவுளீற்றவருமுகத்தொடாக்கமாபோல் ........ *

விம்முசெஞ்சூட்டுமுட்டாள்வியஞ்சிறைச்சேவலெல்லாந் ............*
தம்மனையிடங்கடோறுந்தழங்கினபுலரிக்காலை ........................*

இ-ள். நல்லமனைத்தலையுடைய பரிசுத்தரான திருவாதவூரருக்கு உண்டாகிய தீங்கினைத் தங்களுக்கிருக்கின்ற உரிமையினாலேஐந்து முகத்தினையுடைய பரமசிவனின்றருளிய ஆறுமுகசுவாமிக்குச் சொல்வதுபோலப் பருத்த சிவந்த உச்சிக்கொண்டையும் முள்ளையுடைய காலையும் பெரியசிறைகளையுமுடைய சேவல்களெல்லாம் தங்கள்தங்கள் வீடுகள்தோறும் விடியற்காலத்தில் சத்தித்தனவென்றவாறு.. ......... ............... ........................ ...........(௱௨௫)

சிற்பரமுணர்ந்துஞானச்செந்தமிழோதுநீதிப் ................ .......*
பொற்பினையுடையோரின்னல்பொறாதுசென்றுரைப்பார்போல*
விற்பொலிசடிலச்சூலவேலவனாலவாயி ........ ........................*
லற்புதப்பொலிவின்மன்றிலார்த்தனசங்கமெங்கும்.......................*

இ-ள். பரமசிவத்தினது யதார்த்தவடிவையறிந்து செவ்விய தமிழ்வேதமென்கின்ற ஞானநூலையோதும் நீதியையுடைய மாணிக்கவாசகரது துன்பத்தைப்பொறுக்கமாட்டாமற்போய்ச்சொல்லுகின்றவர்கள்போலப் பிரகாசம்பொருந்திய சடையையுடையவராயும், சூலாயுதத்தை யுடையவராயும், திருவாலவாயிலெழுந்தருளியிருக்கின்ற சொக்கநாயகர் சன்னிதிக்குமுன்னே அனேகசங்கங்கள் முழங்கினவென்றவாறு.... ............... ........................(௱௨௬)

எம்மிறைபரியிலேறுநாளிதோவென்றுபார்க்குஞ் ........ ........*
செம்மலர்மடவாளிட்டதிலகசிந்தூரம்போல ............ ...........*
வம்மலியிசைபேவைகியாடகக்கிரிசூழ்போந்து... ....... ..... ..... *
மைம்மலிகடன்மேல்வந்துமுளைத்ததுவாலபானு ......................*

இ-ள். எம்முடையகடவுள் குதிரையிலேறிவருகின்ற நாளிதுதானென்று பார்க்கின்ற செந்தாமரைப்பூவில் வீற்றிருக்கப்பெற்ற திருமகளணிந்த சிந்தூரப்பொட்டுப்போலமேருமலையில் அஸ்தமித்து மகாமேருமலையைச் சுற்றிக்கொண்டுவந்து கருமையிருந்த கீழ்க்கடலிலே உதயமாகும் இளஞ்சூரியனென்றவாறு.... (௱௨௭)

மன்கெழுசெங்கோல்வேந்தன்வைகறையெழுந்துநீராற்.... .. .. *
கண்கழல்விளக்கிமூழ்கிக்கண்ணுதற்பூசைசெய்து..... ..............*
தண்கதிர்முத்தமாலைதரித்துநற்கலன்கடாங்கி .. ... ......... .... .*
விண்கிளர்செம்பொற்கோயின்முகப்பினில்வீற்றிருந்தான்.... ..*

இ-ள். பூவுலகத்திற் செங்கோல் செலுத்துகின்ற பாண்டியன் விடியற்காலத்தில் நித்திரையையொழித்து கண் காலமுதலிய அவயவங்களைச் சுத்திசெய்து ஸ்நானஞ்செய்து சிவபூசைசெய்து குளிர்ச்சிபொருந்திய கிரணங்களையுடைய முத்துமாலைகளைத்தரித்துக்

கொண்டு நல்ல ஆபரணங்களையணிந்துகொண்டு ஆகாசமளாவிய செம்பொற்குன்றுசெய்த தன்னுடைய அரமனைமுகப்பிலேவந்து வீற்றிருந்தானென்றவாறு.... .... .... ............ ... . (௱௨௮)

வன்றிறலாரெல்லாம்வாம்பரித்திரள்களென்னவான்........ .......※
சென்றாண்டியார்க்கீந்தசெம்பொருடாரிராவில்.................. ..※
வின்றமைவருத்தஞ்செய்துமென்றெறிவெயிலினூடு........ ........ ..※
நின்றிடுமென்னநின்றார்நீள்பெரும்புகழினிற்பார்..... ..............※

எ-து. வலிய சௌரியத்தையுடைய தண்டற்காரர்களெல்லாம் தாவுகின்ற குதிரைக்கூட்டங்கள் கொள்ளப்போயச் சிவனடியார்களுக்குக் கொடுத்துவிட்ட நல்ல திரவியத்தைத் தாமாட்டீரானால் இன்றைக்கு உம்மை வருத்தப்படுத்துவோமென்று எறிக்கின்றவெயிலிலே நின்றிடுமென்று சொல்ல அப்படியேநின்றார் மிகுந்த புகழில் நிற்பவராகிய திருவாதவூரரென்றவாறு.............(௱௨௯)

அங்குநின்றிளைப்பார்தம்மையாண்டவாண்டகையையுன்னி.....※
யிங்குணர்ந்திலைகொல்லோவென்றுதம்மனத்தேசொல்லிச்...※
சங்கவெண்குழையாய்மன்னன்றனக்குவாம்பரிகளீந்த..............※
னங்கடனாகுமென்றுநவின்றசொற்பொய்ம்மையாமோ ........ ..※

எ-து. அந்த வெயிலிலே நின்று இளைப்பாராகிய மாணிக்கவாசகர்-தம்மையாண்டகுருவை நினைத்து இங்கே எனக்குநேரிட்டவருத்தத்தை அறிந்தாயில்லையோவென்றும், வெள்ளிய சங்கக்குழையையுடைய பரமசிவனே பாண்டியனுக்குத்தாவுகின்ற குதிரைகள்கொடுப்பது நம்முடையகடனாகுமென்றுசொன்னசொற் பொய்ம்மையாமோவென்றும், தம்முடையமனத்திற் சொல்லுவாரென்றவாறு. .......................(௱௩௰)

ஊனுடம்புடையவாழ்க்கையொழித்துனக்கடிமையென்று .....※
மாநிலம்புகழுமாறுவந்தெனையாட்டுத்தென்றன்னை .................※
மீனவன்றன்பால்மீளவிடுத்தனைவேலைநீரு.................. ...........※
ரானபினந்நீராற்றுநீரெனவாவதுண்டோ..... ........................ ※

எ-து. மாம்சபிண்டமாகிய தேகவாழ்வைநீக்கி உனக்கு அடிமையானவனென்று பெரியவுலகத்தார் சொல்லும்படிவந்து உன்னைப்பெற்ற அடியேனைப் பாண்டியனிடத்தில் மறுபடியும்விட்டாய் ஆற்றுநீர் சமுத்திரத்துடனே கலந்தபின்பு அக்கடல்நீராகுமேயல்லாமல் ஆற்றுநீராவதுண்டோவென்றவாறு...... .........(௱௩௧)

அறந்தனிச்செலவிபாகவம்பிலேனிப்பவென்று.....................※
பெறுந்திறலடியேற்கிங்குவேறொருதுணையுமில்லை..... .... .......※
செறுநதுபுரங்களெல்லாஞ்செற்றவனடியான்றன்னை......... ※
நிறுத்துணர்வெயிலிலென்றுநின்புகழ்க்கேற்றதாமோ......... ..※

எ-று. முப்பத்திரண்டு தருமத்தையும் வளர்க்கின்ற ஒப்பற்ற உமாதேவியையொருபாகத்திலேவைத்த கடவுளே உம்மிடத்திலே அன்பிலேனென்று என்னை வெறுத்துவிட்டால் அடியேனுக்கு இங்கே வேறொரு துணையுமுண்டோ பெரியதிரிபுரங்களைக் கோபித்து எரித்த சிவனுடைய அடியானை வெயிலிலே திறந்திட்டீர்களெ ன்றால் உம்முடைய கீர்த்திக்குப் பெருமையாகுமோவென்றவாறு.

வானுடைவர்க்குமேலோய்வந்துனக்கடிமையிட்டோ...............*
தானநானிழிம்பையுற்றலாருனக்கடிமையாவார்.. ........ ..........*
நானெனுமானத்தார்சொல்லுநல்லினையன்றிநின்ற..... . ...... .*
வீனருமொருவன்சொல்வதேறுமோவுரைத்திடென்றார் ... ....... *

எ-று. தேவர்களுக்கு மேலானவரே-வந்து உமக்குஇப்போது அடிமையானநான் துன்பப்பட்டால் ஆருனக்கு அடிமைப்படுவா ர்கள் யானென்னும் அகந்தையையறுத்த நல்லமனத்தையுடைய வர்கள் சொல்லுகின்ற நல்லசொல்லல்லாமல் ஈனனாகியஎன்னுடை ய சொல்லானது செவியிலேறுமோவென்றொன்றவாறு...(௱௯௩)

அவத்தொழில்புரியாமேன்மையன்பருக்கன்புசெய்து...... ... .. *
பவக்கடலிடைவிழாமற்பரிந்தருட்பார்வைநல்கித்........... ......*
தவப்பெருவடிவங்கொண்டுதாளளித்தாளுமையர்..... ........... ..*
செவிப்புலம்புகுந்ததன்பர்செப்பியமாற்றமெல்லாம்............*

எ-று அவத்தொழிலைச்செய்யாத மேன்மையையுடைய அன் பரிடத்திலே கிருபைசெய்து பிறவிக்கடலிடைவிழாமல் அன்புட னே கிருபாநோக்கமருளிக் குருமூர்த்தமாக வெழுந்தருளித் தி ருவடியைக் கொடுத்தருளுகின்ற பரமசிவனுடைய செவியினிட யாக நுழைந்தது திருவாதவூரர் சொல்லிய சொற்களெல்லாமெ ன்றவாறு ...... ................ .... ... .... ...................... .(௱௯௪)

காம்படுதோளிபாகன்கண்ணுதலண்ணலன்பர்........ .. ...... .. *
தாம்படுதுயரமெண்ணியத்துயர்தணிக்கவேண்டித்...... ...... ... *
தேம்படுமலங்கன்மார்பிற்றென்னவன்றனக்குவென்றி... . .... *
வாய்பரியளித்தல்சொல்வாம்வல்வினைப்பகையைவெல்வாம்..... ...*

எ-று, மூங்கிலினையொத்த தோளினையுடைய உமாதேவிபாக னாகியும் நெற்றிக்கண்ணினையுடையவனாகியும் இருக்கின்ற பரமசிவ னுடைய அடியாராகிய திருவாதவூரர் படுகின்றதுயரத்தைநினைத் து அத்துயரத்தைநீக்கவேண்டி வாசனைபொருந்திய வேப்பமாலை யணிந்த மார்பையுடைய பாண்டியனுக்கு வெற்றியையுடைய தா வுகின்ற குதிரையைக்கொடுத்த கதையைச்சொல்லித் தீவினைப்ப கையை வெல்லுவாமென்றவாறு..... ............... . .. .. (௱௯௫)

திருப்பெருந்துறைச்சருக்கம் முற்றுப்பெற்றது. ஆ. ௱௮௰௨.

திங்கள்வெண்குடைமன்னவாரியதேசவெம்பரியின்றாநந் ........*
துங்கவன்மதிளின்புறத்துத்துவன்றிவந்தவெனச்சொன்னார் ........*

௪-து. அங்கேநின்றவர்கள்போய் வேப்பமாலையைத் தரித்த பாண்டியனைவணங்கி எவ்விடத்திலுந் தூசுகளெழும்பிநெருங்கவும் சின்னங்கள் முழங்கவும் சந்திரவட்டக்குடையையுடைய அரசனே ஆரியதேசத்துக் குதிரைகளின்றைக்கு நம்முடைய உயர்ந்த வலிமையான மதிற்புறத்து நெருங்கிவந்தனவென்று சொன்னார்களென்றவாறு ........(௪)

வாசியின்றிரள்வந்ததுவென்றலும்வாதவூருறையையர்மே ........*
ன்னசையவைத்தவர்தம்மைமுன்னரழைத்துநீள்கவிகையாநிழந் ........*
ஆசிலவெம்பரிகாணவம்மினெனக்குருதியங்கெழுந்தடையலார் ..*
கூசநிலபடைசூழவேயிறை கோயிலின்புறமெய்தினான் ........*

௫-து குதிரைக்கூட்டங்கள் வந்தனவென்று சொன்னமாத்திரத்திலே திருவாதவூரரிடத்திலே நேசம்வைத்து அவரைவரவழைத்து வெண்சாமரமுதலிய வெகுமதிகள்கொடுத்துக் குற்றமில்லாத வெபவியகுதிரைகளைப் பார்க்கவாருமென்றுசொல்லி எழுந்து சத்ருக்களுமஞ்சத்தக்க தன்னுடைய சேனைகள்சூழப் பாண்டியராசனானவன் அ. மனையைவிட்டுப் புறத்துவந்தானென்றவாறு (௫)

[ ௬ வ து. ]

வண்டுபடியலங்கனெடுந் தடந்தோண்மாறன் - மணிச்சிவி
கையேற்றிமதுரைமூதூர், கண்டிருகண்களிக்கும்வகையால
வாயந்-கடவுளிருமைபரிவரவுகாண்பானெண்ணிச், செண்டுவெ
ளிசவிப்போந்துபனிநீர்தோய்ந்த-செழுங்கழுநீர்மதுமால
ற்றுந்தூங்குந், தண்டாரமணிப்பந்தர் நிழற்கீழ்ம்பொ
ற் - றவிசின்மிசையினிதிருந்தான்றானைசூழ ........*

௬-து. வண்டுகள்மொய்க்கின்ற வேப்பமாலையையணிந்த நெடிய விசாலம்பொருந்திய புசத்தையுடைய பாண்டியனானவன் ரத்நச்சிவிகைமேலேறிக்கொண்டு பழமையாகிய மதுராபுரியிலுள்ளவர்கள்பார்த்து இரண்டுகண்களுங் களிக்கும்படித் திருவாலவாயிலிருக்கின்ற சொக்கநாயகர் கொண்டுவருகிற குதிரைகளின்வரவினைக்காண நினைத்து வையாளிவெளிக்குப்போய்ப் பனிநீர்தோய்ந்த செழுமைபொருந்திய செங்கழுநீர் மாலைசிறந்து தொங்குகின்ற குளிர்ச்சிபொருந்திய முத்துப்பந்தலின்நிழற்கீழ் அழகிய பொன்னிற்செய்த சிம்மாசனத்தின்மேல் இனிதாகவிருந்தான் சேனைகள்சூழவென்றவாறு ........(௬)

முத்தமிழின்றிறதவிலும் புலவர்சூழ - முதுமறையோர்மங்க
லச்சொன்முறையிற்கூறத், தைத்திகழுமவலேபுலப்படக்கவண

துத்திரண்மணிச்செழுஞ்சோதிமாமுடிப்.................... *
பார்த்திவன்விழிநலம்பருகவீதியிற்.... ..................*
கூத்தினர்செயலெனக்குலாவுவாம்பரிச்.... ............*
சாத்தவர்வரும்பெருந்தன்மைகூறுவாம்....................*

எ-து. பரிசுத்தமாகிய [illegible]சிபொருந்திய ரத்தினம்பதித்துப் பிரகாசிக்கின்ற பெரிய கிரீ[illegible]த்த அரசனுடைய கண்கள் விருந்[illegible]ணவீதியினிடத்திலே கூத்தாடிகள் செய்கையைப்போல விளங்கித் தாவுகின்றகுதிரையை நடத்தி ராவுத்தர்கள் வருகின்ற பெரியதன்மையைச் சொல்லுவாமென்றவாறு......................(௰)

கட்டியசுரிகையர்கலிங்கொள்வாளினர்.........................*
பொட்டணிநுதலினர்பொலஞ்செய்மேனியர்.. .......*
பட்டுடைமருங்கினர்பவளநீள்வடம்.........................*
விட்டொளிவிளங்கியவியன்கொண்மார்பினர்..........*

எ-து. அரையிலேகட்டிய உடைவாளினையுடையவரும். அழகிய சுரிகையையுடையவரும். சந்தனப்பொட்டணிந்தநெற்றியையுடையவரும். பொன்னிறமாகிய மேனியையுடையவரும் பட்டுவஸ்திரத்தையணிந்த அரையையுடையவரும். விட்டுவிட்டு ஒளிசெய்கின்ற பவளமாலையணிந்த விசாலமாகிய மார்பையுடையவருமென்றவாறு.................................................(௰௧)

புன்மயிர்ப்பீலியர்புலியின்றோலினர்.......................... *
பின்மலர்ப்பாசிலைபிணைந்தகுஞ்சியர்...... ..............*
வன்மொழிக்குரலினர்வயங்குதூணியர்.................. *
வில்மலிகரத்தினர்வெறித்தபார்வையர்.. ..... ..........*

எ-து. இலேசாயிருக்கின்ற மயிர்ப்பீலியையுடையவரும் புலித்தோலையுடையவரும் பின்புறத்தில் தாழ்கின்ற குடுமியிலேமலரும் பச்சிலையும்சேர்த்துக்கட்டிய மாலையையணிந்தவரும் உரத்தசொல்லையுடைய குரலினரும் பிரகாசிக்கின்ற அம்பறாத்தூணியையுடையவரும் வில்லேந்திய கைகளையுடையவரும் வெறிச்சபார்வையையுடையவருமென்றவாறு.............. ......(௰௨)

பொன்னியல்குழையினர்பொலங்கொண்மாலையர்...*
பன்னிறச்சாத்தினர்பணைத்ததோளினர்..................*
சென்னியிற்றிகழ்மணியிலங்குசேடனைப்.. ............*
பின்னிவிட்டலைதரப்பிணைத்தகுஞ்சியர்.............. .*

எ-து. பொன்னாற்செய்த குண்டலத்தையுடையவரும் பொன்னரிமாலையையுடையவரும் பலநிறத்தையுடைய தலைச்சாத்தணிந்தவரும் பருத்தபுயத்தையுடையவரும் சிரோரத்தினம் விளங்கு

கின்ற. ஆதிசேடனைப் பின்னிவிட்டதுபோலப் பின்னிய குடுமி
யை யுடையவருமென்றவாறு .......... (௰௩)

தாக்கியபளிங்கையுந்தயங்குவேல்களும் .......... *
வாங்கிரசிலைகளுங்கணையும்வாளுமாய் .......... *
ஞாங்கரினிவர்வாதாட்பட்டோன்றினர் .......... *
தேங்கியநதிமதிச்சென்னியண்ணலார். .......... *

எ-து. தாங்கப்பெற்ற உடைவாள்களும் பிரகாசிக்கின்ற வேலா
யுதங்களும் வளைந்த வில்படைகளும் அம்பும் கத்திகளும் உடை
யவருமாய்ப் பக்கங்களிலே இவர்கள்வர நடுவிலேயத்தார் அயரா
வொன்றும்தேங்கப்பெற்ற கங்காநதியையும் மூன்றாம்பிறைச்சந்
திரனையும் முடித்த சிரத்தையுடைய பரமசிவனென்றவாறு.(௰௪)

[ வே-று. ]

தச்சரவுச்சிமணிதன்னுமொருவன்னைச் .......... *
கச்சிடையிறுக்குதாகனின்கொருடைவாளும் .......... *
பச்சைமுழுநீலமொழிபல்னிறவடந்தோள் .......... *
செச்சைநிறமொப்பியதிரண்டவிருதோளும .......... *

எ-து. தன்னுடைய சர்ப்பத்தினது சிரோரத்தினம் பதித்து
விளங்கிய நிறத்தையுடைய கச்சை இடையிலேகட்டி அதனிடத்
திலேசொருகிய அழகைக்கொண்ட உடைவாளும் பச்சை நீலம
முதலிய பலநிறத்தையுடைய ரத்நமாலைகளணிந்த சிவந்த நிறத்
தையுடைய நிரட்சிபொருந்திய இரண்டு புயங்களுமென்றவாறு.

ஒப்பரியசட்டையுமுடித்திலகுபட்டுந் .......... *
தொப்பியுமுகத்திடைதுலக்கமுறராகிச் .......... *
செப்பருநலங்குலவுசெண்டொருகைகொண்டே .......... *
யிப்படியிலிப்படியம்யாவருளரொன்ன .......... *

எ-து உவமைசொல்லுதற்கரிதாகிய அங்கியும் உடுத்து விளங்
கிய பட்டுடையும் தலைச்சாத்தும் உடையவராயும் திருமுகத்திற்
பிரகாசமுள்ளவராயும் சொல்லுதற்கரிய தன்மையிருந்த குதிரை
ச்சவுக்கை ஒருகையிலேகொண்டு இந்தப்பூமியிலே இந்தவடிவ
முள்ளவர்கள் யாரிருக்கிறார்களென்று சொல்லவென்றவாறு.௰௫.

கட்டுபடிமீதின்மணிகச்சைமணிமுன்பி .......... *
னிட்டவிருபக்கமணியின்னொலிபுலம்பப் .......... *
பட்டிலகுபக்கரைபணிக்கவரியெட்டும் .......... *
விட்டொளிவிளங்குமொருவெண்பரியிலேறி .......... *

எ-து. அங்கவடியிற்கட்டிய மணிமாலைகளும் கச்சையிற்கட்டி
ய மணிமாலைகளும் முற்புறத்தும் பிற்புறத்தும் இரண்டுபக்கங்

களிலும் கட்டிய மணிமாலைகளும் இன்னோசையாய் ஆரவாரிக்கப் பட்டினுற்செய்யப்பட்ட கல்லணையிற்கட்டிய சாமரைகளெட்டும் விட்டுவிட்டு ஒளிவிளங்கப்பெற்ற ஒப்பற்ற வெள்ளைக்குதிரையின் மேலேறியென்றவாறு.......................................(௰௭)

வீசுகவரித்திரள்மிடைந்தொளிரமீதே.....................※
தேசொடுகவித்துளசெழுங்குடையுயங்கப்...........※
பூசல்புரிவெம்பரிபொருந்துபடையூடே...............※
மாசில்குலவாரியரின்மன்னனெனவந்தார்..............※

எ-று. வீசுகின்ற சாமரைக்கூட்டங்கள் நெருங்கிப்பிரகாசிக்கவும் மேலே கவித்திருக்கின்ற செழுமைபொருந்திய குடைகள் காந்தியோடு பிரகாசிக்கவும் யுத்தஞ்செய்கின்ற வெவ்விய குதிரைச்சேனையினிடையிலே குற்றமற்ற ஆரியதேசத்தார்க்கு அரசனைப்போல வந்தார் குதிரைச்சேவகரென்றவாறு ............(௰௮)

மன்னவனுமிங்கிவர்வருந்தகைமைகண்டே...........※
தன்னுளமகிழ்ந்திருதடங்கணிமையாமல்...............※
லன்னமுறுமூர்திநெடுமாலரனுமல்லா.............. ※
லின்னெழிலயாவருளரென்றதிசயித்தான்...........※

எ-று. பாண்டியனும் இந்தக்குதிரைச்சேவகர் வருகின்றபெருமையைப்பார்த்துத் தன்மனமகிழ்ந்து விசாலம்பொருந்திய இரண்டுகண்களும் இமையாமல் அன்னவாகனத்தையுடைய பிரமதேவனும் விஷ்ணு உருத்திரன் இவர்களிலொருவரல்லாமல் இந்த அழகோடுங் கூடியவர் யாருள்ளரென்று அதிசயித்தானென்றவாறு.

பண்ணியதவத்துளபயன்பரியின்மீதே............. ※
நண்ணியதெனத்தமினயந்தனர்வியந்தா.......... ※
ரெண்ணியமுடித்தனனெனக்கருதிநின்றார்........... ※
புண்ணியமறைத்தமிழ்புகன்றதிருவாயார்............ ※

எ-று. முன்னே தான்செய்த தவத்தினாலே உண்டாகிய பிரயோசனமே குதிரையின்மேலே வந்ததென்று தமக்குள்ளே மகிழ்ச்சிகொண்டு அதிசயத்தையுடையவராய் என்னெண்ணத்தை முடித்தானென்று நினைத்துநின்றார் புண்ணியவடிவமாகிய வேதத்தைத் தமிழ்செய்த மாணிக்கவாசகரென்றவாறு ............ (௨௰)

தூயசுடர்வேல்பலசுழற்றியெதிர்செல்வார்...........※
வாயொலிவிளைப்பரிகல்வாளினைவிதிர்ப்பார்......... ※
நேயமொடுதம்மிலணிநின்றுசமர்செய்வா.......... ※
ராயினரரன்புடையிலானபரிவீரர் .................※

எ-று. தூய்மையான ஒளியுள்ள அனேகவேலாயுதங்கள் சுழ.

யிலக்கணவிதியா லுள்ளவிரும்பரியிழிவுமேன்மை.... ..........*
துலக்குடனும்பிறுடியெம்முடன்சொல்லுமென்றான்.... *

எ - து. தன்மைபொருந்திய இந்தவழக்கத்தைக் கேட்டயிந் பாரி அன்புகொண்டு கலக்கமில்லாத அசுவலக்ஷண சாத்திரங் கற்றறிந்தவனைப்பார்த்து லக்ஷணவிதிப்பிரகாரமிருக்கிற பெரிய குதிரையினுடைய இழிவும் உயர்வும் பிரகாசமாக உங்களுக்குள் ளே சோதித்து நம்மோடே சொல்லுமென்று சொன்னான் பாண் டியராசனென்றவாறு............ ......(௯௨)

சொற்றிகழ்தாரகநூலின்றுணிபொருளுணர்ந்துளோருங்.. .. *
கொற்ற[illegible]ம்பரிகட்குள்ளகுற்றமுங்குணமுந்தாடிப். ........*
பொற்றடங்கிரியின்மீறுபொருகயல்பொறித்துமீண்ட........ *
வெற்றிகொண்மன்னர்கோன்முனிவ்வகைவிளம்பலுற்றார்.. .*

எ - து சொல்லுற் பிரகாசிக்கப்பட்ட அசுவலக்ஷணத்தினு டைய நிச்சயமாகிய பொருளைத்தெரிந்தவர்கள் வெற்றிபொருந் திய விரும்பத்தக்க குதிரைகளுக்குள்ள குற்றத்தையுங் குணத் தையு மபார்த்து மகமேருமலையின்மேல் தன்னுடைய மீனக்கொ டியை எழுதிவைத்துத் திரும்பிய வெற்றியைக்கொண்ட அரசர்க் கரசனாகிய பாண்டியராசன்முன்பாக இந்தப்படி சொல்லத்தொ டங்கினாரகவென்றவாறு.......... ........ ............... .. (௯௩)

[ வேறு. ]

நாவினைச்சந்திரசுழி[illegible]மண்டாவர்த்தநந் - தன்னுடையடியிற் சுழிபாருடலின்பக்க, மேவுசுழிகௌவகமாங்காகாவர்த்த- மேன்மைநிகழ்மூன்வளையச்சுழிதானுகும், பாவுசெழுங்கே தாரியடியிற்சேர்ந்த-பயனிலகொடுஞ்சுழிகேசாவர்த்தமா மும, பூவமருங்கச்சையிற்பட்டடையேயாகப் - புகலற சுழியிசசுழிகள்புணராவாகி ....[illegible]..... .... .... ........ *

எ-து நாவ்பத்தைத்தருகின்ற சந்[illegible]சுழி அண்டாவர்த்தமென் னுந் தன்னுடையடியிலிருக்கின்ற[illegible]களும்,உடலிலொருபக்கத்தி லிருக்கின்ற சுழியாகிய கௌவ[illegible]ம், காகாவர்த்தமும், மேன் மையாகவிளங்கிய மூன்வளையச்சுழியும், பரவிய செழுமையு ள்ள கேதாரிச்சுழியும் காலிலிருக்கின்ற பிரயோசனமில்[illegible] கொடியசுழியாகிய கேசாவர்த்தமும், பொலிவோடுங்கூடிய கச் சையிற் பட்டடையாகச் சொல்லப்பட்ட சுழியும்,ஆகிய இந் தச்சுழிகள் பொருந்ாதனவா மென்றவாறு .. ....... . (௯௪)

கொம்புகன்னந் திருகுகன்ன நஞ்சவாதங் - கொ[illegible]
வெவ்விக்கண்டிடனிகுன்று,வெட்புதழற்சுடலைமுகப்படமேனர்

ஒளியையுடைய பூனை நரி தரிக்கப்பெற்ற கரியுகாகம் தீ புகை இவைகளினுடைய நிறத்தைப் பொருந்தாதவைகளாய் இறுமாப்புடையனவாய் வாயுவென்னும் வேகத்தோடுங்கூடிப் பிரகாசித்த கிரணங்களையுடைய வெள்ளியமுத்துக்கள் சந்திரன் நீலரத்தினம் மெல்லியதாமரையினுடைய மகரந்தம்செழுமைபொருந்தியபொன் காயாசெவ்வரத்தமலர் நல்லபச்சைக்கிளி ஆகியவிவைகள்போல அமைந்த உருவத்தையுடையவாகியென்றவாறு. (௬எ)

நெற்றியகன்றுயர்குரவ மூடைத்தாய்வெண்மை - நிறைந்து நமிலொத்திலகுமெயிற்றவாகித், துற்றநறுங்கந்தமிகச்சிறந்துநாவுஞ் - சூதவிளந்தளிர்போலு மருணநிறந்தோய்ந்தே, யுற்றவிரண்டிமைமயிருந் தொகையுண்டாகி - யுக்கிரமாம் விழிப்பார்வையுடையவாகி, முற்றுமெயிற்றசையின்றி யுள்வளைந்து - மூக்கோணமெனத்திகழுமுகத்தவாகி.......... *

எ-து. நெற்றிபரந்து உயர்ந்த மேலுதட்டையுடையவாய் வெண்ணிறநிறைந்து தம்மிலே வரிசையாயொத்துப் பிரகாசிக்கப்பெற்ற பற்களையுடையவாய் நிறைந்த நல்ல வாசனைசிறந்து நாக்கும் மாவினிளந்தளிர் போலும் செம்மைநிறம்பொருந்தி இரண்டிமைமயிருந்திரட்சியுடையவாய் உக்கிரமாகியகண்பார்வையுடையவாய் தேகத்தில் அதிகமாமிசமில்லாமல் உள்ளேவளைந்து மூக்கோணமாய்ப் பிரகாசிக்கின்றமுகத்தையுடையவாயென்றவாறு.

உளையினுடன் றலைமயிரு நிறமொன்றாகி - யுரத்தினுடன் கழுத்துரகபடமேபோன்று, வளைசிறந்ததொனியரந்தகுவிந்துள்வாங்கி- மண்டலமுண்டாயுரங்கொள்குரங்கள்சேர்ந்து, கிளைகொணரம்புகள்கரந்துதசைதானொன்றிக் - கிளர் முழந்தாளெளித்தபதங் கெழுமலின்றி, நெளிமுதுகுபுனைந்துடைதிரண்டுதண்டை- நீண்டுடலநெய்த்தநிற நீர்மையாகி ...................................*

எ-து. கழுத்துமயிரும் தலைமயிரும் ஒருநிறமாய் மார்பினுடனே கண்டமும் பாம்பின்படம்போலொத்துச் சங்குகள்போலத்தொனியுண்டாய்க் குவிந்து உள்வாங்கி மண்டலஞ்செய்வனவாய் வலிமைகொண்ட குளம்புடையவாய்க் கிளைகொண்டநரம்புகள்மறைந்து தசையையுடையவாய்ப் பிரகாசிக்கின்ற முழங்கால்நெளித்தலில்லாமல் நெளிப்பாகியமுதுகும் பெருத்ததுடைகளுந்திரண்டு தண்டைக்காலானது நீண்டு சிவந்த நிறத்தையுடையவாயென்றவாறு................................................................(௬௯)

எ-து. தன்மையுள்ள குதிரையினுடைய லக்ஷணங்களை யறிந்தவர்கள் இந்தப்பிரகாரம் சொன்ன சொல்லைக்கேட்டு மிகவும் நயப்பையடைந்து வெள்ளிமலையை யொத்த இடபவாகனத்திலே யிவர்ந்தகடவுளாற் கொடுக்கப்பட்ட தெய்வீகமுள்ள வெல்லிய குதிரைகளையெல்லாம் விலைமதித்தபின்பு அழகுபொருந்திய தாலீமெடுத்த பொருளின்மேல் எட்டுப்பங்கு அதிகமாகியவிலைபெற்ற குதிரைகள்வருதலினாலே மிகுந்த மகிழ்ச்சியடைந்துபாண்டியனானவன் பரமசிவனுடைய திருமுகத்தைப்பார்த்துக் கயிறு மாறித் தரக்கடவீர் குதிரைக்கூட்டங்களை யென்றுசொன்னானென்றவாறு.

[ வேறு. ]

காத்துலகனைத்துமுய்யக்கண்ணருள்செய்யு நீதிப் ✳
பார்த்திவன்கருமஞ்செய்வார்பற்றியங்கரத்தில்வாங்கச் ✳
சாத்தவர் தம்முலங்கோர்சாய்பினர்கயிறுமாறி ✳
யீத்தனர்பந்தியூடுசேர்த்தனரிவுளியெல்லாம் ✳

எ-து உலகமெல்லாம் பாதுகாத்துப் பிழைக்கும்படி கிருபாநோக்கஞ்செய்கின்ற நீதியையுடைய பாண்டியராசனது காரியஞ்செய்வோர்கள் கையினாற்பிடித்து வாங்கக் குதிரைச்சாத்தர்களுக்குள்ளே பெருமைபொருந்திய ஒருவர் கயிற்றைமாற்றிக் கொடுத்தார் உடனே அவர்கள் குதிரைகளையெல்லாம் லாயத்திலே சேர்த்தார்களென்றவாறு.......(௬௩)

திண்டிறல்செழியனேயத்தெந்திசைக்கிறையுஞ்செய்ய ✳
வண்டமிழ்க்கிறையுங்காணவந்தநெறித்திசையினேகிப் ✳
பண்டைநற்படிவமாகிப்பணிந்துவிண்ணவர்கள்சூழக் ✳
கொண்டலைப்பொருவுகண்டர்குலவுதங்கோயில்புக்கார் ✳

எ-து. மிகுந்தவலிமைபொருந்திய சக்கரஞ்செலுத்துகின்ற தென்றிசைக்கு அதிபனாகிய பாண்டியராசனும் செம்மையாகிய வளத்தையுடைய தமிழுக்கரசராகிய மாணிக்கவாசகரும் காணும்படியாய்த் தாயவந்த திசைவழியாகச்சென்று பழையவடிவங்கொண்டு தேவர்களெல்லாம் வணங்கிச்சூழ மேகம்போன்ற கரியகண்டத்தையுடைய பரமசிவனானவர் பிரகாசிக்கின்ற தமதுகோயிலிற் புகுந்தாரென்றவாறு.......(௬௪)

வாய்ந்தன்பரிகளும்மாலெல்லெறிதில்வாதவூரின் ✳
வேந்தனைமனையிலேகவிடுத்துளமகிழ்ச்சிகூர்ந்து ✳
சார்ந்தமெய்த்தலைகன்மையோருத்தானையுஞ்சூழவேகி ✳
யாய்ந்தநற்றமிழ்நூல்வல்லவரசனுங்கோயில்புக்கான் ✳

எ - று. வேதங்கள்பாடிப்போற்றும்படிக்குக் கனகசபையி லே திருத்தஞ்செய்கின்ற கடவுளுடைய விளையாட்டின் புதுமை யினாலே எல்லாருமோடி யொளித்துக் கொள்ளுங்கோவென்று ஒருகோடிநரிகள் கூட்டங்கொண்டு கூவுமென்றவாறு......(௪௧)

ஓங்குமாறன்றெருகுபடைவெங்கொலை......... .........*
தங்குமாயுதந்தாங்கியெதிர்க்கவே..... ..... ..............*
யெங்குமானநரிகளெல்லாங்கொடுஞ்..................*
சிங்கமாயமர்செய்யத்தொடங்குமால்.. ..............*

எ - று. உயர்ச்சிபொருந்திய பாண்டியராசனுடைய கூட்ட மாகியசேனைகள் வெய்யகொலைதங்கிய ஆயுதங்களையெடுத்துக் கொண்டு எதிர்க்க எங்கும்பரவியிருக்கின்ற நரிகளெல்லாம் கொ டியசிங்கம்போல அமர்செய்யத் தொடங்குகின்றவென்றவாறு.

நீடுவாடையிடந்தொறுநின்றணி..................  .*
கூடுவார்மிகக்கூவிவெருட்டுவா.......... ........ ....... *
ரோடுவாரொளித்தோடிப்புகுமிடந்..... ...., .........*
தேடுவாரெதிர்சென்றமர்செய்குவார் ..... .... ........ *

எ - று. நீடிய தெருக்கள்தோறும்நின்று அணிவகுப்பாகக் கூ டுவார்கள் மிகவும் கூசலிட்டு மயங்கச்செய்வார்கள் ஓடுவார்கள் ஒளித்துக்கொண்டு ஒடிப்புகுந்துகொள்ளுமிடந்தோறும் தேடு வார்கள் எதிரேசென்று யுத்தஞ்செய்வார்களென்றவாறு .....(௫௧)

எங்களாருயிர்காத்தருளின்றணி....... ............... *
திங்களாமெனத்தெய்வம்பரவுவா .......................*
ரங்கபாடமடைத்தரண்செய்குவார் ....................*
மங்குலாடுமதிற்றலையேறுவார் ..... ......... ......... ..*

எ - று. எங்களுடைய ஆத்மாவை இன்றைக்குக் காத்துரக்ஷிக்க வேண்டும் மூன்றாம்பிறையையணிந்த பரமசிவனேயென்றுசொ க்கநாயகனாப் பரவுவார்கள். அழகிய கதவுகளைச் சாத்திக்கொண் டுகாவல்செய்வார்கள் மேகங்கள் விளையாடுகின்ற மதிலின்மேலே றிக்கொள்வார்களென்றவாறு............ ..... ..........................(௫௨)

நற்றவஞ்செயனன்கிலதானதோ.......... ...............*
கொற்றவன்செய்யகோல்கொடிதானதோ ..... ......*
விற்றிதன்பயனென்னெனவின்னண ..... .... .........*
முற்றிரங்கினர்கூடலுள்ளோரெலாம .... ....... ...... ..*

எ - று. நம்முடையதேசத்தில் நல்லதவஞ் செய்வது நன்மை யில்லாததாயிற்றோ அரசனுடையசெங்கோல் கொடிதானதோ இன்றைக்குஇதனுடையபிரயோசனம் என்னவோவென்று இந்த ப்பிரகாரம் இரங்கினர்கள் மதுராபுரியிலுள்ளவர்களென்றவாறு.

தூயவன்றாகத்தொழிலாளர்கள் ........................ *
கோயிலின்கடைகூக்குரல்செய்துபோய் ............ *
மாயவெம்பரிவந்தவெல்லாநரி ........................*
யாயவென்றரசற்கெதிர்கூறினார் .......... .......... *

எ-று. பரிசுத்தராகிய வலிமையுள்ள குதிரைக்காரர்கள் அரமனைவாசலில் வாயைத்திறந்து கூசலிட்டுக்கொண்டுபோய் மாயமாய்வந்த வெம்மைபொருந்திய குதிரைகளெல்லாம் நரியாய்ப்போயினவென்று பாண்டியராசனுக்கெதிரே சொன்னார்களென்றவாறு..................................................(௧௪)

மாக்களோசையும்வாம்பரியோசையுங் ..................*
கூக்குலாவுகுறுநரியோசையு ........................ *
மீக்கொண்மாமுடிமீனவன்றன்செவி .................. *
தீக்கொள்வேலிற்செருகியதொத்தவால் .............. *

எ-று. மனிதர்களுடைய சத்தமும், தாவுகின்ற குதிரைகளுடையசத்தமும், ஊளையிடுகின்ற குறியவாகிய நரிகளுடைய சத்தமும், மேலாகிய கிரீடத்தைக்கொண்ட சிரசையுடையபாண்டியராசாவின்காதிலே காய்ந்த வேலாயுதத்தைச் சொருகியதொத்திருந்தனவென்றவாறு... .................................(௧௫)

இந்தவாறொலிகேட்டிருகண்டழல் ...................... *
சிந்தவாகஞ்சிறுவெயர்ப்பெய்தவே........................*
யந்தமாறன்வெகுட்சிகண்டண்ணலார் ..................*
வந்தமாயநரிப்படைமாற்றினார் ......... ................ *

எ-று. இந்தப்பிரகாரமாகிய சத்தத்தைக்கேட்டு இரண்டுகண்களுந் தீப்பொறிசிந்தத் தேகத்திலே வேர்வைசிறியதுளிகளாயுண்டாக அந்தப்பாண்டியராசன் கோபிக்க அதைக்கண்டு பரமசிவனானவர் மாயமாய்வந்தநரிச்சேனைகளை நீக்கினாரென்றவாறு.

பொன்கொளுடன்புனைந்தநலந்திகழ்..................*
மின்கொளாரம்விளங்கியமொய்ம்பினன்.............*
தன்கணிநடப்பவர்தண்டல்செய்............ .... .....*
வன்கணரைவம்மெனக்கூறினன் .............. ........ *

எ-று செல்வத்தைக்கொண்ட பாண்டிநாட்டையுடையவனும் அலங்காரஞ்செய்த நன்மைபொருந்திய பிரகாசங்கொண்ட முத்துமாலைவிளங்கிய புயத்தையுடையவனுமாகிய அரசனானவன் தன்னுடைய கண்ணுக்குச்சமானமாய் நடக்கின்றகொடிய தண்டற்காரரை வாருமென்று ஆக்கியாபித்தானென்றவாறு.(௧௭)

[ வே-ம. ]

நரியினிற்றெருகுதியெல்லாநற்பரித்திரள்களாக்குஞ்............... *
சரிதனைக்கொணர்மினென்னத்தாடொழுதவர்களோடி......... *
யிருபிறப்புடையாராகியினிப்பிறப்பில்லார்தம்மை.. .. ......... *
விரைவினிற்குறுகி நும்மையழைத்தனன்வேந்தனென்றார்..... *

எ-று. நரியினுடைய கூட்டங்களையெல்லாம் நல்லகுதிரைக்கூ
ட்டங்களாக்குகின்ற சரித்திரத்தையுடைய மந்திரியைக்கொண்
டு வாருங்களென்றுசொல்லத் தண்டகாரர் அந்தப்பாண்டிய
ன்பாதத்தைவணங்கிச் சீக்கிரமாகப்போய் இரண்டுபிறப்பையு
டையவராகி யினியொருபிறப்புமில்லாத மாணிக்கவாசகரைக்க
ண்டு உம்மை அரசனழைத்துக்கொண்டு வரச்சொன்னனென்று
ர்களென்றவாறு.... ................... ......... ......... ... ....(௧அ)

சித்தருக்கன்புபூண்டசித்தருமுறுவலெய்தி ............. ......... *
நித்திலத்தொளிபோன்மின்னுநீறெனுஞ்சாந்துபூசிப்........... *
பத்தருக்கேவல்செய்வார்பதமலர்முடியிற்சூடி..... ..... ........ *
முத்தமிழ்ப்பொருளைநாடன்முன்புசென்றருகுநின்றார்......... *

எ-று. சித்துவித்தைகாட்டிய கடவுளிடத்தில் அன்புவைத்த
சித்தத்தையுடைய திருவாதவூரரும் புன்சிரிப்புக்கொண்டு முத்
துப்பிரகாசத்தைப்போல் பிரகாசியாநின்ற திருமேனியிலே திரு
நீறாகிய சந்தனத்தைப்பூசி அடியவர்களுக் கேவல்செய்வாராகிய
கடவுளுடைய பாதாரவிந்தங்களைச் சிரசிலேவைத்துக்கொண்டு
இயலிசை நாடக மென்னு முத்தமிழையும் வளர்க்கின்ற பொரு
ளை நாடனாகிய பாண்டியராசன் முன்னேபோய்ப் பக்கத்திலேநி
ன்றாரென்றவாறு... . ....... ...................... ........... .. ... (௧௯)

மூண்டெழுமழல்போன்மன்னன்முனிவுடைமுகத்தனாகி ...... *
யீட்டுதம்பொருள்களெல்லாமிரப்பவர்தமக்குதவி............. *
நாட்டுளநரிகளெல்லாநற்பரியாக்கிநம்முன்... . ................. *
காட்டினரிவர்செய்மாயங்கண்டிரோவமைச்சிரென்றான் ........ *

எ-று. மூண்டெழுகின்ற தீயைப்போல் பாண்டியராசனானவ
ன் கோபத்தையுடைய முகத்தினனாகிச்சொல்லுவான் இவர் நாம்
சம்பாதித்த திரவியங்களையெல்லாம் யாசகர்களுக்குக் கொடுத்
துவிட்டு நாட்டிலேயிருக்கின்றநரிகளையெல்லாம் நல்லகுதிரைக்
கூட்டங்களாக்கிநம்முன்னே அழைப்பித்துக் காண்பித்தார் இந்
தமாயத்தைக்கண்டீர்களோ மந்திரிகளேயென்றானென்றவாறு.

நன்னெறியிலவழுவினோர்கடமக்குறுதுயரஞ்செய்தல்..... ..... *
வன்றிறலரசர்நீதியாயினுமறைவல்லாரைச் ......................... *
சென்றுயர்தவத்தினிற்போர்தெரிவையர்விருத்தர்பால.......... *
ரென்றிவர்க்குறுகண்செய்தலெம்மனோரியல்பன்றென்று ...... *

எ-து. பின்னும் பாண்டியராசனானவன் தன்னுடைய தொழி லிலே நட்பினவர்களுக்கு விருத்த துன்பத்தைச்செய்வது வல் லமைபொருந்திய சௌரியத்தையுடைய அரசர்களது நியாயி னும் வேதத்திலல்ல பிராமணர்கள் உயர்ந்தவயோர்க்கத்திலே நிதியவர்கள் மாதர்கள் விருத்தர்கள் பாலர்கள் என்றுசொல்லப் பட்ட இவர்களுக்குத் துன்பஞ்செய்வது நம்போல்வார்களுக்கு இயற்கையல்லவென்று சொல்லியென்றவாறு............(௬௪).

தண்டல்செய்பவன்களாரிதங்களைநோக்கிதங்கள்................*
கண்டிடமுன்னில்லாமற்கடிதினிவர்க்கொண்டேகி.... ... .....*
மண்டழல்வெயிலினூடுவளைப்பினிறுத்திநம்பால்.................*
கொண்டனைதனங்களெல்லாங்குறைவறவாங்குமென்றான்.........*

எ-து. கொடுமையையுடைய தண்டற்காரர்களைப் பார்த்து இவரை நம்முடைய கண்பார்க்க எதிரேநில்லாமல் சீக்கிரத்திலே கொண்டுபோய் நெருங்கிய தீயையொத்த வெயிலினிடத்திலே நிறுகோடுகிழித்து அதிலேநிறுத்தி நம்மிடத்திலே வாங்கியதிரவி யங்களையெல்லாம் குறைவில்லாமல் வாங்குங்கோளென்றான்பா ண்டியராசனென்றவாறு.................................(௬௫)

வன்றிறலேவலாளர்மற்றிவர்தமைக்கொண்டேகி................*
யொன்றியவளைப்பினூடுநிறுத்தனுமுலகோர்போற்று..........*
தன்றொள்வாதவூரர்நரியெலாம்பரிகளாக்கித்.....................*
தென்றிசைநிருபற்கீந்தசித்தனைநினைந்துசொல்வார்............*

எ-து. வலியசௌரியத்தையுடையதண்டற்காரர் அவரைக்கொ ண்டுபோய்க் கோடுகிழித்து அதிலேநிறுத்தினார்கள் அப்போது உலகத்தார்வணங்குகின்ற தன்மையைக்கொண்ட திருவாதவூரர் நரிகளையெல்லாங் குதிரைகளாக்கித் தென்னாட்டரசனாகிய பாண் டியனுக்குக்கொடுத்த சித்தனைநினைந்து சொல்வாரென்றவாறு.

தொல்லையோரிருவர்தேடுஞ்சோதியேயாதுசெய்வேன்..........*
தில்லையோர்பரவநின்றதெய்வமேயாதுசெய்வே...............*
னில்லையோகருணைநின்பாலென்றனையடிமைகொண்டா........*
யல்லையோதம்பியேனின்னலறிதியோவறிந்திலாயோ..............*

எ-து முற்காலத்திலே பிரமவிஷ்ணுக்கள் தேடிய சோதிசுரூ பனே நானென்னசெய்வேன் தில்லைமூவாயிரவர் வணங்கும்படி நின்ற கடவுளே நானென்ன செய்வேன் உன்னிடத்திற்கிருபையி ல்லையோ என்னையடிமை கொண்டவனல்லையோ என்னுடைய துன்பத்தை யறிந்தாயோ அறிகிலாயோ வென்றுசொன்னவாறு.

பரித்திரணரியேயானபான்மைகண்டடியேன்றன்னை............*
வருத்தினரிதனைமாற்றவல்லநீமாற்றாயாகிற்..................*
றரித்தனைவிடத்தையென்னுந்தன்மையும்புரங்கண்மூன்று ....*
மெரித்ததுமிலவாமென்றென்றிரங்கினரெவர்க்குமிக்கார்......*

எ-து. குதிரைக்கூட்டங்கள் நரிகளானதன்மையைக் கண்டு அடியேனை வருத்தினார்கள் இதனை நீக்கத்தக்கநீ நீக்கமாட்டா யாகில் விஷத்தைக் கண்டத்திற் றரித்ததுமென்னுந் தன்மையும் திரிபுரங்களைமூன்றுமெரித்ததும் இல்லையாமென்று இரங்கினார் எவரினுமிகுந்தவராகிய திருவாதவூரரென்றவாறு............(௬௫)

நன்றிகொள்கடவுட்கங்கைநதியினைவையையூடு............ ....*
சென்றெழில்வாதவூரர்பேரிடர்தீரென்றேவி.......... .........*
யன்றொருமடந்தைக்காளாயடியவர்க்கெளியார்கொன்றை.....*
துன்றியமுடியின்மேன்மண்சுமந்ததையுரைத்தல்செய்வாம்...*

எ-து. நன்மையைக் கொண்ட தெய்வகங்கையைப்பார்த்து வையைநதியிலேபோய் அழகியதிருவாதவூரருடைய பெரியது ன்பத்தை நீக்கென்று அனுப்பி அப்போது ஒருபிட்டுவாணிச்சி க்குக் கூலியாளாய் அடியவர்களுக்கு எளியராகிய பரமசிவன் கொன்றைமலர்நெருங்கிய சிரசின்மேலே மண்சுமந்ததையை ச்சொல்லுவாமென்றவாறு...... ..... ..... ............... ....(௬௬)

குதிரையிட்டசருக்கம் - முற்றுப்பெற்றது. ஆ. ௨௪௮.



# மண்சுமந்தசருக்கம்.

தங்கியவருளின்மிக்கோர்தாம்படுமிடும்பையுன்னி ...............*
யங்கணரவர்பாலுற்றவருந்துயரகற்றுகென்று.............. ....*
கங்கையைவிடுப்பவேகிக்கடும்பெருக்கெடுத்துவையைப் .......*
பொங்கலைப்புனலாயெங்கும்புரண்டதுபுணரியேபோல்..... *

எ-து. தங்குகின்ற கிருபையிலேமிகுந்தவராகிய திருவாதவூரர்படுகின்ற துன்பத்தைநினைத்துப்பரமசிவனவரிடத்திலேவந்த அரிய துன்பத்தைநீக்குவாயென்று கங்காநதியையேவ அது கடிய பெருக்கெடுத்து வையைநதியிலேசேர்ந்து மிகுந்த சலப்பிர வாகமாய் எங்குமபுரண்டது சமுத்திரம்போலென்றவாறு....(௧)

எ-று. முத்துமாலையைத்தரித்துள்ள அழகிய தனபாரத்தின்
மேல் மங்கையர்கள் தரிக்கின்ற வஸ்திரம் சீக்கிரத்தில் வீழ்வது
போலநின்று அழகினைச்செய்து விசாலமாக விருக்கின்ற தென்
னமரத்தில் விளங்குகின்ற சிவந்த குரும்பையின்மேல் நெடிய
நீர்த்திரைகளை வீசி மீளப் பெருகிய வையைநதி யென்றவாறு. (௫)

மீதெழுபரிதிகையால்விடுங்கனல்வெம்மைதீரப் ... ..... *
பூதலமடவாள்போர்க்கும்புதியவெண்டுகிலேபோல ..*
யாதலர்ப்பழனஞ்சோலையாதெனப்பரந்துவந்த . . . .... *
மாசறைமதுரைமூதூர்மதிற்புறஞ்சென்றுசேர்ந்தது ... ... *

எ-று. ஆகாசத்திலெழுகின்ற சூரியனானவன் தன்கிரணங்க
ளென்னுங் கைகளால் விடுகின்ற வெப்பந்தீரப் பூமிதேவியான
வள் போர்த்துக்கொள்கின்ற புதுமையாயிருந்த வெள்ளை வஸ்
திரம்போல மலர்களையுடைய கழனியோடு சோலையெதுவென்று
சொல்லப்பரவித் தாமரைப்பூவிலிருக்கின்ற லக்ஷ்மியானவள் வ
சிக்கின்ற மதுரைமாநகரத்து மதிற்புறத்தே வெள்ளம்வந்து சே
ர்ந்ததென்றவாறு ....... ............ . ... ... ... . ........... (௬)

தாங்கியசவலயாயிற்றடமதிலிடியத்தள்ளி .... .... ... ..... *
யாங்கெழில்மதுரைமூதூரழிப்பதுபோன்றுசெல்லப். ..... *
பாங்குறவிடங்களெல்லாம்பரந்ததுவையைநம்வி .... ..... *
ஈங்கியாதுசெய்வதென்னேயாவருங்கவற்சிகொண்டார் .. . *

எ-று. நாங்கட்பெற்ற கொடிகள்கட்டிய கோபுரவாயிலை யு
டைய விசாலமான இடமதிலை யிடியும்படி தள்ளி மதுராபுரிப்பட்ட
ணத்தை யழிப்பதை யொத்துச்செல்ல அதுகண்டு பக்கங்களிலே
யுள்ள இடங்களெல்லாம வையைநதியானது பரவிநடந்தது இவ்வி
டத்திலே யாம் என்னசெய்வோமென்று எல்லாருங் கவலைகொ
ண்டார்களென்றவாறு ..... . . . . . ... .. .. .. .....(௭)

மைகமழ்ங்களிற்றுத்தானைவழுதியுங்கடிதுவந்து .... . . .... *
தொகைபொன்மலருமுத்துந்துகின்மணிப்பூணுநல்கித்.. .... *
தக்கவண்புவியிலுள்ளோர்தமக்குயிரொன்றுமன்னே ...... . *
மிக்கநின்கோபமாறவேண்டுமென்றிறைஞ்சிநின்றான் . *

எ-று. வேகத்தையுடைய கறுத்த யானைபோன்ற சேனைகளை
யுடைய பாண்டியராசனும் சீக்கிரத்திலேவந்து நெருங்கிய பொ
ன்னும் பூவும முத்தும் வஸ்திரமும் ரத்தினாபரணமும் அந்த
வையையாற்றிலே விடுத்துக் குந்த பூலோகத்தாருக்கு உயிராகி
ன்றதாயே உன்னுடைய மிகுந்த கோபமாறுதல் வேண்டுமெ
ன்றுவணங்கிநின்றானென்றவாறு ...............................(௮)

னமகிழ்ந்து கிருபாநோக்கஞ்செய்து என்மனத்தில் நினைத்தபிர
காரமே இன்று இங்கே இனிதாகச் சொல்லீர்களென்றுசொல்லி
அச்சத்தைத் தருகின்ற வனைப்பினிடத்திலே யிருக்கின்ற நற்கு
ணத்தையுடைய மாணிக்கவாசகரைத் தன்முன்னே யழைப்பித்
துச் சினேகத்தால் முகமலர்ச்சியடைந்து இந்த வார்த்தைசொ
ன்னானென்றவாறு........ ....... ......... . ................(௰௨)

பாம்பணிசெய்யவேணிப்பரம்பரனடியார்கைமே............*
லாம்பொருணமதேயாளுலறம்பிறர்க்காவதுண்டோ... . ...... *
தேம்படுமலங்கன்மார்பீர்செயலிதற்குமதுமேனி..... ..........*
சாம்புவதவமேயாஞ்செய்தண்டமேலதகவிலாமை......... .... . *

எ-று. சர்ப்பத்தை யணிந்த சிவந்த சடாபாரத்தையுடைய
பரமசிவனடியார்கள்கையிலே நீர்கொடுத்தபொருள் நம்மதே
யாகும் தவிரம்பிறருக்குட்போகுமோ வாசனைபொருந்தியமா
லையையணிந்த மார்பினையுடைய மாணிக்கவாசகரே இந்தக்காரி
யத்திற்கு உமது திருமேனி வருந்துவது விருதாவே இதற்குயா
னென்ன பலஞ்செய்தது அறிவிலாமையாமென்றவாறு.. . . (௰௩)

உற்றவிதற்கைமுன்னேயுணருமிவ்வுணர்விலாமை.... .. ..*
குற்றமிந்நினையுநம்மேநீகொண்டனங்குறைவிலாமன்..... .....*
மற்றினிப்புகலுமாமெந்நவையைநம்மூர்தொடாமை ............ ..*
னுற்றவத்தவர்நீரோயுடப்பியுமெனநவின்றான். ...........*

எ-று வந்தவிந்தக்காரியங்களை முன்னதாக அறியுமறிவில்லா
மையாகிய குற்றத்தை நம்மதாகக்கொண்டோம் குறைவில்லா
மல் இனி நாம் சொல்வதென்னவென்றால் வையைநதிநம்முடை
யமதுரைமாநகரை அழியாமல் நன்மையாகிய தவத்திலே தலைவ
ராகிய நீரே அதைத் தடைசெய்யுமென்று சொன்னான்பாண்டிய
ராசனென்றவாறு.... ... ... . . .. ......... .. .. . ...............(௰௪)

அருட்பெருமுதியிவ்வாறன்புளாபகர்ந்தபோதுந் ......... ....*
நர்ப்பரிதெனமுன்னந்தழலெனவெகுண்டபோதும். . . . . *
விருப்பொடுவெறுப்புமில்லாமெய்ம்மையார்தம்மையாண்ட. *
திருப்பதநினைத்தார்வையைச்செழும்புனலூர்தொடாமல்.. ....*

எ-று. கிருபையையுடைய பெரிய பாண்டியராசனானவன் இ
ந்தப்பிரகாரம்பத்தியானவசனஞ் சொன்னபோதும், ஒருவரா
லுந் தாங்குதற்கரிதென்று சொல்லும்படி முன்பு அக்கினியைப்
போல் கோபித்தபோதும், விருப்பும்வெறுப்புமில்லாத மனத்
தினையுடைய மாணிக்கவாசகர்தம்மையாட்கொண்ட பரமசிவனு,

டைய திருவடியை நினைந்தார் வையைநீரானது மதுராபுரியை அடித்துக்கொண்டு போகாமலென்றவாறு.................... (௱௩)

சுந்தரப்பரிமேல்வந்ததோற்றமேமனத்திலுன்னி................ *
பந்தரத்திறைஞ்சநன்னீரடங்கியுள்வாங்கிச்செல்ல................ *
வெந்துயர்ப்பிறவியானவிடங்கிளர்வேலைநீந்தி................... *
வந்தருட்கரையிற்சேர்வார்வையையங்கரையிற்சென்றார்........ *

எ-று. அழகிய குதிரையின்மேல்வந்த காட்சியையே மனதி ல்நினைத்து ஆதரத்தேவணங்க நல்லநீரானது அடங்கி யுள்வா ங்கிப்போக வெப்பம்பொருந்திய துயரைச்செய்கின்ற பிறவி யாகிய விஷத்தையுடைய கடலைநீந்திவந்து கிருபையாகிய கரை யிலே சேரப்பட்ட மாணிக்கவாசகர் வையைநதிக்கரையில்வந்தா ரென்றவாறு........................................(௱௪)

முறைமுறைவணங்கிநின்றவாரியர்முகத்தைநோக்கி................ *
யுறைதிரைநெடுநீர்வையையடைப்பதுகடிதில்வேண்டு............ *
முறையுமிம்மாந்தரெல்லாமொல்லையிலணைமினென்று........... *
பறையறைவித்துநம்மூர்க்கிவ்வுரைபரப்புமென்றார்.............. *

எ-று. இப்படி வணக்கஞ்செய்துநின்ற தூதர்களுடைய முகத்தைப்பார்த்துச்சத்திக்கின்ற அலையையுடைய நெடியநீர்சூ ழ்ந்த வையைநதியைச் சீக்கிரத்தில் அணைசெய்யல் வேண்டும்வ சிக்கின்ற இந்த மனிதர்களெல்லாம் சீக்கிரத்தில் வாருங்களெ ன்றுமுரசறைவித்து நம்முடையவூருக்கு இந்தச்சொல்லைத்தெ ரிவியுங்கோளென்றார் மாணிக்கவாசகரென்றவாறு.......... (௱௫)

ஆரியர்கடிதிலோடிவன்பறையறைவித்தம்பொற்.................... *
றேரியல்வீதிதோறுஞ்சென்றுரைபரப்புமுன்னே..................... *
கூரியகொட்டுமண்சேர்கூடையுங்கொண்டுவையை.................... *
நீரியல்கரைமேல்வந்துநின்றனர்மதுரைமாந்தர்...................... *

எ-று. அப்படியே தூதர்கள் சீக்கிரத்திலோடி வலியபறைய றைவித்து அழகிய பொன்மயமாகிய இரதங்கள் நடக்கின்றதெ ருக்கள்தோறும்போ யிதனைச் சொல்லுதற்கு முன்னமே கூர் மைபொருந்திய மண்வெட்டியும் மண்ணெடுக்குங் கூடையுங் கொண்டு நீர்பெருகிய வையைநதிக்கரையிலே வந்துநின்றார்கள் மதுரையிலுள்ளமனிதர்களென்றவாறு.......................(௱௬)

நீறுகொண்டிலங்குமேனிமறையவர்திடமஞ்செய்த.................. *
வீறுகொண்டடங்கடோறுமாரியர்விரைந்துசென்று................... *
கூறுகொண்டெவர்க்கும்வேறுகோலறையளந்துசெங்கை............ *
மாறுகொண்டுறுக்கவையைவான்கரையடைக்கலுற்றார்.......... *

எ-று. விபூதியைத்தரித்து விளங்குகின்ற திருமேனியையுடை
ய மாணிக்கவாசகரானவர் நியமித்த அதிகாரத்தைக்கொண்டு
இடங்கடோறும் தூதர்கள் சீக்கிரத்திற்போய் எப்படிப்பட்ட
வர்களுக்கும் அளவுகோலால் வேறுவேறாநூதுவிட்டுச் சிவந்த
கையிலே ஒருமாறுகொண்டு அடித்து வையைநதிக்கரையை அ
டைக்கத் தொடங்கினார்களென்றவாறு ......................... (௰௯)

கண்பெறுகழையின்முத்துங்கடகரிமருப்பின்முத்தும் ..........*
வெண்பணிலத்தின்முத்துமேதகுகரும்பின்முத்தும் ..............*
வண்புனற்றிரைகள்வீசவரையெனகுவைகள்செய்து ..........*
பண்படப்பொருந்தநீருட்படிந்துயர்வரம்புசெய்வார் ........*

எ-று. கணுக்களையுடைய மூங்கிலிற்பிறந்த முத்துக்களையும்,
மதத்தையுடைய யானைக்கொம்பிற்பிறந்த முத்துக்களையும், வெ
ண்மையசங்கிற்பிறந்த முத்துக்களையும், மேன்மையாகிய கரும்பிற்
பிறந்தமுத்துக்களையும், வண்மைபொருந்திய நீர்த்திரைகள்கொ
ண்டுவந்து ஒதுக்க அவைகளை மலைகளென்னும்படி குவித்துத்
தகுதியாகப்பொருந்த நீரிலேபடிந்து உயர்ந்தகரைசெய்
வார்களென்றவாறு ......................................(உ௰)

பரித்திரணிறுத்துமென்பார்பாம்புகளுருட்டுமென்பார் ..... *
திரைப்புனல்மிகுத்ததென்பார்தேவர்கட்கபயமென்பார் .......*
நிரைப்படுமெயிலாடாரவரவொதுக்கிநீடு .........................*
வரைப்பிடைக்குவித்துநிற்பாரரயினர்மதுரையுள்ளார் ..........*

எ-று. குதிரைப்பாச்சலாக மரங்களை நிறுத்துமென்பார்கள்
வைக்கோலாற் செய்யும் பாம்புத்திரைகளை உருட்டித் தள்ளுமெ
ன்பார்கள் அலையையுடையநீர் அதிகரித்ததென்பார்கள் அதற்குப்
பயந்து யாமதேவர்களுக்கு அடைக்கலமென்பார்கள் வரிசைப்ப
டுகின்ற அகிற்கட்டைகளுடனே சந்தனக்கட்டைகளும் அடித்துக்
கொண்டுவருதலைப்பார்த்து அங்குள்ளவர்கள் நெடிதாகிய ஓரிட
த்திலே குவித்துநிற்பார்கள் இத்தன்மையுடையவரானார்கள் மது
ரைமாநகரத்தி லுள்ளாரென்றவாறு ............................(உ௧)

வருடைப்புதுநீர்வையையிவ்வகையடை[illegible]மெல்லை ..........*
நீருடைப்பொலிந்தசென்னிநின்மலற்கன்புமிக்காள் ...............*
சீருடைத்தவத்தின்மிக்காள்செம்மனச்செல்வியென்னும் ......*
பேருடைநரைமூதாட்டிபிட்டுவிற்றுணவுகொள்வாள் ..........*

எ-று. அழகையுடைய புதுமைகொண்ட பிரவாகமிகுந்தவை
யைநதிப்பெருக்கை இந்தப்பிரகாரம் அணைசெய்யும்போது கங்
கையைத்தரித்த பிரகாசம்பொருந்திய சிரசையுடைய பரமசிவ

யாருடனினிப்புகல்வேனென்னுடையாய்வையையினன்.... *
னீருடையாதடைக்கும்வகைநீசிறிதின்றருளாயேல்..... .........*
சீருடையாயுனக்கடிமைசெய்யுமவர்க்கெளிமையெனும்........*
பேருடையாயெனப்பலரும்பேசுமொழிபழுதாமோ...........*

எ-று. இனியாரோடு யான்சொல்லுவேன் என்னையடிமையாகவுடையவனே வையைநதி நீருடைத்துக்கொண்டுபோகாமல் அடைக்கும்படி நீயின்று கொஞ்சம் கிருபைசெய்யாயானால் சிறப்பையுடையகடவுளே உனக்கடிமைசெய்யும் அடியவர்களுக்கு எளிமையென்னும் பெயருடையவனென்று பலரும் பேசுகின்றசொல் பழுதாகுமோவென்றவாறு...................... (௨௬)

தாயுமிலைதந்தையிலைதமருமிலைதமியேனைப் .............. ... ... *
பேயினுடனின்றாலும்பிரித்தறியவொண்ணாது...................... *
நீயதனையிலம்பாடென்சிந்தையில்வெந்துயர்தீர..................*
நீயருளாயாயினுயிர்நீப்பேன்மற்றென்செய்கேன் ..............*

எ-து. எனக்கு மாதாவுமில்லை பிதாவுமில்லை ஞாதிகளுமில்லை தனியேனாகிய என்னை பேயுடனேகூடநின்றாலும் அதனின்று வேறு பிரித்தறியக்கூடாது என்னுடைய தரித்திரமானது நீயதாயிருக்கின்றது என்மனதிலிருக்கின்ற வெவ்விய துக்கம்நீங்கும்படி நீ கிருபைசெய்யாயானால் உயிரை நீக்கிக்கொள்ளுவேன் பின்னென்செய்வேனென்றுளென்றவாறு ......................(௨௭)

[ வேறு. ]

இன்றெனக்குறுதியாகயானிடும்பிட்டுவாங்கி....... ................*
வன்றிறற்கூலியாளாய்வன்கரையடைப்பாரில்லை.....................*
யென்றனக்கபயம்யானென்றுரைப்பவடன்மேலன்பு . ....... .... .*
சென்றவட்காளாமாறுதுணிந்தனர்தேவதேவர் ....... ..........*

எ-று. இன்றைக்கு எனக்கு உறுதியாய் நான்கொடுக்கப்பட்ட பிட்டினை வாங்கிக்கொண்டு மிகுந்த வலிமையுள்ள கூலியாளாய் வந்து மேலாகிய வையையாற்றின்கரையை அடைப்பாரில்லை உனக்கடைக்கலம்யானென்று முறையிடுகின்ற பிட்டுவாணிச்சியின்மேல்அன்புவைத்து அவளுக்கு ஆளாகும்படி துணிந்துகொண்டார் தேவதேவரா[illegible]சாக்கநாயகரென்றவாறு ......... ....... .(௨௮)

ஆடையுந்துணிந்தசீலையாகியேகூலியாளாய்க்....................*
கூடையுந்தலைமேற்கொண்டுகொட்டுடைத்தோளராகிப்.........*
பீடைகொண்டயர்வாள்காணப்பெரும்பசியுடையார்போல... *
வேடைகொண்டொல்லைவந்தார்வேண்டியவடிவங்கொள்வார்.. *

எ-று. துண்டாய்க்கிழித்த வஸ்திரத்தையுடையவராயும் கூலி,

கொண்டு வேலைசெய்புமாளராயும் கூடைவிழுந்த தலையையும் ம
ண்வெட்டியையுங்கொண்டிருக்குந்தோளையுமுடையவராயும் தன்
டங்கை அடைந்ததற்கு ஒருவரு மில்லாமையாலே துன்பங்கொ
ண்டு ஆயாசப்படுகிற பிட்டுவாணிச்சியம்மையாளும்படி அதிக
பசியுடையவர்போல வேஷங்கொண்டு சொக்கநாதர்வே
ண்டிய வடிவங் கொள்ளும் சொக்கநாயக ரென்றவாறு. (௯௯)

வந்தெனையேவல்கொள்வாருளர்கொலோமறந்திங்கென்று......*
புந்தியின்மகிழ்ந்துகோயில்வாயிலிற்புகன்றபோது......*
லந்தநன்மொழியைக்கேளாவன்னைதன்னயர்ச்சிதீர்ந்து......*
சிந்தனைபொழிந்துகூலியாளரைச்சென்றுசேர்ந்தாள்......*

எ-று. இங்கேவந்து என்னை வேலைகொள்வாருண்டோவென்
று மனத்திலே மகிழ்ச்சிகொண்டு ஆலயத்தின் கோபுரவாசலிலே
நின்றுசொன்னார் அப்போது அந்த நல்லசொல்லைக்கேட்டு நா
யாகிய பிட்டுவாணிச்சி யம்மையானவள் தன்னுடைய மனோவி
யாகூலந்தீர்ந்து கூலியாளாகிய கடவுளை அடைந்தாளென்றவாறு.

புடையின்மேலுலகோரின்றிப்புனைந்தரைப்புலித்தோலாடை......*
யுடையின்மேலசைக்குங்கச்சைபோங்குராச்சரமின்றிச்......*
சடையின்மேன்மதியமின்றித்தாங்கியமழுமானின்றி......*
விடையின்மேலின்றிநின்றவெளியனைவெளியிற்கண்டாள்......*

எ-று. பக்கத்திலே முப்பத்துமுக்கோடிதேவர்களு மில்லாம
ல் தரித்திருக்கின்ற புலித்தோலாடையும் அதன்மேற் கட்டப்ப
ட்டகச்சை யோங்கிய சர்ப்பமுமில்லாமல் சடாபாரத்திலே சந்தி
ரனுமில்லாமல் தாங்கப்பெற்ற மழுவுமானுமில்லாமல் இடபவா
கனமு மில்லாமல் நின்ற நிராகாரசுரூபத்தையுடைய கடவுளை வெ
ளியிலேகண்டாள் பிட்டுவாணிச்சியம்மையென்றவாறு.....(௱௧)

மைந்தநீயெனக்கிங்காளாய்வருகெனமுன்னர்க்கூலி......*
தந்தியேல்வருவலென்றுசாற்றலுநகைசெய்ப்போ......*
நித்தவாரமுதம்போலுமினியபிட்டளிப்பனல்லா......*
லந்திவாயிதனைவிற்றேயளிப்பனின்கூலியென்றாள்......*

எ-று. கண்டவுடனே மகனே நீ எனக்கு இங்கே ஆளாகிவரக்
கடவாயென்றுசொல்ல அதற்குக்கூலியாரானவர் முன்கூலிகொ
டுத்தியேயாகில் வருவேனென்றுசொல்ல அதற்கு அந்த அம்மை
இப்போது சாப்பிடுதற்குத் தேவாமிர்தம்போலும் இனிமையுள்
ள இந்தப்பிட்டுத்தருவேன் அல்லது சாயங்காலத்திலே இந்தப்பி
ட்டினைவிற்று உன்கூலியைக் கொடுப்பேனென்றுசொன்னவாறு.

இரும்பசியுடையேனன்னேயினியபிட்டளிப்பையாகிற்........ *
குரம்புகொண்டடைட்பேன்யானேகோலறைமுழுதுமென்னக்
கரும்புறத்துகின்மேலிட்டபிட்டினைக்கரத்தாலள்ளி............ *
விருப்பியிங்கிதனைக்கொள்வாயென்றனள்விருப்பமிக்காள்.....*

எ-து. மிகுந்த பசியுடையேன் தாயே யினிமையுள்ள பிட்டினைக் கொடுப்பாயானால் கோலாலளவுசெய்த உன்பங்குமுழுவதும் யானே அடைட்பேனென்றுசொல்லக் கரியபுறத்தையுடைய வஸ்திரத்துமேலேயிட்ட பிட்டினைக் கையினாலள்ளி விருப்பம்வைத்து இங்கே யிதனைத்தின்னென்று சொன்னாள் அன்புமிகுந்த பிட்டுவாணிச்சியம்மையென்றவாறு ........ ........ ............(௩௩)

கூற்றடுங்கமலபாதர்குறைந்துணிக்கரியசீரை ,,......... ..........*
யேற்றிடும்பிட்டுவாங்கியின்புறவமுதுசெய்து....... ............ *
மாற்றரும்பசியையயன்னமாற்றினையினிப்போய்வையை. . *
யாற்றினிலுற்றநீயுண்டாமருங்கரையடைட்பேனென்றார்... *

எ-து. கூற்றுவனையுதைத்த தாமரைமலரையொத்த திருவடிகளையுடைய பரமசிவனானவர் கொஞ்சத்துண்டாய்க் கருமையுள்ள கந்தையையேற்று இட்டபிட்டினைவாங்கி யின்பமிகும்படி திருவமுதுசெய்து ஒருவராலும் நீக்குதற்கரிய பசியினைத் தாயேதீர்க்கின்றாய் இனி நான் வையை யாற்றுக்குப்போய் உன்பங்குக்குண்டான அரியகரையை அடைட்பேனென்றுசொன்றவாறு...... (௩௪)

நன்றுநன்றினனுமன்னேநயந்துபிட்டளித்தல்வேண்டு... ..... *
மென்றுதந்துணிந்தசீரையேற்றதுநிறையவாங்கித்..... .........*
தின்றுநின்றலைநீர்வையைச்செழுங்கரையதனிற்சென்று........ *
குன்றெனுந்தவத்தாயுன்றன்கோலறைகாட்டுகென்றார்..... .... *

எ-து நல்லது நல்லது இன்னமுந்தாயே நயப்புடனே பிட்டினைக் கொடுக்கவேண்டுமென்று சொல்லித் தமது துண்டுக்கந்தையை யேற்று அதுநிறையவாங்கித் தின்றுநின்று அலையையுடைய நீர்மிகுந்த செழுமையுள்ள வையைநதிக்கரையின்மேல் வந்து மலைபோலும் உயர்ந்த தவத்தையுடைய அம்மே உன்னுடைய பங்கைக்காட்டென்றார் சொக்கநாயகரென்றவாறு...... .(௩௫)

மெய்த்தவம்புரிவார்தம்மில்விழுப்பமிக்குடையவள்ளை...... *
யித்தடங்கரையைவல்லேயெம்பிநீயடைப்பாயென்னப் .... *
பைத்தவெம்பகுவாய்நாகம்பணிமதிப்பாதிகொன்றைக் ....... *
கொத்துடன்முடிக்கவல்லார்கோலறையடைக்கலுற்றார். ....... *

ஏ-து. மெய்ம்மைபொருந்திய தவஞ்செய்பவருக்குள்ளே நன்மைமிகுந்தபிட்டுவாணிச்சியம்மையானவள் இந்தவிசாலமாந

ஐய கங்கையைச் சிகரத்திலே தம்பி நீ படைப்பாயாகவென்று சொல்லப்பட்டதையும் வெப்பம்பொருந்திய பிளந்தவாயையு முடைய சர்ப்பத்தையும் குளிர்ச்சிபொருந்திய அர்த்தசந்திர னையும் கொன்றைமலர்க்கொத்துடனே சிரசிலேமுடிக்கவல்லவ ராகிய சொக்கநாயகர் கோலாலவுலகில் பங்குநிலத்தை அ டைக்கத்தொடங்கினரென்றவாறு ............... (கசு)

பேர்ப்பர்மண்கூடைபெய்வர்பிறைமுடிமேற்கம்மாடு..........*
சேர்ப்பர்பின்சுமந்துவையைத்திண்கரைசொரிந்துமீள்வர்.....*
வேர்ப்பர்மெய்யிளைப்பார்போலமென்றுபிட்டுச்சுநாவிற்.....*
பார்ப்பரவ்வன்னைதன்மேற்பரிந்தருட்பார்வைசெய்வார்......*

எ-று. மண்ணைவெட்டுவார் கூடையிலேயிடுவார் மூன்றாம்பி றையைத்தரித்த சிரசின்மேற் சும்மாடுகோலிவைப்பார் பின்பு சுமந்து வின்னியவையைநதிக்கரையிலேசொரிந்து திரும்புவார் வேர்வையடைவார் திருமேனியிளைப்பார்போல் பிட்டினைமென் று நாவிலே சுவைபார்ப்பார் அந்தப்பிட்டுவாணிச்சியம்மைமே ல் அன்புவைத்துக்கிருபாநோக்கஞ்செய்வார்கூலியாளாகிய சொ க்கநாயகரென்றவாறு ............... (கஎ)

பிட்டிநற்றென்றகூலிப்பிறைமுடியசைப்பார்வேட.............*
விட்டமென்றசையிற்சாலவீசணுக்காடுதெய்ப்பார் .............*
கொட்டுடன்கவிந்தகூடைகொண்டுநின்றாடல்செய்வார் ........*
வெட்டிமண்குவிப்பாரோடிவிரைந்தடிபாய்ந்துமீள்வார் . . *

எ-று. பிட்டுநன்றாயிருக்கின்றதென்றுசொல்லி மூன்றாம்பி றையைத்தரித்த சிரசையசைப்பார் வேடர்குலத்தில்வந்த கண் ணப்பநாயனார் படைத்த மெல்லியமாமிசத்தைக்காட்டிலும் பர மசிவனுக்கு இந்தப்பிட்டு மிகவும் இனிமையுள்ளதாகுமெல்லாற் மண்வெட்டியுடனே கவிந்துக் கொண்டிருக்கின்ற கூடையையுங் கொண்டு கூத்தாடுவார்வெட்டிமண்ணைக்குவிப்பார்சீக்கிரத்திலே காலினாலேதாண்டித் திரும்புவாரென்றவாறு ..... ........... (கஅ)

பரிவுடைமனத்தினாளும்பரமர்தஞ்செய்திகண்டு...................*
கரையினையடைத்தல்வேண்டுமென்றுதங்கருமங்கூறு..... ......*
ளுரையுடைவழுதிதூதர்காண்பரோவொறுக்கஞ்செய்வா..... .........*
ரிருவினையுடையேன்மற்றிங்கென்செய்வேனெனநினைந்தாள். *

எ-று. அன்புள்ள மனத்தினையுடைய பிட்டுவாணிச்சியம்மை யுங்கூலியாளாகவந்த சொக்கநாயகருடைய செய்தியைப்பார்த் துவையையாற்றின்கரையை யடைக்கவேண்டுமென்றுதன்னுடை யகாரியத்தைச்சொல்லமாட்டாதவராய் வலிமையுள்ளபாண்டிய

ராசனுடைய தூதர்கள் காண்பார்களேயானால் துன்பஞ்செய்வா
ர்கள் இருவினைகளையுடைய நான் இதற்கு என்னசெய்வேனென்
று நினைந்தாளென்றவாறு...... ....... ........ ....... (௩௯)

மற்றிவணிலைமைமெவ[illegible]ளிமசாறணிகுறுகின்ற........ ............ *
கொற்றவாறிந்தாயின்னுங்கூடைமண்கரைமேலேற்றி..... ....... *
யுற்றவிக்கரையையன்னேயொல்லையிலடைப்பேனின்னே ..... *
சற்றிதற்கிரங்காதேகுன்றகவுடைமனையிலென்றார்.......... ..... *

எ-று. இந்தப் பிட்டுவாணிச்சியம்மை நிலைமையை வெள்ளி
யம்பலத்திலே நிருத்தஞ்செய்கின்ற சொக்கநாயகராகிய கூலி
க்காரர் தெரிந்து பின்னும் கூடையிற்கொண்ட மண்ணைக்கரையி
லேகொட்டிவிட்டு இந்தக்கரையை இப்பொழுதேதாயே சீக்கிர
த்தில் அடைப்பேன் கொஞ்சமாகிலும் இதற்கு இரங்காமல் உன்
னுடைய உரிமையுள்ள வீட்டுக்குப்போவென்றுசொன்றவாறு. (௪௰)

நீறணிபுனிதமேனிநின்மலனனுப்பப்போந்த ..... .................. *
தோறிரைமுகத்தினாடன்றொன்மனைப்புகுதுமெல்லை.... ....... *
கூறருந்தவத்தின்மிக்காள்கோலறையடைக்கவஞ்சி ...... ....... *
மாறடுதிரைக்கைதன்னாற்றொழுதனள்வையைமங்கை..... .... *

எ-று. விபூதிதரித்த பரிசுத்தமாகிய திருமேனியையுடைய
சொக்கநாயகரனுப்ப நடந்து தோல்திரைந்தமுகத்தையுடைய
பிட்டுவாணிச்சியம்மை தன்வீட்டிற்குப்போயினாள் அப்போது
சொல்லுதற்கரிய தவத்தினால் மிகுந்த அவளுடைய பங்கைச் சு
வாமியடைக்க அதற்குப் பயந்து மாறிவருகின்ற அலையாகியகை
களால்வணங்கினாள் வையைநதியாகிய மாதென்றவாறு ....(௪௧)

சிறந்தமண்கூடைவேணித்திருமுடிக்கொட்டையாக..... ......... *
நிறங்கிளர்கொன்றைநீழனிறைமணலணையதாக........ ..... .... *
வுறுந்தொழின்முயற்சியாலேயுயங்கிமெய்யிளைத்தார்போல.. *
மறைந்துலகெங்குமானவள்ளலார்பள்ளிகொண்டார் ........ ....*

எ-று. சிறக்கப்பெற்ற மண்ணெடுக்குங்கூடை சடாபாரத்
தையுடைய திருமுடிக்குத் தலையணையாகவும், நிறத்தையுடைய
கொன்றைமரத்தினது நீழலிலே நிறைந்திருக்கின்றமணலே மெ
த்தையாகவும் மிகுந்த தொழில்செய்யுமுயற்சியாலே வருந்தித்
திருமேனியிளைத்தவர்போல் மறைந்து உலகெங்குமாயிருக்கின்
றசொக்கநாயகர் துயில்கொண்டாரென்றவாறு...... ........(௪௨)

ஆங்கவர்துயிலுமெல்லையருட்பெருவாழ்வின்மிக்கா............*
ரோங்கியகருமஞ்செய்வாராகியொண்பிரம்புதாங்கிப்..... ....*

பாங்குநின்றவரைநாடிட்படர்ந்தகோலநறயிலுள்ள..........*
நீங்குநன்குணர்வீரென்னச்சென்றனர்களையிலன்றோர்........*
எ-து. அவ்விடத்திலே சொக்கநாயகர் திருத்திணைசெய்யும்போது கிருபையுள்ள பேரின்பவாழ்விலேயிருந்த மாணிக்கவாசகரானவர் மிகவுமுயர்ந்த காரியஞ்செய்பவராய் ஒளியையுடைய பிரம்புவைத்துக்கொண்டு பக்கத்திலே நின்றவர்களைப்பார்த்து அவரவருக்கு அளந்துகொடுத்த பங்கிலுள்ள குற்றத்தையும் நன்மையையும் அறியுங்கோளென்றுசொன்னார் அப்படியே அவர்கள் வையைநதிக்கரையில்மேற் போனார்களென்றவாறு......... (௪௩)
நன்குறவடைத்தல்செய்தாரியாவருமெனநயந்து................*
சங்கரனடைக்குநீடுதடங்கரையவர்களெய்தி.....................*
யெங்கணுமுயர்ந்துதாழ்ந்தவிவ்விடமியார்க்குவந்த..............*
பங்கிதுமொழிமினென்னநின்றவரிவைபகர்ந்தார்....................*
எ-து. நம்மைபொருந்த எல்லாரும் அவரவர்பங்கைநன்றாயடைத்தார்களென்று மனமகிழ்ந்து சொக்கநாயகரடைக்கின்ற நெடியகரையிலே அவர்கள்வந்து எவ்விடமும்உயர்ந்திருக்க இவ்விடமாத்திரம் தாழ்ந்திருக்கின்றது இது யார்க்குவந்தபங்கு சொல்லுங்களென்ன அங்குநின்றவர்கள் இவை சொன்னார்களென்றவாறு..................................................(௪௪)
பெருவளநீடுகூடற்பிட்டுவிற்றுணவுகொள்வா.....................*
ளொருமுதுமடந்தையாளாயொருவன்வந்திங்கணெய்தி........*
யிருநிலமகழ்ந்துகூடையுட்சொரிந்திரங்கிநிற்பன்..............*
சிரமிசையெடுப்பன்மீள்வஞ்சிந்துவனகுதல்செய்வான்........*
எ-து. பெரியவளங்கள் நீடிய மதுரைமாநகரத்திலே பிட்டினைவிற்றுச் சீவனஞ்செய்பவளாகிய ஒருகிழவியிருக்கின்றாள் அவளுக்காளாய் ஒருத்தன் இங்கேவந்து பெருமைபொருந்தியமண்ணைவெட்டிக் கூடையிலேசொரிந்து இரங்கிநிற்பான் தலைமேலெடுப்பான் திரும்புவான் கொட்டுவான் சிரிப்பானென்றவாறு.௪௫.
பாடுவனுடல்செய்வன்பையவோர்கூடைமண்ணை..............*
நீடுநின்கரையிலேறச்சொரிகுவனெடிதுநிற்ப.....................*
னோடுவனோடிமீள்வனொருகைமண்கரையிலேறப்.................*
போடுவன்போகவென்னில்வருவன்வாவென்னிற்போவன்.......*
எ-து. பாடுவான் கூத்தாடுவான் மெள்ள ஒருகூடைமண்ணை நீண்டு உரத்த கரையிலேறக் கொட்டுவான் நெடுநேரநிற்பான் ஓடுவான் ஓடித்திரும்புவான் ஒருகைமண் கரையிற்போகப்போடுவான் போவென்றால் வருவான் வாவென்றாற் போவானென்றவாறு.

பிட்டினை நுகர்வனையாவெரிது நன்றென்றுகையைக் ............ *
கொட்டுவன்செய்கைகாணிலரசிளங்குமரனொப்பா ............ *
னெட்டலர்க்கொன்றைநீழனெடுந்துயில்கொள்கின்றனெங் ... *
கட்டுரைசற்றுங்கேளானவன்றனைக்காண்மினென்றான் .... ..... *
எ-து. பிட்டினைச் சாப்பிடுவான் ஐயா மிகவும் நன்றாயிருக்கி றதென்று கையைக்கொட்டுவான் அவனுடைய செய்கையைப் பார்த்தால் இளமைபொருந்திய ராசகுமாரன்போலுமிருக்கின் றான் நெடிய மலரையுடைய கொன்றைமரநிழலில் நெடும்போ து நித்திரைசெய்கின்றான் எங்களுடையசொல்லைக் கொஞ்சமுங் கேளான் அவனைக் காண்மீரென்றார்களென்றவாறு ............ (சஎ)
என்றலுமவனையிங்கேகொணர்மினென்றிவருணின்ற ............ *
வன்திறலொருவன்கூறவாரியன்வல்லையோடிச் ............ ......... *
சென்றலுஞானயோகச்செழுந்துயிலொழிந்துமூன்று ......... *
தொன்றியபுரங்கள்செற்றார்தண்ணெனவிழித்தெழுந்தார் ...... *
எ-து. இப்படியென்று சொன்னமாத்திரத்திலே அவனை யிங் கே கொண்டுவாருங்களென்று இவருக்குள்ளே யிருந்த வலிய சௌரியத்தையுடைய ஒருவன்சொல்ல மிலேச்சதூதரிலொரு வன் சீக்கிரத்தில் ஓடினன் அப்போது செழுமையுள்ள ஞான யோக நித்திரைநீங்கித் திரிபுரங்களையுமெரித்த பரமசிவனனவர் திடுக்கென்று விழித்துக்கொண்டாரென்றவாறு ............ (சஅ)
விழித்தலுங்கடிதுசென்றவாரியன்வெருவநோக்கி ............ *
மொழிக்கனல்சிந்தியந்தமூன்னவன்றனையெய்த .... ..... .... *
வழைத்தலும்வருதல்செய்யாதஞ்சிநின்றிரங்கல்கண்டு ... ....... *
பழித்தவாமசங்கைபற்றுபோததனைபாவலாதான ............ *
எ-து. விழித்துக்கொண்டமாத்திரத்திலே சீக்கிரத்திலே ஓடி நின்ற மிலேச்சதூதனனவன் அவரைப் பயப்படப் பார்த்துச் சொல்லாகிய நெருப்பைப்பொழிந்து அந்தஎசமானிடத்துக்கு வாவென்று அவரையழைத்தமாத்திரத்திலே வாராமல் பயந்து நின்று இரங்குதல்கண்டு பழித்து அவருடைய சிவந்த கையைப் பிடித்திழுத்தான் பத்தியில்லாதவனென்றவாறு ............ (சகூ)
ஆங்கவன்கடிதிற்றள்ளியண்ணலையெண்ணிலாத . .............. *
தீங்கினன்முன்னர்க்கொண்டுசேறலும்வெகுட்சியெய்திப் ...., *
பாங்குநின்றவருணின்றபாவியைப்பாவிநோக்கி .... ............ *
யீங்கெழுகுருதிசோரவடித்திடுங்கிவனையென்றான் ..... ........ *
எ-து. அந்தத்தூதனனவன் ஆளாகவந்தகடவுளைச் சீக்கிரத்தி லே அளவற்ற குற்றங்களையுடையவன் முன்னேதள்ளிக் கொண்டு

போய்ச்சேர்ந்தமாத்திரத்தேபாவியாகிய எசமான் கோபங்கொண்டு பக்கத்திலேயிருந்தவரில் ஒருபாவியைப்பார்த்து இங்கே ச ந்தமொழுகும்படி யிவனை அடிப்பாயாகவென்றானென்றவாறு.
கடுத்தசொல்வன்கணாளன்கதத்துடன்மாறன்கையி........ ...... *
லெடுத்தனன்முனிவன்விண்ணோரொடுத்தனர்தொழுதசெங்கை*
யடித்தனனடித்தபோதிலன்புடையரிவைபாகங் ........ ..........*
கொடுத்திலர்தானுக்கமெய்துமறைந்தனர்குறைவிலாதார்..... .. *
எ-று. கடுத்தசொல்லையுடைய கொடியவன் கோபத்துடனே பிரம்பினைக்கையிலேயெடுத்தான் அப்போது முனிவரும்தேவரும் கையெடுத்துக்கூப்பி வணங்கினார்கள் அவன் அடித்தான் அப் போது அன்புடைய உமாதேவியிருக்கும் வாமபாகத்தைக்கொ டாமல் அங்கிருந்தவர்களெல்லாந் துடிக்கும்படி மறைந்துவிட் டார் குறைவில்லாத சொக்கநாயகரென்றவாறு..... ......... (௫௧)

[ வேறு. ]

தார்மேனின் றிலங்குபுயவழுதிமேலுந் - தன்மனைமங்கை யர்மேலுமமைச்சர்மேலு, மார்மேலுஞ்சென்றுபொருஞ் சேனைமேலு - மயன்மேலுமால்மேலு மறவோர் மேலுந், தேர்மேல்வெம்பகன்மேலுமதியின்மேலுஞ் - சிறந்துளவி ந்திரன்மேலுந்தேவர்மேலும், பார்மேலுங் கடன்மேலு மரங்கண்மேலும்-பட்டதரன்மெய்யிலடிபட்டபோது.. *
எ-று. அப்போது மாலையணிந்த பிரகாசம்பொருந்திய புய த்தையுடைய பாண்டியராசன்மேலும், அவன்பத்தினிகள்மே லும், மந்திரிகள்மேலும், எவர்கள்மெலும்போயுத்தஞ்செய்ய ஞ் சேனைகள்மேலும், பிரமன்மேலும், மகாவிஷ்ணுமேலும் முனிவர்மேலும், தேர்மேலிருக்கின்ற சூரியன்மேலும், சந்திர ன்மேலும் சிறப்பினைப்பெற்றுள்ள தேவேந்திரன்மேலும்,தேவ ர்கள்மேலும், பூமியின்மேலும், சமுத்திரத்தின்மேலும், மரங் கள்மேலும், பட்டதுபரமசிவன்மேலேபட்ட அடியென்றவாறு
நந்தமுரு வொழிந்துபிறி துருவமெய்திச் -
சங்காழிதரித்தமாலு, மந்தமுத றெரிவரிதாய் வெளியே நின்ற - வண்ணலார்வடிவிலடிபட்டபோது, லெந்தவுலகங்க ளினுமிருந்துளோர்க - ளெம்முடலிலடியுறைத்ததென்று கூற, முந்திபெழும்பன்மொழிகளுகாந்தவெல்லை - மோக ரிக்குமெழுகடலின்முழக்கம்போலும் ........ .........*
எ-று. தங்கள்தங்கள் வடிவங்களைவிட்டு வேற்றுருவங்கொண்டு நான்குமுகங்களையுடைய பிரமதேவனும், சங்குசக்கரந்தரித்த மகாவிஷ்ணுவும் தேடி அந்தமும் ஆதியுந் தெரிந்தரிதாகி நிற்

போதுவெளியேநின்றசொக்கநாயகருடையதிருமேனியிலே
டிபட்டபொழுதிலே எந்தலோகத்திலிருந்தவர்களும் எங்கள்
கத்தில் அடிபட்டதென்று சொல்லமுன்னதாக எழும்புகின்
அந்தச்சொற்கள் உகமுடிவுகாலத்திலே சத்திக்கின்ற சத்தசமு
திரங்களுடைய முழக்கம்போலானதென்றவாறு ..............(ருக)

மாயையெனுங்கரும்பெரியபுனன்மேன்மொக்குள் - வல்
ணமெனுமெண்ணிலா வண்டத்துள்ளுறு, மேயவகையெண்
பத்துநான்குநூறு - யிரமானபலயோனியிவற்றினுள்ளுறு,
நாயவுயிர்க்குயிராக நிற்குந்தன்மை - யவனிதலத்தஞ்ஞா
னரறிந்துபாதச், சேயமலர்வழுத்துதற்கோர் கூலியாளாய்
ச் சென்றுமுடிமண்சுமந்தார் தில்லைநாதர் .......... ...........*

எ-து. மாயையென்று சொல்லுகின்ற கருமையுள்ள பெரியநீரி
ன்மேலே குமிழிவடிவென்றுசொல்லும் அளவில்லாத அண்டங்க
ளுக்குள்ளே பொருந்தியிருக்கின்றஎண்பத்துநான்கு நூறாயிரம்
யோனிபேதமென்னும் இவைகளினுள்ளிருக்கின்ற உயிருக்குயி
ராகிநிற்குந் தன்மையைப் பூவுலகத்திலே அஞ்ஞானிகளறிந்து த
ம்முடையபாதமாகியசெந்தாமரை மலரைவணங்குதற்கு ஒருகூ
லியாளாகிப் போய்ச் சிரசிலே மண்சுமந்தார் தில்லைமாநகரத்தி
லே நிருத்தஞ்செய்கின்ற சபாநாயகரென்றவாறு .......... .(ருச)

[ வேறு. ]

மையணியுந்திருமிடற்றார்மெய்யிலடிவாதவூ ....................*
ரையருடம்பினும்வந்துபடுதலுமேயயர்வெய்தி.....................*
யுய்யவெனையாட்கொள்ளவுகந்தொருவர்க்காளாகி..............*
மெய்யமொழுந்தருளினரோவென்றென்றுமிகநொந்து..........*

எ-து. மேகத்தையொத்த அழகிய கண்டத்தையுடைய சொ
க்கநாயகர் திருமேனியிலேபட்ட அடியானது திருவாதவூரிலே
அவதாரஞ்செய்த மாணிக்கவாசகருடைய திருமேனியிலும் வந்
துபட்டமாத்திரத்திலே அவர் ஆயாசத்தை யடைந்து நான் பி
ழைக்கும்படி யென்னை அடிமைகொண்டருள மனமகிழ்ந்து
சொக்கநாயகர் ஒருவருக்குக் கூலியாளாகி எழுந்தருளினரோ
வென்றுமிகவும்தமக்குள்ளே வருத்தப்பட்டடென்றவாறு.. (ருரு)

தம்பெருமையறியாததம்மிறைவர்தமக்கிரங்கிக் ........... ..........*
கம்பிதமுங்கண்ணீரும்வரக்கவற்சியுறும்போதில்...................*
வெம்பிறவிதொலைத்தார்முனிவரியர்கள்விரைந்தோடி.......... *
யும்பர்பிரான்றிருவிளையாட்டெல்லாமங்குரைத்தார்கள் ....... *

எ-து. தம்முடைய பெருமை யிவ்வளவென்று அறியாத தம

று கடவுளாகிய சொக்கநாயகருக்கு இரக்கமுற்று நடுக்கமும்,
கண்ணீரும், உண்டாகக்கவலையடைந்தபொழுதிலே வெய்ய பிற
வியைத்தொலைத்த மாணிக்கவாசகசுவாமிகளே நாதர்கள் சீக்கிரத்
திலோடிவந்து தேவர்களுக்கிறைவராகிய கடவுளுடைய திருவிளை
யாடலெல்லாம் சொன்னார்களென்றவாறு .................. (௫௬)

வேட்டருரும்பெருங்காதல்வித்தகரித்தன்மைமெலாங் .... *
கேட்டுமனந்தளர்ந்துமிகக்கிளர்ந்துவிழிப்புனலொழுக....... *
வாடடிகழுந்தசடையண்ணன்மண்சுமந்தவிடங்கொடுபோய்க். *
காட்டுமெனவெழுந்தவரோடவ்விடநேர்கடிதெய்தி ......... *

எ-று மிகுந்த ஆசையால்விரும்புகின்ற மாணிக்கவாசகர் இந்
தச்செய்திகளனைத்தையும் கேள்விப்பட்டு மனந்தளர்ந்து மிக
வும் கண்களிலேநீர்பெருகச் சிவந்தவொளியினால் பிரகாசிக்கின்ற
சடாபாரத்தையுடைய சொக்கநாயகர் மண்சுமந்த இடத்தைக
கொண்டுபோய்க் காண்பியுங்களென்றுசொல்லி அவர்களுடனே
அவ்விடத்திலே நேராகச் சீக்கிரத்திற்போயென்றவாறு (௫௭)

அழுங்கியருங்கொடுநரகிலடியேனும்வீழாம ...... ............. *
லெழுந்தருளும்பெரியோனேயெங்குளையாயென்றென்று *
தொழுங்கரமுங்கண்ணீருந்துளங்கியமெய்ப்புளகமுமாய் ... *
விழுந்துபுரண்டிவ்வாறுபுலம்பினர்மெய்யன்பாளர். . ... *

எ-று. அடியேன் வருந்தப்பட்டுக்கொடுமையையுடைய பெ
ரியநரகத்தில் வீழாமல் எழுந்தருளிய கடவுளே நீ யெவ்விடத்தி
லிருக்கின்றாய் எவ்விடத்திலிருக்கின்றாயென்று தொழுகின்றகை
களுங் கண்ணீரும் நடுங்குகின்ற மெய்யிற்புளகமுமுடையவராய்க்
கீழேவிழுந்துபுரண்டு இந்தப்பிரகாரம் புலம்பினார் மெய்யன்
பையுடைய மாணிக்கவாசகரென்றவாறு .................. (௫௮)

நீறுபடும்பொன்மேனிநின்மலனேநெடுங்கங்கை... ........... *
யாறுபடுஞ்சடைமுடியாயடியவர்கட்கெளியானே ............. *
மாறுபடுமுபுரமெரித்தாய்மாறுபடும்போதுடனிற் . .... ..... *
கூறுபடுஞ்சிவஞானக்கொம்பிளைங்குழையாதோ . . .... *

எ-து. திருநீற்றையணிந்த பொன்போன்ற திருமேனியையு
டைய நின்மலனேநெடிய கங்காநதியைத்தரித்த சடாமுடியை
யுடையவனே அடியவர்கட்கெளியவனே மாறுபட்ட திரிபுரத்
தை எரித்தவனே மாறுபடும்போது உன்னுடைய இடப்
பாகத்திலிருக்கின்ற சிவஞானமே வடிவாகிய உமாதேவியினது
மனங்குழையாதோவென்றார் மாணிக்கவாசகரென்றவாறு. ௫௯.

கொங்கையான்மணிமார்பிற்குறியிடுமெவ்வீறுடைய....... .......*
மங்கையாள்பெருமானைமண்சுமக்கநினைத்தாளோ...............*
கங்கையாளலைக்கரத்தாற்கரைத்திலளோபுள்ளுருவாம்...........*
பங்கையர்சனனறியாப்பணிமுடியென்றறியாளோ...............*

எ-து. ஸ்தனபாரங்களாலே அழகியமார்பிலே தழும்புசெய்தவிருப்பையுடைய காமாக்ஷியானவள் கடவுளை மண்சுமக்கும்படி நினைத்தாளோ கங்கையானவள் அலையாகியகையினாலே அந்த மண்ணைக் கரைக்கவில்லையோ அன்னவடிவாகிய தாமரைமலரிலிருக்கின்ற பிரமனாலுமறியப்படாதசர்ப்பத்தையணிந்தசிரசென்றறியாளோவென்றார் மாணிக்கவாசகரென்றவாறு.........(௬௰)

பிரமனுடன்றிருமாலும்பிறப்பகலப்பல்காலும்.....................*
பரிவினுடன்றருமலரோபத்தரிடும்பச்சிலையோ... ..............*
புரிதருசெஞ்சடையோநற்புதுமதியோவாயிரவாய்..............*
வரியரவின்பலபடமோமண்சுமக்குஞ்சும்மாடு.... ..............*

எ-து பிரமதேவனுடனே மகாவிஷ்ணுவுந் தம்முடையபிறவி நீங்கப் பலதரமும் அன்பினுடனே சாத்துகின்றமலரோ அல்லது அடியவர்கள் சாத்துகின்ற பச்சிலையோ முறுக்கையுடைய சிவந்தசடையோ நல்ல புதுமையையுடையமதியோ ஆயிரம்வாயுள்ள நெடியசர்ப்பத்தினுடைய அனேகம்படங்களோ நீயெடுத்தமண்ணைச் சுமக்குஞ்சும்மாடென்றவாறு.. ............(௬௧)

கலையறியும்புகழ்வையைக்கரைதிருவம்பலமாக.... ...............*
வலையெறியும்புனலோசையந்தரதுந்துமியாகத் ............ .....*
தலைவனடங்கண்டார்களரவமெனுந்தவமுனியுஞ் ..... ...........*
சொலைதவிரும்புலியென்னுங்குலமுனியுமானாரோ... ............*

எ-து. தமிழ்ப்பாடலின் தன்மையையறிந்த கீர்த்தியையுடைய வையைநதிக்கரையே அழகிய வெள்ளியம்பலமாக. அலையெறிகின்ற நீரினுடையசத்தமே தேவதுந்துமியாக. கடவுளுடைய நிருத்தத்தைக்கண்டவர்கள் பாம்புவடிவையுடைய தவமுனியாகியபதஞ்சலியும் கொலைதவிர்த்த புலியென்று சொல்லப்படுகின்ற[illegible]யர்ந்த வியாக்கிரபாதருமானாரோவென்றவாறு(௬௨)

மீனேறுங்கொடித்தென்னன்விழிகளேறவிரைதுரகந்... ........*
தானேறுவதுகண்டுதருக்கலைபொற்கெண்டேறத்........... .....*
தேனேறுமலர்க்கொன்றைத்திருமுடிமேன்மண்ணேற... . .....*
யானேறுஞ்சிவபதமுமெனக்கேறவின்றது... .... . ......... ..*

எ-து. மீனெழுதிய கொடியையுடைய பாண்டியனது கண்ணுக்குநேராக விரைந்துநடக்கின்ற குதிரையேறுவதுகண்டு அவன்

கொடுக்கும் பீதாம்பரமானது குறிஞ்சிச்சுவக்கிலேறத் தேனேறி யமலர்ந்த கொன்றைமாலையைத் தரித்த அழகிய சிரசின்மேல் மண்கூடையேற விருந்தபடியால் மாமின்றுகின்ற சிவபதமும் எனக்கேற இனிமையில்லாததாயிருந்ததென்றார் மாணிக்கவாசக ரொன்றவாறு ........................................(கூ௩)

பொன்னுலகத்துள்ளோரும்புரந்தரனுந் திருமாலு.................*
மன்னுமறைக்குரியோனும்வழியடிமைத்தொழில்செய்ய.......*
வன்னைதனக்காளாகியணிவையையடைந்தடிபட்.................*
டென்னையருட்பணிகொள்ளவிசைந்தனையேயிறையோனே *

எ-று. தெய்வலோகத்திலுள்ள தேவர்களும் தேவேந்திரனும் மகாவிஷ்ணுவும் நிலைபெற்ற வேதத்திற்குரிய பிரமதேவனும் வ ழிவழியாக அடிமைத்தொழில்செய்யபிட்டுவாணிச்சியம்மைக்குக் கூலியாளாய் அழகிய வையைநதியை அடைந்து அடிபட்டு என்னைக் கிருபையையுடைய பணிகொள்ளச் சம்மதித்தனையே யிறையவனேயென்றார் மாணிக்கவாசகரொன்றவாறு.....(கூச)

கட்டுமொத்துணிச்சீரைக்கச்சையுமத்திருத்தோளிற் ............ *
கொட்டுமுடித்தலைமீதுகவித்தவொருகூடையுமாய்ப்.......... *
பிட்டிடுதற்றவமுடையாள்பின்புவருந்திருக்கோல ......... .....*
மிட்டமுறத்தொழும்படிதான்கண்டிலனிறையோனே. .......*

எ-று. அரையிற்கட்டுகின்ற துண்டாய்க்கிழிந்த துணியும் கச்சையும் அந்தத் திருத்தோளிலே மண்வெட்டியும் சிரசின்மீதி லே கவித்துக்கொள்கின்ற ஒருகூடையுமாய்ப் பிட்டினைத்தரு கின்ற நல்லதவமுடைய அம்மையினது பின்னேவருகின்ற அழ கியகோலத்தை அன்புபொருந்தத் தொழும்படி தான்காணவில் லை யிறையவனேயென்றார் மாணிக்கவாசகரொன்றவாறு...(கூரு)

தாருருஞ்சடைமுடியாய்த்தவம்பெருகமுயன்றவர்க..............*
ணீருருமபுகழ்வையைநெடுங்கரைமேனின்றோரோ........ ......*
சீருருங்கனகமுடித்தென்னவனோமதுரையெனும்..............*
பேரூரிலிருப்பவரோபிட்டமுதிட்டருள்வாரோ.................*

எ-று கொன்றைமாலையைத்தரித்த சடாமுடியையுடைய சொக்கநாயகரோடுங் கூலியாளராய்வந்த திருவுருவைக்காண மிகு வுந் தவத்தை முயன்றுசெய்தவர்கள் வெள்ளமோதுகின்ற கீர்த்தி மிகுந்த வையைநதிக்கரையின்மேல்நின்றவர்களோ சிறப்புமிகு ந்தபொற்கிரீடத்தையுடைய பாண்டியராசனது பெரியமதுரா மாநகரிலிருப்பவரோ. பிட்டமுதிட்டருளிய செம்மனச்செல்வி யோ. வென்றார்மாணிக்கவாசகரொன்றவாறு.....................(கூசு)

பொன்மவுலித்தலைப்பூதபுண்ணியர்மண்சுமந்தேறுங் .......... *
பெருமலியுங்கோலமையுங்குளிர்வையைப்பேராறுங் .......... *
கன்மமெனும்பகைபோகக்கண்ணுதல்வெம்பரியேறுந் ...... *
தென்மதுரைமூதூருமல்லவோசிவலோகம் ........ .......... *

எ-து. பொன்னினாற்செய்த கிரீடத்தையணிந்த சிரசின்மேலே புண்ணியராகிய சொக்கநாயகர் மண்ணைச்சுமந்துகொண்டேறுகின்ற, பெருமையிருந்த கோலினுவந்த பங்குநிலமும், குளிர்ச்சிபொருந்திய வையையென்னும் பெயரையுடைய நதியுமாகன்மமலமென்னும் பகையானது ஓடிப்போகப் பரமசிவன் வெவ்விய குதிரையிலேறுகின்ற அழகியமதுரைமாநகரமும், அல்லவோ சிவலோகமென்றவாறு .......... .......... (கூஎ)

இன்னவகையன்புடையாரிரங்கினராயிடைவையைத் .... ........*
துன்னுதிரைப்பேராறுந்தொலையவடிந்ததுபின்னர்த் ..........*
தென்னவனுஞ்சிவன்செயலாமெனத்தெளிந்துவாதவூர் .... ..*
மன்னவர்தம்பால்வந்துவணங்கியிதுகூறுவான் ........ ..... ... *

எ-து. அவ்விடத்திலே இந்தப்பிரகாரம் அன்பையுடைய மாணிக்கவாசகர் இரக்கமுற்றிருந்தனர். நெருங்கிய அலைகளையுடைய பெரிய வையைநதியும் சீக்கிரத்தில் வடிந்தது பின்பு பாண்டியராசனும் இவையெல்லாம் சிவன்செயலாமென்று தெளிந்து திருவாதவூர்க்கரசராகிய மாணிக்கவாசகரிடத்தில்வந்து வணக்கஞ்செய்து இதனைச் சொல்வானென்றவாறு...... ..........(கூஅ)

அந்தரர்தம்பதியினிழிந்தருள்புனைமாத்தியர்குலத்து... ........*
வந்தருளித்தமியேற்குமந்திரியாய்மகிழ்வெய்தி.............. ..... *
யெந்தைவயப்பரியேறல்காட்டியெனக்கொழியாத.......... *
பந்தமறத்திருவுளம்பற்றினைநற்றவத்தோனே ... ..... ........*

எ-து. தேவர்கள்வசிக்கின்ற பொன்னகரத்தினின்றிழிந்து கிருபையைத்தரித்த அமாத்தியர்குலத்திலேவந்து திருவவதாரஞ்செய்து தனியேனாகிய அடியேனுக்கு மந்திரியாகி மனமகிழ்ச்சியடைந்து எமதுபிதாவாகிய சொக்கநாயகர் வெற்றியையுடைய குதிரையேறிவருவதை எனக்குக்காட்டி யெப்போதும் நீங்காத பாசத்தையறும்படி திருவுளம்பற்றினீர் நல்ல தவத்தையுடைய மாணிக்கவாசகரேயென்றான்பாண்டியராசனென்றவாறு.(கூகூ)

கருமாறத்திருமேனிகாட்டினனென்னுணர்மதி.... ......... . *
திருமாலும்பரவரியான்றேவருடன்பரியேறி ... . ............ *
வருமாயக்குழலினலழுக்காடையண்டர்தொழும் ..... ........ *
பெருமானுக்களித்தேனென்பிழைசெய்தேன்பெரியோனே..*

எ-று. என்னுடையபிறவிமாளத் திருமேனிகொண்டு காண்பித்தாரென்றறிந்துகொள்ளாமல் மகாவிஷ்ணுவாலும் வணங்குதற்கரிய சொக்கநாயகர் தேவர்களுடனே குதிரையேறிக்கொண்டுவந்த அந்தமாலையிலுடைய குழைகையினாலே அழுக்குவவுதிரத்தைத் தேவர்பணிகின்ற கடவுளுக்குக்கொடுத்தேன் என்ன பிழையினைச்செய்தேன் பெரியோனேயென்றான் பாண்டியராசனென்றவாறு...... ...... ...... .. .... ........ .......... ......... (எ௰)

அட்புணிசெஞ்சடையானையரும்பரிமேலாராக்கு ................ *
மெய்ப்பொருளென்றுணராமல்வெய்யவினைப்பொருள்வேண்டி
செப்பருமித்தழகண்மைசெய்வித்தேன்சிறுமையுளோ.... ... [ச்
னெட்பிழையும்பொறுத்தருள்வாயானரகிற்புகுதாமல்......... *

எ-று. கங்கையைத்தரித்த சிவந்தசடையையுடைய கடவுளை அருமையையுடைய குதிரைக்காராக்கும் உண்மைப்பொருளென்று தெரிந்துகொள்ளாமல் தீவினைக்குக்காரணமாகிய திரவியத்தை விரும்பிச் சொல்லுதற்கரிய கொடுமைசெய்வித்தேன் சிறுமையுள்ளவனாகிய என்னுடைய எத்தட்பிழையும் பொறுத்தருள்வாய் அடியேன் நரகத்திற் புகாமலென்றவாறு...... ...(எக)

தூநாகமணிந்தபிரான்றங்கமிகும்பரியேறிப்.... ............... *
பூநாறுஞ்சடைமேல்மண்சுமந்தபுகழ்போதாதோ .... ... ....*
யானுநின்பணியேசெய்தொழுகவிவ்வுலகந்... .... .... ....... *
தானுவவேண்டுமெனவென்றுரைத்தான்றமிழ்மாறன்.......... *

எ-று. பரிசுத்தம்பொருந்திய சர்ப்பத்தையணிந்த சொக்கநாயகரானவர் உயர்வுமிகுந்த குதிரையின்மேலேறிப் பூமணம் வாசிக்கின்ற சடாபாரத்தின்மேல் மண்சுமந்த கீர்த்திபோதாதோ நான் நாள்தோறும் உம்முடையபணிவிடையேசெய்துவர நீர் இனி இவ்வுலகத்தை யாளவேண்டுமென்று வேண்டிக்கொண்டான் தமிழைவளர்க்கின்ற பாண்டியராசனென்றவாறு.....(எஉ)

[வேறு.]

வன்திறன்மன்னனிவ்வாறுரைத்தலும்வாதவூரர்.... ...............*
தென்திசைபுரக்குநீதித்தென்னவன்றன்னைநோக்கிப்.............*
பின்திகழ்சடையோன்மன்னும்பெருந்துறைநகரிலேக.......*
வின்றெனைவிடுப்பதேமற்றிவ்வுலகளிப்பதென்றார் ..............*

எ-று. வலியசௌரியத்தையுடைய பாண்டியராசன் இந்தப் பிரகாரஞ் சொன்னமாத்திரத்தில் திருவாதவூரர் தென்திசையை ரக்ஷிக்கின்ற நீதியுடைய அவ்வரசனைப்பார்த்துப் பின்னே பிரகாசிக்கின்ற சடையையுடைய கடவுள் நிலைபெற்றிருக்கின்ற திரு

ப்பெருந்துறைக்குப் போகும்படி இன்று என்னையனுப்புவதே யெனக்கு இந்தவுலகத்தை யாளும்படிக்குக் கொடுப்பதென்றார் மாணிக்கவாசகரென்றவாறு ........ ............................(எஊ)

தென்புலத்தலைவன்றானுஞ்சிந்தையிலொருந்துமுன்னோ ..........*
னன்பருக்கரசர்வாழ்விலாசையிங்குளதோவென்று .... .... .....*
மென்பதத்திறைஞ்சியையாவேண்டியசெய்கவென்று ..........*
தன்புகழ்க்கூடன்மூதூர்ப்புகுந்தனன்றானைசூழ..... .......... ...*

எ - று. தென்றிசை மன்னனாகிய பாண்டியனும் அப்படிசொல்லக்கேட்டு மனத்திலே நொந்துகொண்டு முன்னோனாகிய சிவனுடைய அடியாருக்கு ராசசம்பத்திலே ஆசையுண்டோவென்று சொல்லி மாணிக்கவாசகருடைய மிருதுவாகிய பாதத்திலே வணங்கி ஐயனே மனதுக்கு வேண்டியபடி செய்யக்கடவீரென்று செலவுகொடுத்துத் தன்னுடைய கீர்த்திமிகுந்த மதுராபுரியிற்புகுந்தான் சேனைகள்சூழவென்றவாறு.... .........,....(எச)

சற்றவத்தொழில்செய்யாததானைமன்போனபின்ன. ..... ... ..*
ரற்றவர்க்கற்றசோதியருட்பெருவாழ்வுவேண்டிக்..... ..... ..... *
கொற்றவற்குற்றகோலங்குறையெனநீத்துமேலா..... ..... ......*
நற்றவக்கோலங்கொண்டார்நம்பருக்கன்புமிக்கார் .... ..........*

எ - று. சற்றாகிலும் அவத்தொழிலைச்செய்யாத சேனைகளையுடைய பாண்டியராசன் போனபின்பு அற்றவர்க்கற்ற கடவுளுடைய பேரின்பவாழ்வை விரும்பி அவ்வரசனுக்காகக் கொண்டிருந்த வேடத்தைக் குறையென்று நீக்கி மேலாகிய நல்லதவவேடங்கொண்டார் பரமசிவனுக்கன்புமிகுந்த மாணிக்கவாசகரென்றவாறு ................ .......... ..............................(எரு)

அந்தணையாலவாயிலண்ணலைவணங்கியந்த .... ....... ............*
மைந்திகழ்சோலைநீடுமதுரையம்பதியைநீங்கி..... ............. .*
வித்தகர்தமைமையாண்டமேனிகண்டிறைஞ்சவேண்டும் ..........*
பித்தினர்கடிதுசென்றார்பெருந்துறைபொருந்தவெண்ணி.....*

எ - று. அந்தணராய் மதுரையிலிருக்குஞ் சொக்கநாயகரைவணங்கி மேகங்கள் தவழுகின்ற பிரகாசமிகுந்த சோலைநீடிய அந்த மதுரைமாநகரைவிட்டுக் கடவுள்தம்மைஆண்ட திருமேனியைக் கண்டு வணங்கவேண்டுமென்று திருப்பெருந்துறைக்குப்போக நினைத்துப் பித்தங்கொண்டவராய்ச் சீக்கிரத்திற்போனார் மாணிக்கவாசகரென்றவாறு ............ ... ........ .... ....... ........(எசு)

மிடைகெடவைத்தபாதவித்தகருரைநோக்கி ................. .....*
நடையிடுமெல்லைதன்னினன்மனவிரைவுங்காற்றுந் ... ....... .....*

தடைபடுகன்றைநாடுங்கபிலையுந்ததும்பிநின்று ..............*
மடையினையுடைக்குநீருமாயினர்வாதவூரர் .................... ......*

எ-து. அஞ்ஞானம் நீங்கத் திருவடியைவைத்த கடவுளுடைய திருப்பெருந் துறையைப்பார்த்து நடைகொள்ளுஞ் சமயத்தில் மனோவேகமும், வாயுவேகமும், தடைபட்டிருக்கின்ற இளங்கன்றை நாடிப்போகின்ற கபிலைப்பசுவும், நிறைந்து நின்று மடையையுடைக்கும் நீரும், போலாயினர் திருவாதவூரரென்றவாறு.

கண்ணுழையாதகானும்பதிகளுங்கடிதுநீங்கி ........ .........*
யெண்ணறுமுனிவர்மேவுமெழிற்பெருந்துறையிலெய்திப் .. .*
புண்ணியவினத்தர்சூழமுன்புபோலிருந்தபோதில் ...... ......*
விண்ணவரரியன்பொற்றாள்வீழ்ந்திதுதாழ்ந்துசொல்வார்.... *

எ-து. கண்களாலும் நுழையப்படாத காடுகளும்ஊர்களுஞ் சீக்கிரத்திலே கடந்து போய்அளவற்ற முனிவர்கள்வசிக்கின்ற அழகுநிறைந்த திருப்பெருந் துறைக்குப்போய்ப் புண்ணியத்தினையுடைய முனிவர்கள்சூழ முன்புபோலிருந்தபோதில் தேவர்களுக்கரியனாகிய பரமசிவனுடைய திருவடியின்மேல்வீழ்ந்து வணங்கி யிதைச்சொல்வார் மாணிக்கவாசகரென்றவாறு......... (௭௮)

தீண்டுதற்கரியமார்பிற்சேயிழைதனத்தினாலு ..................*
மீண்டொருமாற்றினாலுமெய்தியதழும்பபோற்றி .... ..........*
வேண்டியவடிவமாகிவெம்பரிமேற்கொண்டெம்மை ......... *
யாண்டருள்செய்யவந்தவண்ணலேபோற்றிபோற்றி. ....... *

எ-து. மூன்றுலே சத்தபுரியிலும் விசேடமாகிய காஞ்சிமா நகரத்தில் கம்பையாற்றிற்காமாக்ஷி பூசைசெய்யும்போது அந்தப்பூசையின் உறுதியைச்சோதிக்க அந்நதியிலே சர்வதீர்த்தங்களையும் வரச்செய்து அது ஆகாசமளாவிவருகிறபோது சிவபூசைக்குவிரோதமாய்வருகிறதென்று பயந்து தழுவிக்கொள்ளுதலால் ஒருவராலுந் தொடுதற்கரிய மார்பிலே அந்தக்காமாக்ஷியினுடைய தனபாரங்களாலும் இங்கே ஒருமாற்றினாலும் அடைந்த தழும்பையுடையவனேபோற்றி வேண்டிய வடிவங்கொள்பவனாகி வெவ்விய குதிரையின்மேலேறிக்கொண்டு எங்களை யடிமைகொண்டு அருள்செய்யவந்த ஐயனேபோற்றிபோற்றியென்றார் மாணிக்கவாசகரென்றவாறு...... .................. ................ (௭௯)

அண்டருக்கரியாய்போற்றியடியவர்க்கெளியாய்போற்றி...... *
வண்டமிழ்ப்பாண்டிநாயகாமண்சுமந்தாய்போற்றி............*
கண்டனைகலிவியமேனிகாட்டியென்சென்னிமீது...... ........*
முண்டகத்திருத்தாள்வைத்தமுத்தனேபோற்றிபோற்றி.... ...*

எ-து. தேவர்களுக்கு அரியவனேபோற்றி அடியவர்களுக்கு எளியவனேபோற்றி வளத்தையுடைய தமிழ்மிகுந்த பாண்டிய தேசம் வாழும்படி மங்கமந்தவனேபோற்றி கண்ணுக்கு இனிய திருவுருவைக்காட்டி என்சிரசின்மேலே தாமரைமலர்போன்ற திருவடிகளைவைத்த முத்தனே போற்றிபோற்றியென்றார் மாணிக்கவாசகரென்றவாறு............................................(அய)

போற்றியென்றின்னவாறுபுகன்றவர்முடிமேற்செங்கை.........*
யேற்றியங்கினியகூறியெழுகெனவெழுந்தபின்னர்...................*
நீற்றையும்புனைந்துஞானநிறையருட்பார்வைநல்கி...............*
யீற்றிருந்தன்பர்கூட்டம்விரங்கினர்களங்கமில்லார்...............*

எ-து. போற்றியென்று இந்தப்பிரகாரம் துதித்தமாணிக்கவாசகரது சிரசின்மேலே சிவந்தகையைவைத்து இன்சொற்சொல்லி எழுந்திருமென்று சொல்ல எழுந்தபின்பு வீபூதியுந்தரித்து அறிவுநிறைந்தகிருபாநோக்கஞ்செய்து வீற்றிருந்து அன்பையுடைய அடியார்கள்கூட்டத்தில் விரங்கியிருந்தார் களங்கரகிதராகிய கடவுளென்றவாறு.............................................(அக)

அந்தமுமுதலுமில்லாவடியவர்தம்மைநாடி.............................*
வந்துலகருமமெல்லாமுடித்தனமகிழ்ச்சிகூர.............................*
நந்திகழ்வடிவங்காணவேண்டிநற்கயிலையுள்ளார்.......................*
சிந்தனைசெய்தார்வல்லேயாண்டுநாஞ்சேறல்வேண்டும்............*

எ-து. முடிவுமுதலுமில்லாத அடியவர்களைக்குறித்து வந்த காரியமெல்லா முடித்தனம் மனமகிழ்ச்சியுண்டாக நம்முடைய ஒளியையுடைய திருவுருவைத் தெரிசிக்கவெண்டுமென்று நல்லகயிலாசகிரியி லிருக்கின்றவர்கள் நினைவுகொண்டார்கள் சீக்கிரத்தில் அவ்விடத்திலே நாம்போகவெண்டுமென்றார் பரமசிவனென்றவாறு.............................................(அஉ)

வாழ்ந்திருமின்பின்யாமுமேகுவமென்னவந்து.......................*
சூழ்ந்தருளுருவாமன்பர்தோத்திரம்பலவுஞ்சொல்லித்..........*
தாழ்ந்தெதிரிறைஞ்சியையாதரிப்பரிதென்னமண்மேல்..........*
வீழ்ந்தயர்ந்தழுதாரெம்மைவிடுதியோவென்றுநொந்தார்..........*

எ-து. நீங்களிங்கே இன்பமுடனே வாழ்ந்துகொண்டிருங்கோள் நாம் செல்குவோமென்று சொல்லவே அப்போது வந்து சுற்றிக்கொண்டு கிருபாவடிவத்தையுடைய அடியவர்கள் அனேகந்துதிகள்சொல்லி வணங்கி ஐயரே இனி யாங்கள் தரிக்கிறது அருமையென்று பூமியில்வீழ்ந்து ஆயாசங்கொண்டு அழுதனர் எங்களை விட்டுவிடுகின்றியோவென்று நொந்தார்களென்றவாறு(அங)

பரிந்தழுமடியார்தம்மேற்பரமனுமன்புபூண்டு. ............ .....*
வருந்துவதொழிமினிந்தமணமலிகுருந்தநீழற் .... .... .......*
பொருந்தியதெய்வபீடம்பொலிவொடுமியற்றிமீதே .........*
ருந்தியமறையுந்தேடுநம்பதமாகச்செய்து.. ................*

எ-து. அன்புகொண்டு அழுகின்ற அடியார்மேற் பரமசிவனும். அன்புவைத்து வருத்தப்படுவதை நீங்குங்கள் இந்தவாசநிறைந்த குருந்தநிழலிலே பொருந்திய தெய்வபீடமொன்று பிரகாசத்துடனே செய்து அதன்மேல் திருத்தமாகிய வேதங்களுந் தேடுகின்ற நம்முடைய திருவடிகளைச்செய்தென்றவாறு. (௮௬)

தாங்கருமரந்தைநீங்கியாமெனுந்தன்மைகண்டு... ...... .... .*
நீங்கருமன்பிலேநித்தலுநயந்திறைஞ்சி..... ............... .*
ஈங்குருண்மனத்தரெல்லாமமர்ந்திருமொருநாளிந்தத்..........*
தீங்ககல்பொய்கையூடேசெழுந்தழல்வந்துதோன்றும்.... . *

எ-து. தாங்குதற்கரிய துன்பம்நீங்கி நாமென்கிற தன்மையை யறிந்து நீங்குதற்கரிய அன்பினாலே நாடோறும் மகிழ்ந்துவணங்கி இவ்விடத்திலே கிருபைமிகுந்தமனத்தையுடைய அடியார்களெல்லாம் விரும்பியிருங்கோள் அப்படியிருக்குநாளிலே ஒருநாள் இந்தத்தீங்கில்லாத பொய்கையினிடத்திலே பெருமையுள்ள அக்கினிவந்து தோன்றுமென்றவாறு. ..... .... .(௮௭)

எழுந்தழலவிளைந்தபோதில்யாவருந்தடத்தினூடு . . .... . *
விழுந்துபின்னெய்திநம்பால்விடுகநுங்கவலையென்று .. ...*
தொழுந்தவமியற்றுமன்பர்சூழ்ந்துபின்செல்லமெல்லச் ... .*
செழுந்திகழ்கயிலைநாடிச்சென்றனர்தில்லைநாதர் ............. *

எ-து. அக்கினியெழுந்து விளைந்தமாத்திரத்திலே எல்லாரும் தடாகத்தினிடத்திலேவிழுந்து பின்பு நம்மிடத்திலேவந்து உங்களுடைய கவலையைவிடுங்கோளென்று வணங்கத்தக்கதவத்தைச் செய்யும் அன்பர்கள் சூழ்ந்துகொண்டு பின்னேவரமெள்ள செழுமையுள்ள பிரகாசத்தையுடைய கயிலாசத்தைநாடி எழுந்தருளினார் சிதம்பரத்திலிருக்கின்ற சபாநாயகரென்றவாறு. (௮௮)

நீங்கருமன்பரெல்லாநில்லுமினென்றுகூற . ..................... ......*
வாங்கவரிறைஞ்சியெந்நாளையநிற்காண்பதென்று .... ..........*
தாங்கருமயக்கமெய்தித்தாயகன்மகவுபோலப் ....................*
பூங்கழல்வணங்கிநின்றார்போயினர்மாயைவல்லார்..... ...........*

எ-து. நீங்குதற்கரிய அன்பர்களெவரும் நில்லுங்கோளென்றுசொல்ல அங்கே அவர்கள்வணங்கி இனி எந்தநாளிலே ஐயரே உம்மைக்காண்பதென்று தாங்குதற்கரிய மயக்கமடைந்து

தாயைநீங்கிய பிள்ளைகள்போல் தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கிநின்றார்கள் மாலையிலேயல்ல பரமசிவன் எழுந்தருளினானென்றவாறு .......... (௮௭)

இங்கிவர்நின்றபின்னுமின்னருள்வாதவூரர் ..... ..... .... ...*
தங்கிளைவாழவந்தவர்பின்சென்றபோதிற் .... .... ....*
பொங்கிளமுலையாள்பாகர்புரிந்திவர்வரவுகாணு .... .... ....*
வங்கொருகொன்றைநீழலிருந்தனரரந்தைநீங்கி .... .... ....*

எ-து. இங்கே அடியார்கள்நின்ற பின்னும் இனிய அருளையுடைய திருவாதவூரரானவர் தமதுசுற்றமெல்லாம் வாழும்படி குருமூர்த்தமாயெழுந்தருளிய கடவுளுக்குப் பின்னேபோன போது பொலிவுபெற்ற இளமையுள்ள ஸ்தனங்களையுடைய உமாதேவியினுடைய பாகராகிய அக்கடவுள் அன்புவைத்து இவர் வருதலைப்பார்த்து அங்கேயொரு கொன்றைவிருக்ஷநிழலிலேயிருந்தார் துன்பம் நீங்கியென்றவாறு .... .... ...(௮௮)

தன்புடைக்கவடுகொண்டோர்தடங்கிரிநிரந்தமாலைப் .. .... ....*
பொன்படைத்தனையகொன்றைப்பொலிவுறவிருந்தபோதின்.*
மென்பதந்திறைஞ்சிக்கண்ணீர்விழவிழத்தொழுதுநிற்கு.....*
மன்பரைப்பரிவாலையரருகுவைத்தருளிச்செய்தார் ........ ..*

எ-து. தன்பக்கத்திலே கிளைகளைக்கொண்டு ஒருமலை வரிசையாகிய பொன்மாலையைக்கொண்டிருப்பதையொத்த பூங்கொத்துக்களுடனேகூடிய கொன்றைநிழலிலே பொலிவுபொருந்தவிருந்தபோதில் மெல்லிய திருவடிகளிலேவணங்கிக் கண்ணீர்விழ விழத்தொழுதுநிற்கின்ற அன்பராகிய மாணிக்கவாசகரைப் பத்தியினாலே பரமசிவன்பக்கத்திலேவைத்து அருளிச்செய்தானென்றவாறு .......... (௮௯)

அவ்வியமில்லார்தங்கட்கருடரமுன்னமன்னுந் .... .... ..*
திவ்வியதலமாமிந்தச்சிறந்தவார்குருந்தநீழ .... .... ....*
லெவ்வுலகெங்குமுள்ளோமாயினுமிங்குளோர்கள் .... ....*
வெவ்வினையகற்றியாளவேண்டிநின்றுறைவோமென்றும். ....*

எ-து. மனக்கோட்டமில்லாதவர்க்குக் கிருபைசெய்ய முன்னே நாமடைந்த திவ்வியக்ஷேத்திரமாகிச் சிறப்புப்பெற்றுள்ள இந்தக் குருந்தநிழலிலே எந்தலோகத்திலும் எங்குமிருந்தோமாயினும் இங்கேயிருக்கின்றவர்களுடைய தீவினையைநீக்கி ஆளும்பொருட்டு இந்த ஸ்தலத்திலே வசிப்போமென்றவாறு.

பொங்கொளிச்சுழலைபூண்டுபுலம்பிசைக்குறியேயான .... .......*
ங்கலசங்கமல்லால்வாய்ந்தபல்லியங்களியாவு .... .... ....*

மிங்கெமக்காகாவேர்வைசயடங்கிடமாதலாலு..................................*
நங்குலக்கவுரிகாணுநடனவிலாதலாலும்......................*
எ-து. மிகுந்த ஒளியையுடைய கழுமுனைநாடியிடத்தில் ச
த்திக்கின்ற அடையாளமான மங்களகரத்தையுடைய சங்கவாத்
தியமல்லாமல் மற்றவாத்தியங்களெல்லாம் இந்தஸ்தலத்திலே
நமக்காகவாம் அதேனென்னில் சத்தநீங்கிய இடமாகையினாலு
ம் நமதுபாகத்திலிருக்கும் பார்வதிகாண நடனஞ்செய்யுமிட
மாகையினாலுமென்றவாறு.................................(௩௰௧)
ஒழுங்குடனின்னவாறிங்குணர்ந்துநற்குருந்தநீழற்.................*
செழுந்தவக்குழுவினியுநங்கழல்சேவைசெய்தே...................*
யெழுங்கனல்மடுவிற்காணில்யாவருமதனிற்சென்று...............*
விழும்பொழுதுடன்வீழாமலிவ்வுழைவிரைவினீங்கி..........*
எ-று. ஒழுங்காக இந்தப்பிரகாரம் அறிந்து நல்ல குருந்தநி
ழலிலே செழுமையுள்ள தபோதனர் கூட்டத்துடனே நீயும நம்
முடைய பாதத்திற்சேவைசெய்து எழுகின்ற அக்கினியைமடுவி
ற் கண்டால்யாவரும் அதிற்போய் விழும்போது உடனே வீழா
மல் இந்த இடத்திலே சீக்கிரத்தில் நீங்கியென்றவாறு......(௩௰௨)
உத்தரகோசமங்கையென்னுநம்மூரிற்சென்று...................*
சித்தியங்கெவையுமெய்தித்தெய்விகலிங்கமேனீ.................*
வைத்தநம்பதிகடம்மிவைவயிவைவணங்கிலங்கே.......*
யித்திகழ்வடிவேகாண்டிகாட்டுதுமெனநவின்றே..............*
எ-து உத்தரகோச மங்கையென்னும் நம்முடைய ஸ்தலத்
துக்குப்போய் அஷ்டமாசித்திகளையும்அடைந்துதெய்விகமாகி
ய லிங்கவடிவமா யிருக்கின்ற நம்முடைய ஸ்தலங்களிலே இந்த
இந்தஸ்தலங்களைவணங்கினால் அங்கங்கும் இந்தப்பிரகாசமுள்
ள வடிவேகாண்பாய் அப்படியேகாட்டுவோ மென்றுசொலலி
யென்றவாறு......................................(௩௰௩)
இந்நகர்வணங்கிநீங்கியெழுங்கழுக்குன்றமென்னு..............*
மந்நெடும்பதியிறைஞ்சியாண்டுநின்றீண்டுபோந்து..........*
பொன்னினம்பலத்திலெய்திப்புத்தளைவாதில்வென்ற...........*
பின்னைநம்பதமேயானபெரும்பதம்பெறுதியென்றார்.........*
எ-து. இந்தஸ்தலங்களைவணங்கி நீங்கி உயர்ந்த திருக்கழுக்கு
ன்றமென்னும் அந்தநெடிய ஸ்தலத்தையும் வணங்கி அவ்விட
த்திலிருந்து இங்கேவந்து சிதம்பரத்திற்குப்போய்ப்புத்தரைவா
தில்வென்றபின்பு எம்முடைய பதவியான சாயுச்சியத்தைப் பெ
றுவாயென்றார் பரமசிவனென்றவாறு..........................(௩௰௪)

மன்னுமன்புடையார்தெய்வவாசகம்புகலுமாறும்......... ✻
பன்னகம்புனைவோன்மேவும்பதியலவணங்குமாறும்......... ✻
பொன்னினம்பலத்திலெய்திப்புத்தரைவென்றமன்றன்......... ✻
றன்னருங்கமலபாதஞ்சார்தலும்பகர்தலுற்றாம் ......... ✻

எ-து. நிலைபெற்ற அன்பையுடைய மாணிக்கவாசகர் தெய்வத்தன்மையையுடைய திருவாசகஞ் சொல்லியதும் சர்ப்பாபரணத்தைத்தரித்த பரமசிவனுடைய ஸ்தலங்களை வணங்கியதும் சிதம்பரத்திற்குப்போய்ப் புத்தரைச்செயித்துச் சபாநாயகருடைய திருவடிகளிற் சேர்ந்ததும் சொல்லத்தொடங்கினோமென்றவாறு............ (கூ௫)

---

மங்கலமந்தசருக்கம் - முற்றுப்பெற்றது. ஆ ௱௩௯.



# திருவம்பலச்சருக்கம்.

வரந்தரவிருந்தார்தம்மைவாதவூரிறைவர்போற்றிப்......... ✻
பெருந்துறைநகரிலன்றிப்பிஞ்ஞகாபுலியூர்மன்றிற்......... ✻
பொருந்துமைமுத்தியென்றுபுகன்றதிங்கெவனோவென்னத் . ✻
திருந்தியதவத்தாய்கேட்டியென்றவர்செப்பலுற்றார்......... ✻

எ-து. தமக்குவரங்கொடுக்க விருந்தகடவுளைத் திருவாதவூருக்கரசராகிய மாணிக்கவாசகர் வணங்கிப் பரமசிவனே திருப்பெருந்துறையிலல்லாமல் புண்டரீகபுரமென்னும் பெயரினையுடையசிதம்பரத்திற் பொருந்துதல் பரமுத்தியென்று அருளிச்செய்தது என்னவென்று விண்ணப்பஞ்செய்ய திருத்தமாகிய தவத்தையுடையவனே நீ கேட்பாயாகவென்று சொல்லத்தொடங்கினார்கடவுளென்றவாறு.............. (க)

இத்தலத்திடையேபுழுவெடுத்துஅரைவிடத்திலன்றி......... ✻
வைத்துளவிடத்தேயந்தவேட்டுவன்வடிவங்கொள்ளும்......... ✻
வித்தகவுனக்கிங்கன்பான்மெய்யுணர்வுளதேனுமென்மை......... ✻
யொத்திடுஞ்சிவானுபூதிமுத்தியம்பலத்திலுண்டாம்......... ✻

எ-து. புழு தன்னையெடுத்த விடத்திலல்லாமல் கொண்டுபோய்வைத்தவிடத்திலே குளவிவடிவங்கொள்ளும் அதுபோல் உன்னைக்கண்ட இந்தஸ்தலத்திலே அருளினாலே உண்மையறிவையுடைய

தேசம்பண்ணிடுறும் மேன்மைபொருந்திய சிவானந்தமயமாகிய
மோக்ஷம் சிதம்பரத்திலுண்டாமென்றவாறு...... ...... ....(உ)

இடம்பமுடம்பின்மூலத்தெழுந்தநற்சுழுனைநாடி...... ......✻
யுடன்நிறைவொளியேயாகியொளியிலஞ்செழுத்துமொன்றாய்...✻
நெடுங்குழலோசையாகிநிலவுமவ்வோசையோயவ ...... ......✻
டங்கியவிடமேயென்றுமாமம்பலமதாகும்..................✻

எ-து. விசாலமாகியதேகத்திலே மூலாதாரத்தினின்றும்எழுந்த நல்லசுழுமுனைநாடியுடனே நிறைந்த வொளியாய் அந்தவொளியிலே பஞ்சாக்ஷரமுமொன்றாய் நெடிய குழலோசையாய்ப் பிரகாசம்பொருந்திய அந்தவோசை நீங்கி அடங்கியவிடமேநாள்தோறும் நாம் ஆடுகின்றசிதம்பரமாகுமென்றவாறு.......(ங)

எண்டரும்பூதமைந்துமெய்திய நாடிமூன்று............ .... .....✻
மண்டலமூன்றுமாகிமன்னியபுணர்ப்பினாலே ....................✻
பிண்டமுமண்டமாகும்பிரமனேமுடையவராகக் ...... ............✻
கண்டவர்நின்றவாறுமிரண்டினுங்காணலாகும்.. ...... ... .....✻

எ-து. எண்ணிக்கையைத் தருகின்ற பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாசமென்று சொல்லப்பட்டபூதங்களைந்தும், இடைபிங்கலை சுழுமுனை யென்னும் நாடிகள்மூன்றும், அக்கினிமண்டலம் ஆதித்தமண்டலம் சந்திரமண்டலம் என்னு மண்டலங்கள்மூன்றும், ஆகி நிலைபெற்ற சம்பந்தத்தாலே பிண்டமுமண்டமாகும் பிரமாவிஷ்ணு உருத்திரன் மாகேசுரன் சதாசிவனென்றுசொல்லுகின்ற ஐந்துவடிவமாகக் கண்டவர்கள் நின்றவிதமும் இவ்விரண்டுவிதத்திலுங் காணலாமென்றவாறு .. .... ......... ..... (ச)

ஆதலாலிந்தவண்டத்தறிவரும்பொருளாயென்றுந் .... .........✻
தீதிலாமூலநாடிந்திகழ்சிவலிங்கமேனி . ..... ......................✻
மீதிலாமந்தநாதவெளியின்மேலொளிமன்றங்குக் .... .. .... .. .✻
காதலால்மடவாள்காணக்கருத்துறநிருத்தஞ்செய்வேம்..... ...✻

எ-து. ஆகையினாலே இவ்வண்டத்தில் அறிதற்கரியபொருளாகி என்றுங் குற்றமில்லாத மூலத்தை நாடிப்பார்த்தால் பிரகாசியாநின்ற சிவலிங்கமேனியாயிருக்கும். மேலாகிய அந்தநாதவெளியின்மேல ஒளியாயிருக்கின்றது சபை, அங்கே ஆசையால் உமாதேவியாரை மனம்பொருந்த நிருத்தஞ்செய்வேமென்றவாறு

அந்தநன்னடமேதென்னிலந்தொழிநடத்தலாகும்.. .......... ✻
பந்தமதகற்றுமித்தப்படிவமுமதுவேயாகும்................. ✻
வந்துலகத்தில்யாருங்காண்பரோல்வழுவாமுத்தி...... . ...... ..... ✻
தந்தருளிக்குந்தெய்வத்தலமுமத்தலமேயாகும்..............✻

எ-து. அந்நடனம் எதென்றால் சிருஷ்டிஸ்திதி சங்காரந்திரோபவம் அனுக்கிரகமென்று சொல்லப்பட்ட பஞ்சகிருத்தியத்தை நடத்துவதாகும். பாசத்தளையை யறுக்கின்ற இந்தவடிவும் அதுவேயாகும் உலகத்திலே யிருக்கின்றவர்கள் யாவர்வந்து தெரிசித்தாலும் பரமுத்தியைக்கொடுத்துக் கிருபையைத் தருகின்றதெய்வஸ்தலமும் அந்தச்சிதம்பரமேயாகுமென்றவாறு.

தாவரும்பணிலநேமிதரிப்பவர்பிரமனென்போ...... ......... ..*
ரியாவரும்புலியாம்பென்னுமிருவரும்புரத்திலுண்டா ............*
மூவருந்தெய்வமூவாயிரவருமுனிவர்தாமுந்....... ............. *
தேவருந்தொழுதுபோற்றுமெல்லையத்தில்லைமூதூர்... ........ *

எ-து. தாவுதற்கரிய சங்குசக்கரந் தரிப்பவராகிய மகாவிஷ்ணுவும், பிரமதேவரும், பதஞ்சலி வியாக்கிரபாதரும், திரிபுராதிகளும், தெய்வத்தன்மையுள்ள தில்லைமூவாயிரவரும், நாற்பத்தெண்ணாயிரமுனிவரும், முப்பத்துமுக்கோடிதேவர்களும், போற்றும் எல்லையையுடையது அந்தத்தில்லை மாநகரென்றவாறு. (எ)

மற்றிவைதெளிவாயென்றுபணிந்தெதிர்வணங்கிநிற்பார்....... *
நெற்றியினீறுசாத்திநிற்றியென்றகலநில்லார்........................*
சற்றிடஞ்சென்றார்பின்னுமிங்கிவர்தன்மைகண்டு ..............*
கற்றையஞ்சடையார்நின்றுகண்ணருள்செய்துபோந்து .. .. *

எ-து. இவைகளையெல்லாந் தெளிந்து கொள்ளுவாயென்று பணிந்து எதிரே வணங்கிநிற்கின்ற மாணிக்கவாசகருடைய நெற்றியிலே விபூதிதரித்து நில்லென்று கடவுளானவர் நீங்குதலும் நில்லாதவராய்க் கொஞ்சதூரம்போனார் மறுபடியும் இவருடைய தன்மையைக்கண்டு பரமசிவனானவர் நின்று கிருபைசெய்து போயென்றவாறு.................. (அ)

கண்ணெதிர்நடக்குமாறுகண்டுளங்களித்துநிற்கும்.... ......... *
புண்ணியர்காணமுன்னர்மறைந்தனர்புலியூனாயர்............ ... *
துண்ணெனவிரக்கமெய்தித்தொழுதுகைதலைமேற்கொண்டு...*
நண்ணருமன்பர்கூட்டநண்ணினர்வாதவூரர் .... ........ ......... *

எ-து. கண்ணெதிரே நடப்பதைக்கண்டு மனங்களித்து நிற்கின்ற புண்ணியராகிய மாணிக்கவாசகர் காணும்படி சபாநாயகர் எதிரே மறைந்தார் அதுகண்டு அச்சங்கொண்டு இரக்கமுற்று வணங்கிக் கையைச் சிரசின்மேல்வைத்துக்கொண்டு பொருந்துதற்கரிய அடியார்களுடைய கூட்டத்தைப்பொருந்தினர் திருவாதவூரரென்றவாறு.................. (௯)

அருந்தவமகலாநெஞ்சத்தன்பருந்தாமுமந்தத் ......................*
திருந்தியகுருந்தின்கீழேதெய்வவிருக்கையுஞ்செய்து ............*
வரந்தருசெய்யபாதமலர்வருந்திறைஞ்சியாங்கே ............... *
யிருந்தனரிருந்தநாளிலெய்தியதியம்பலுற்றும் ......................*

எ-து அரியதவத்தை நீங்காத மனத்தையுடைய அடியார்களும் மாணிக்கவாசகரும் அந்தத்திருத்தமாகிய குருந்த நிழலின்கீழே தெய்வத்தன்மையுடைய இருக்கைசெய்து அதன்மேலே வரத்தைத்தருகின்ற சிவந்த தாமரைமலர்போன்ற திருவடிகள் செய்துவணங்கி அங்கிருந்தார் இருந்தநாளிலே நடந்தகாரியத்தைச்சொல்லத் தொடங்கினுமென்றவாறு .................. .... (ய)

வெண்பிறைமுடித்தவேணிவின்னவனன்பிலாத ..................... *
பண்பினரொளிறுந்தன்னைப்பாடினர்க்கிரங்குமென்றே ........ *
யெண்பெறுநமச்சிவாயவாழ்கவென்றெடுத்துநாதன் ......... *
வண்பதம்புகழ்ந்துஞானவாசகம்புகலலுற்றார் ................. .... *

எ-து. தெள்ளியமூன்றும் பிறையைத் தரித்த சடாபாரத்தையுடைய கடவுளானவர் அன்பில்லாதவர்களையாளும் தன்னைப்பாடினவர்களிடத்தில் இரக்கஞ்செய்வாரென்று நினைத்து எண்ணுதல்பெற்ற நமச்சிவாய வாழ்கவென்றெடுத்து நாதனாகியகடவுளது வரத்தையுடைய திருவடியைப்புகழ்ந்து ஞான வாசகமாகிய திருவாசகம் சொல்லத்தொடங்கினாரென்றவாறு.. ....(யக)

சொற்பதங்கடந்துநின்றசோதிவந்தருளை நல்கு..... ............ *
மற்புதமறியேனென்றுமதிசெயங்கண்டாமென்று ........... .*
மெற்பொலிசடையாய்நெஞ்சங்குழைத்தனையென்னையென்று
சிற்பரன்றனதுபாதஞ்சென்னியின்மன்னுமென்றும்........ . [ஞ

எ-து. சொல்லுகின்ற பதங்களைக்கடந்து நின்ற கடவுளானவர்வந்து கிருபையைத்தருகின்ற அற்புதமறியேனே யென்றும், அதிசயங்கண்டாமேயென்றும், ஒளிவிளங்குகின்ற சடையையுடையகடவுளே யென்னை மனங்குழைத்தாயென்றும், பரமசிவனுடையபாதஞ் சென்னியில் மன்னுமென்றும், என்றவாறு.

ஐயனேநின்னைக்காணவாசைப்பட்டேனென்றும்......... *
முய்கிலேன்வாழேனென்றுமுனக்கடைக்கலமேயென்று ........*
செய்யுமாறறியேனந்தோசெத்திலேனென்றும்பொய்யர் .... *
பொய்யனேநின்பொற்பாதம்புணருநாளென்றோவென்றும் *

எ-து. ஐயனே நின்னைக்காண ஆசைப்பட்டேனென்றும், உழைபேன் வாழ்கிலேனென்றும், உனக்கடைக்கலமென்றும், செய்யுமா றறியேன் ஐயோ செத்திலேனென்றும், பொய்ய

ர்க்குப்பொய்யனே நின்பாதம்புணருநாளென்றோ வென்றும்,
என்றவாறு...................................................(௰௩)

ஆதரித்தழைக்கிலிங்கேயெந்தாவென்றருளாயென்றும்..... *
போதமிக்குடையபாடலிவையிவைபுகன்றபின்னர்....... .......*
மாதிரத்தெவரும்போற்றவருந்திருவார்த்தையென்றுந்....... *
தீதறச்சிறந்தவெண்பாவிருபதுநான்குமோதி....................*

எ-று. ஆதரித்தழைக்கில் இங்கே அந்தெந்துவேயென்றருளா யென்றும், ஞானமிகவுமுடைய பாடல்கள் இவைகளிவைகள் அருளியபின்பு எட்டுத் திக்கிலுள்ளவர்களும் வணங்கவருகின்ற திருவார்த்தையும், எண்ணப்பதிகமும், குற்றமறச் சிறந்த வெண்பா இருபத்தெட்டும்விளங்கச்சொல்லியென்றவாறு..............(௰௪)

இயல்புடன்மொழியும்பள்ளியெழுச்சியேசறவுநெஞ்சத்....... *
தயர்வறவுரைக்குமின்னோரனையபூங்கழல்களென்று.............. *
முயிருணியெனுநற்செய்யுள்பிரார்த்தனையோங்குநீதி........... *
வியனெடுங்கூடற்பாண்டிவிருத்தமெய்த்தமிழுங்கூறி........ *

எ-று. இயல்புடனே சொல்லுகின்ற திருப்பள்ளி யெழுச்சியும், திருவேசறவும், மனத்தின்வருத்தம் நீங்கச்சொல்லுகின்ற பூங்கழல்களென்னும்பாடலும், உயிருண்ணிப்பத்தும், பிரார்த்தனைப்பத்தும், உயர்ந்த நீதியாகிய அதிசயமுள்ள நெடிய மதுரையினுடைய திருப்பாண்டி விருத்தமென்னுந் தமிழ்ப்பாடலும், சொல்லியென்றவாறு.................................(௰௫)

[ வேறு. ]

மருவுந்தொண்டருடன்கூடிவைகிச்சிலநாட்செல்லமுதற்....... *
பரமன்சொல்லும்படியேபின்பயிலும்பொய்கைத்தழல்கண்டு*
கருதுந்திருவஞ்செழுத்தோதிக்காணக்கிளருங்கனன்மீது... ... *
விரவும்பேரன்புடையார்களெல்லாஞ்சென்றுவீழ்ந்தார்கள்.. *

எ-று. தங்கியிருக்கப்பட்ட அடியார்களுடனே வாசஞ்செய்து சிலநாள்செல்ல அதற்குமுன்னே பரமசிவனனுக்கிரகித்தபடியே பின்பு பயிலுகின்ற தடாகத்திலே அக்கினியைக்கண்டு நினைக்கின்ற அழகிய பஞ்சாக்ஷரத்தைச் செபித்துக் காணும்படிப் பிரகாசியாநின்ற அக்கினியிலே கலந்திருக்கின்றமிகுந்த அன்பையுடைய அடியார்களெல்லாம் போய். சூழ்கினார்களென்றவாறு.

வீழ்ந்தபோதிற்புலியூரர்விடைமேற்றோன்றிக்கவுரியுடன்..... *
சூழ்ந்தங்கிமையோர் மலர்சிந்தித்தொழவிண்ணிடையேதோன்
மாழ்ந்ததடத்துட்கனன்மூழ்குமன்பரடங்கத்துயர்நீங்கி[ றுதலு
வாழ்ந்துவணங்கிக்கணநாதவடிவாய்த்திருமுன்வந்தார்கள்......*

எ-து. வீழ்ந்தனமுழுமினைபோ[illegible]யபரமநயானவர் இடபவா
கனத்தின்மேலேறி உமாதேவியுடனேமுப்பத்துமுக்கோடிதே
வர்களுஞ் சூழ்ந்துகொண்டு அழகிய மலைத்தாவித் தெரிசிக்க
ஆகாயத்திலெழுந்தருளிய மாத்திரத்தில் ஆடும்பொருந்திய த
டாகத்தி லிருக்கின்ற அக்கினியில் [illegible] அடியவர்கள் தங்கள் து
க்கமெல்லாம் நீங்கி வாழ்ந்து வணக்கஞ்செய்து சிவகண நாதர்க
ளய்வடிவுகொண்டு பரமசிவனெதிராக வந்தார்களென்றவாறு.

துரியத்தலையிற்பயில்வாருந்தொழுதல்செய்வார்முகநாடி.....*
யொருசற்[illegible]லதுவர்நீரிங்கொழியத்தனிநாமெய்தியதும்.....*
கரையிற்றிலாபோய்விழுவீசுங்கழுநீர்வாசங்கமழ்வாவி......*
யெரியிற்புகுவீரென்றதுவும்யாதோவெனிலிங்கிதுவாகும் ....*

எ-து. துரியத்தின்முடிவில்விளங்கிய கடவுளும் வணங்கியெ
ழுகின்ற அடியவர்களுடைய முகத்தைப்பார்த்துக்கொஞ்சநேர
மாகிலும் நீங்காதவராகிய நீர் இங்கே நீங்கத் தனியே நாம் போ
னதும், கரையிலே அலைகள்போய் மோதும்படி வீசுகின்ற செ
ங்கழுநீர்வாசங்கமழ்கின்ற திருக்குளத்தில் அக்கினியிலே மூழ்கு
வீரென்றுசொல்லியதும், என்னகாரணமோவென்றுகேட்டால்
இதுவாகுமென்றுசொன்னவாறு ..... (யஅ)

[ வேறு ]

உத்தமனென்றுந்திருவாதவூரனைமன்றும்புலியூரித் ....... *
புத்தரைவெல்லும்படிநாமிப்புவியிலைசவைத்தோமியாமேசிந்
சித்தமயர்ந்தேதுயர்கூருஞ்செய்தியறுமென்பதுதேரா.. ....*
வித்தலமீதேசிலநாளிங்கெம்முடன்வாராதிருமென்றோம் .....*

எ-து உத்தமனென்கின்ற திருவாதவூரனை நிலைபெற்றசிதம்ப
ரத்திலே புத்தர்களைவாதில்வெல்லும்படி நாம் இந்தப்பூமியின்மே
லவைத்தோம். நாம்நீங்கினால் மனம்நொந்து துன்பமடைவா
னென்பது தெரிந்து உங்களையும் இந்தஸ்தலத்திலே சிலநாள்
எம்முடன்வாராதிருப்பீரென்று சொன்னோமென்றவாறு. (யக)

மலமகல்பவரும்புவிமீதேமானிடவடிவந்தனையெய்திச் ........*
சிலபகலெனினும்பயில்காலைச்சேர்தருமலவாதனைபெல்றே. *
பலமலர்கமழுந்தடமீதிற்பரவருஞானவனல்சேர்வித் ..... *
திலதென்றீடுஞ்சடம்வேவித்திவ்வுடலீந்தேமிந்நாளில்.......*

எ-து. ஆணவம் மாயை காமியமென்னும் மும்மல நீங்கினவ
ர்களும் பூமியின்மேலே மானிடவடிவங்கொண்டு சிலநாளாயி
னும் இருக்குங்காலத்தில் மறுபடியும் மலவாசனைசேருமென்று
அனேகமலர்கள் வாசிக்கின்ற தடாகத்திலே [illegible]

ஞாளுக்கினியைச் சேர்வித்துப் பொய்யாய்த்தோன்றிய மாயா
தேகத்தைவேவச்செய்து இந்தத்தேகத்தை இந்நாளிலே கொடு
த்தோமென்றார் பரமசிவனென்றவாறு..... ...... ...... .. .(உம)

என்றுவிளம்பிக்கணநாதரொடிகளுமகலப்புலியூரின் ........... *
மன்றுவிளங்கப்பயில்வாரும்வானிஃமறைந்தாரவ்வெல்லைத். . *
துன்றியஞானச்சிவநாமச்சொற்றமிழ்சொல்வார்வேறாகச் .....*
சென்றொருகொன்றைச்செழுநீழற்றிகழவிருந்தார்சிவயோகம்

எ - து. இப்படியென்று அருளிச்செய்துகணநாதர்கள் எவ்வி
டத்திலும்நெருங்கச் சிதம்பரத்திலே கனகசபைவிளங்க நிருத்த
ஞ்செய்கின்றசபாநாயகரும் ஆகாயத்தில்மறைந்துவிட்டார்- அ
ப்போது நிறைந்த அறிவைத்தருகின்ற சிவநாமத்தையுடைய தி
ருவாசகத்தமிழ் சொல்வாராகிய மாணிக்கவாசகர் வேறாகப்போ
ய்ச் செழுமையுள்ள ஒருகொன்றைமரநிழலிலே பிரகாசத்துட
னே சிவயோகஞ்செய்திருந்தாரென்றவாறு ...... ........ .. (௬க)

அன்பரழற்கேபுகுமாறுமையர்விடைக்கேவருமாறு ............ *
முன்புதமக்காயுருவெய்திமுன்னவனற்றுடொழுமாறும் ..... .*
பொன்பொதுவிற்கேயன்பாளர்புகுவதுமெல்லாமொருகாலத்
தின்புறுமெய்ப்போதகயோகத்தியல்பொடுகண்டானெய்யதார்.

எ - து. அடியார்கள் அக்கினியிலேபுகுந்தவிதமும், கடவுள்
இடபவாகனத்தின்மேல் வந்தவிதமும். முன்னே தமக்கு வேண்
டிய வடிவங்கொண்டு கடவுளினுடையதிருவடியைவணங்கினவித
மும். இனிக்கனகசபையிலே தான்போயடைவதும், ஆகிய இவை
யெல்லாம் ஒருகாலத்திலே இன்பமிகுந்த உண்மை ஞானத்தைத்
தருகின்ற சிவயோகத்திலே சுபாவத்துடனே மாணிக்கவாசகர் அ
றிந்துகொண்டார்- பின்பென்செய்தாரோவென்னிலென்றவாறு

செங்கைகுவித்தார்விழி நீராக்கிந்தினரொந்தாய்வந்தாய்பின் .*
னெங்கவெளித்தாயெனமாலுற்றெய்தினர்பொய்கைக்கரைமேற்
கங்கைமுடி[illegible]றிக்கண் ணுறநண் ணுநதலம்மாவென்
றங்கணிலத்தேபோய்வீழ்வுற்றழுதழுதந்தோவெனநொந்தார்

எ - து. சிவந்தகையைக்குவித்தார். கண்களாலேஆனந்தபாஷ்
பங்களைச்சொரிந்தார், எமதுபிதாவாகியகடவுளேவந்துபின்னெ
ங்கேயொளித்தாயென்று மயக்கமடைந்துபொய்கைகரைமீ
தில வந்து கங்கையைத்தரித்த பரமசிவன் இடபவாகனத்திலே
றிக்கண்ணெதிரே எழுந்தருளியஸ்தலமோவென்று அழகிய இட
த்தையுடையபூமியிலேபோய்விழுந்து அழுதழுதுஐயோ வென
நொந்தார் மாணிக்கவாசகரென்றவாறு........................(உா)

[ வேறு. ]

அன்னைநிகர்ப்பீரென்னையொழித்தேயன்பாளர் .... ........... ✻
பொன்னடிபெற்றேபொய்கையழற்கேபுகலாமோ .............. ✻
மின்னுருவத்தீர்நும்மருள்கூடாவினையேனுக் ........ ...... ..... ✻
கின்னலளித்தீரெங்ஙனொளித்தீரென்றுநொந்தார் ..................... ✻

எ - று. தாய்க்குச் சமானமானவரே என்னை நீக்கி அன்பையாளுகின்றவராய்ப் பொன்போன்ற பாதத்தைப்பெற்றுத் திருப்பொய்கையிலே யுண்டாகிய அக்கினியிலே மூழ்கலாமா பிரகாசிக்கின்ற வடிவையுடையவரே உமது கிருபையிலே கூடுதல் செய்யாத தீவினையையுடைய அடியேனுக்குத் துன்பத்தைக் கொடுத்து எங்கே ஒளித்தீரென்று நொந்தார் மாணிக்கவாசகரென்றவாறு ..... ... ............ [ வேறு. ] ............ ....... . ... (௨௪)

அந்நிலைதெளிந்துபொய்கையகன்றுயர்குருந்தநீழற் .......... ✻
பன்னருமறைகள்காணாப்பதமலர்பற்றிவீழ்ந்து ............. .....✻
மன்னியதலத்திலுள்ளோர்வல்வினைப்பிறவிமாள .... .... ........ ✻
வின்னருட்சதகமெய்தானரும்பியென்றெடுத்துச்சொன்னார் .. ✻

எ - று. அந்த நிலையைத்தெளிந்து திருப்பொய்கையைவிட்டு நீங்கி உயர்ந்த திருக்குருந்தநிழலிலே பன்னுதற்கரியவேதங்கள் காணாத திருவடிமலரைப்பற்றி வீழ்ந்து நிலைபெற்ற பூமியிலுள்ளவர்களுடைய தீவினைக்குக் காரணமாகிய பிறவிமாளும்படி இனிய அருளையுடைய திருச்சதகம் மெய்தானரும்பியென்றெடுத்துச்சொன்னார் மாணிக்கவாசகரென்றவாறு ........ .... (௨௫)

இத்திறங்கூறியாங்கேபுலம்பிநின்றிரங்குமெல்லை ................. ✻
நித்தனன்றுரைத்தநீர்மைநெஞ்சினுணினைந்துபின்னை .......... ✻
அத்தலத்திறைஞ்சியெங்கோனருட்பெருவிடைபெற்றேகி ..... ✻
யுத்தரகோசமங்கையூரினிற்சென்றுபுக்கார் ........................ ✻

எ - று. இந்தப்பிரகாரஞ்சொல்லி அங்கே புலம்பிநின்று இரங்குஞ்சமயத்தில் கடவுளன்றருளிச்செய்ததை மனதிலே நினைந்து பின்பு அந்தஸ்தலத்திலே வணங்கிக் கடவுளுடைய செலவு பெற்றுக்கொண்டுபோய்த் திருவுத்தரகோச மங்கையென்னும் ஸ்தலத்துக்கெழுந்தருளினார். மாணிக்கவாசகரென்றவாறு (௨௬)

சடையவர்கோயிலெய்தித்தம்மைவந்தடிமைகொண்ட ........ ✻
வடிவதுகாணாமயங்கிவெய்துயிர்த்துவீழ்ந்து ........... ....✻
விடுதிகொலென்னையென்றுநீத்தல்விண்ணப்பமென்னுந் ...... ✻
தொடைகெழுபாடலோதக்காட்டினர்தொல்லைமேனி ........... ✻

எ - று. திருவுத்தரகோசமங்கையிலே சடாபாரத்தையுடைய

பரம்சிவ னெழுந்தருளியிருக்கின்ற கோயிலுக்குட்போய்த் தம்
மைவந் தடிமைகொண்ட திருவுருவைக் காணுதவராய் மயக்கம
டைந்து பெருமூச்சுவிட்டுக் கீழேவிழுந்து என்னை விட்டுவிடுகி
ன்றாயோவென்று நீத்தல்விண்ணப்பமென்னும் பாடல்சொல்ல
ப்பழையதிருவுருவைக் காண்பித்தாரென்றவாறு............(உஎ)

அன்னலையமுனைதயங்கேகண்டுகொண்டிறைஞ்சிச்சின்று. ........*
ஏந்தகரிருந்துதங்கோனருண்மொழிப்படியேசென்று.. .......*
தன்னிகரில்லாத்தெய்வத்தலம்பலவணங்கிநீங்கிச் . ...............*
சென்னிநன்னாட்டிலெய்தித்திருவிடைமருதூர்சேர்ந்தார்.. ... *

எ-று. கரும்பையும் அமிர்தத்தையுமொத்த கடவுளை அங்கே
கண்டுகொண்டு வணங்கிச் சிலநாள் அந்தஸ்தலத்திலிருந்து தம
துகடவுள் சொற்படியேபோய்த் தனக்குநிகரற்ற அனேகந்தெ
ய்வஸ்தலங்களை வணங்கி நீங்கிச் சோழநாட்டுக்குப்போய்த் திரு
விடைமருதூரிற்சேர்ந்தார் - மாணிக்கவாசகரென்றவாறு (உஅ)

அப்பதிதொழுதபின்னரன்புடனூரொய்திச்........ .. .... ... *
செப்பருமலர்த்தாள்போற்றித்திகழ்திருப்புலம்பலோதி .... . *
யெய்ப்பறவிறைஞ்சியண்ணலியம்பியபதிகளெல்லாந் ........ *
தப்பறவணங்கிநீங்கித்தடமதிற்புகலிசேர்ந்தார்..... .. .. ....*

எ-று. அந்தஸ்தலத்தை வணங்கினபின்பு அன்புடனே திரு
வாரூருக்குப்போய்ச் சொல்லுதற்கரிய தியாகராயருடைய திரு
வடித்தாமரைகளைவணங்கிப் பிரகாசிக்கின்ற திருப்புலம்பலென்
னும் பாடல்களைச்சொல்லி தமது இளைப்புநீங்க வணங்கிப் பரம
சிவனால் அனுக்கிரகம்பண்ணபட்ட ஸ்தலங்களெல்லாந் தப்பா
மல் வணங்கி நீங்கிவிசாலம்பொருந்திய மதில்சூழ்ந்த சீகாழியிற்
சேர்ந்தார் மாணிக்கவாசகரென்றவாறு.............. ..... .. (உகூ)

குன்றெனவயங்குகோயிற்கோபுரவாயினீங்கிச் ... . ............ . *
சென்றுயர்கயிலையானசெய்திகண்டிரங்குமெல்லை............. . *
மன்றிடைநடித்தபாதமலரடிபிடித்துக்கொண்டு . . . . ........ *
பின்றிகழ்சடையோன்முன்னர்ப்பிடித்தபதத்தருளிச்செய்தார்.*

எ-று மலையென்று சொல்லும்படிப் பிரகாசிக்கின்ற ஆலயத்
தினுடைய திருக்கோபுரவாசலைக்கடந்து நீங்கிப்போய் அதுகயி
லாசமாகிய செய்தியைக்கண்டு வணங்கும்பொழுது சிற்சபையி
லே நிருத்தஞ்செய்த திருவடித்தாமரையைப் பிடித்துக்கொண்
டு பின்புறத்திற்பிரகாசிக்கின்ற சடாபாரத்தையுடைய கடவுளின்
முன்னே பிடித்தபதத்தென்பதை அருளிச்செய்தார் மாணிக்கவா
சகரென்றவாறு...... ...... ...... .. ........... ....... . ....... (௩௰)

தொல்வினைப்பகைமையுள்ளாரியாவருந்தொழுதாலின்று.......*
வெல்வாப்பகையையென்றுவிருப்புடன்சிலநாள்வைகி... .......*
மல்குமத்தலத்தைநீங்கிவன்கழுக்குன்றின்பாற்......... ........*
செல்வதற்கிசைந்துதில்லைத்திசைகுறித்திறைஞ்சியேகி .... ......*

ஏ-று. பழவினைப் பகையுள்ளவர்கள் வணங்கினால் யாவரும் அதனை வெல்வார்களென்று அந்தஸ்தலத்திலே விருப்புடனே சிலநாள் வாசஞ்செய்து அந்தஸ்தலத்தைவிட்டு வலத்தையுடைய திருக்கழுக்குன்றத்தில் அன்பாய்ச்செல்வதற்குச் சம்மதித்துத் தில்லைநகரைத் திசைகுறித்துவணங்கிப்போயென்றவாறு. (௱௧)

[ வேறு. ]

* உத்தரநெடுந்திசையிலேகியொளிகுன்று ............*
முத்தநதிசூழ்முதுகுன்றினைவணங்கா. .. .. ............*
வத்தலமகன்றுயரருட்டுறையினெய்தியே ........ ......*
மெய்த்தவர்களெண்ணியுறைவெண்ணெயிலடைந்தார்

ஏ-று. நெடியவடக்குத்திசையிலே வந்து பிரகாசங்குறையாத மணிமுத்தாறுசூழ்ந்த விருத்தாசலத்தைவணங்கிப் பின்பு உயர்ந்த திருவருட்டுறையென்று பெரியோர்கள் நினைத்துவசிக்கின்ற திருவெண்ணெய்நல்லூரிற்சேர்ந்தார் மாணிக்கவாசகரென்றவாறு. ..... ........ .... ...... ........ ..... ..... ......... (௱௨)

அந்நகர்வணங்கிப்பினன்புடனகன்றே ........... .*
நன்னர்வழிசென்றுநடுநாடுமுயர்காடுங் ..... ......*
கொன்னியமடங்கலுறைகுன்றமுமிகந்தே. ........*
மன்னுமருணாபுரிமருங்கணையவந்தார் .... ..... .. .*

ஏ-று. அந்தஸ்தலத்தை வணங்கினபின்பு அன்புடனே நீங்கி நல்லவழியிலே போய் நடுநாட்டையும் உயர்ந்தகாட்டையும் அச்சந்தருகின்ற யானையுஞ்சிங்கமும் வசிக்கின்ற மலைகளையும் கடந்து நிலைபெற்ற திருவண்ணாமலைக்குச்சமீபத்தில்வந்தார்-மாணிக்கவாசகரென்றவாறு ..... ..... .... .. . .... ............ ...... (௱௩)

மாடமொடுகோபுரமுமன்னுமணிமுத்தஞ் .......... *
சூடுமதிலும்பெரியதோரணமுகப்பு .... ..............*
நீடுகமுகாடவிநெருங்கியுளதண்கா.. ..... ...... ... ..*
ஆடுயர்தல்கண்டுவகைகொண்டுதொழுதுய்ந்தார்..,*

ஏ-று. உப்பரிகைகளும், கோபுரங்களும், நிலைபெற்றரத்தினங்களும் முத்துகளும் பதித்தமதில்களும், பெரியதோரணங்களையுடைய முகப்பும், நீடியகமுகங்காடுகளும், நெருங்கியுள்ளகுளிர்ந்தசோலைகளினுடைய கிளைகள் உயர்ந்திருத்தல்கண்டு மகிழ்ச்சிகொண்டுவணங்கிப்பிழைத்தார்-மாணிக்கவாசகரென்றவாறு (௱௪)

அன்றிருவர்தேடவழலானதொருவெற்பாய் ........ *
நின்றவடிவோமனநிறைந்தபெருவாழ்வோ ......... *
வென்றுமலையண்ணலையிறைஞ்சியருள்கொண்டே *
சென்றருணையெ[illegible]யசெழும்பதிபுகுந்தார் ........... *

எ-து. அன்றுபிர்ம்மா விஷ்ணுக்கள் தேட அக்கினிமலையாய் நின்றவடிவோ அல்லது மனத்திலே நிறைந்தபெரிய வாழ்வோ வென்று அண்ணாமலையை வணங்கிக்கிருபைகொண்டு செழுமையுள்ள திருவருணைமாநகரத்திற் புகுந்தார்- மாணிக்கவாசகரென்றவாறு................(௬௫)

[ வேறு. ]

சோலையும்மதிலும்பல்பூந்தோரணமறுகுந்தெய்வ ..... ........ *
சாலைகள்பலவுநீங்கிச்சந்நிதிமறுகிற்சென்று ............... *
மாலையும்பாம்புந்திங்கண்மத்தமுமுடியில்வைத்தோ ..... ...... *
னாலயமிறைஞ்சிக்கண்டார்தம்மையன்றாண்டமேனி. .......... *

எ-து. சோலைகளும், மதிலும், பசிய பூந்தோரணங்களையுடைய வீதியும், அனேக தெய்வத்தன்மையுள்ள சாலைகளும் நீங்கிச்சந்நிதிவீதியிற்போய் - மலர்மாலையும், மூன்றாம்பிறையும், சர்ப்பமும் ஊமத்தைமலரும் திருமுடியின்மேல் வைத்த அண்ணாமலையாருடைய ஆலயத்தைவணங்கித் தம்மை அன்றுவந்தாண்ட திருவுருவைக்கண்டார் - மாணிக்கவாசகரென்றவாறு.(௬௬)

மாலுடன்பிரமன்றேவர்வந்துனக்கடிமையென்றென் ...........*
றோலிடும்பொழுதிலாலமுண்டருள்கண்டபோற்றி.... .......... *
மேலிடும்பவநோய்தீரவிண்ணவர்மண்ணோர்பச்சைப் ....... *
பாலுடன்கலந்துட்கொள்ளும்பனிமலைமருந்தேபோற்றி... *

எ-து. மகாவிஷ்ணுவும் பிரமதேவனுந் தேவர்களும் வந்து உனக்கடைக்கலமென்று முறையிடும்போதில் ஆலகாலமுண்டருண்ட கண்டத்தையுடையவனே போற்றி- அதிகரிக்கின்ற பிறவி நோய்நீங்கத் தேவரும் மனிதரும்பசும்பாலுடன் அல்லது உமாதேவி பாகத்துடனே கலந்து உட்கொள்ளுகின்ற குளிர்ச்சியுள்ள மலைமருந்தே போற்றி யென்றவாறு........................(௬௭)

நெடியவன்கேழலாகிநீணிலமகழ்ந்துங்காணா.............. ... *
வடிகளொன்றலைமேல்வைத்தவருட்பெருங்கடலேபோற்றி.. *
படியிடம்புரக்குமுண்ணாமுலையெனும்பச்சைமேனிக் .......... *
கொடியிடங்கொண்டசெம்பொற்குன்றமேபோற்றிபோற்றி *

எ-து. மகாவிஷ்ணு வராகமாய் நீண்ட பூமியைப்பிளந்துங் காணாததிருவடிகளை என்றலைமேல்வைத்த பெரிய கிருபாசமுத்தி

நமே போற்றி - புவலகந்தனை ரக்ஷிக்கின்ற உண்ணாமுலையென்னும் பச்சைமேனியையுடைய கொடியை இடதுபாகத்திற்கொண்ட சிவந்தபொன்மலையே போற்றி போற்றி யென்றவாறு... (௯௮)

வென்றிடுங்கன்னிமேதிசென்னிவிக்கிரமன்றன்னைக்.... ...... *
கொன்றதன்பாவந்தீரக்குறித்திடவருள்வாய்போற்றி..........*
யன்றுவந்தெனையாளுமண்ணாமலையாய்போற்றி.......... *
யென்றதம்பரிவாலேத்தியிறைஞ்சியங்குறையுநாளில்..... ..... *

எ-று. வெல்லுதல்செய்த தூர்க்கையானவள் மகிடாசுரனைக் கொன்றபாவந்தீர நினைத்தாட்போற்ற அருள்செய்பவனேபோற்றி - அன்றெழுந்தருளிவந்து என்னை அடிமைகொண்ட அண்ணாமலையானே போற்றியென்று அன்பினாலே ஏத்தி வணங்கி அங்கேவசிக்கின்றநாளிலென்றவாறு ........................ ....(௯௯)

மாதர்கொண்மாதவொல்லாமார்கழித்திங்கடன்னில் .... . ........ *
யாதிரைமுன்னீரைந்தேயாகியதினங்களெல்லா.... ............. *
மேதருமனைகடோறுமனைந்தருள்விடிவதான ..................*
போதிவர்தம்மிற்கூடிப்புனற்றடமாடல்செய்வார் ......... .. ...*

எ-று அழகினைக்கொண்ட எழுவகைப்பருவமங்கையர்களெல்லாம் மார்கழிமாதத்தில் திருவாதிரைக்குமுன்னே பத்துதினங்களிலெல்லாம் மேன்மைபொருந்திய வீடுகள்தோறும்போய் அழைத்துக்கொண்டு விடியற்காலத்தில் இவர்களெல்லாம் கூடித் தீர்த்தத்திலேபோய் ஸ்நானஞ்செய்வார்களென்றவாறு.. (௱)

அனையரியல்புகண்டாராங்கவர்புகன்றதாக ... .... .... ..... . *
மனையிலதிருவெம்பாவைவாசகம்பேசிப்பின்னர்க் ........ ...... *
கன்னியர்பாடியாடுங்கவின்கொளம்மனைகண்டன்னார் .... ..... *
பன்னியபாடலாகவம்மனைபாடல்செய்தார்......... ..... ....... *

எ-று. அவர்களுடைய இயற்கையைக்கண்டு மாணிக்கவாசகர் மங்கையர்கள் சொன்னதாக நிலைபெற்ற திருவெம்பாவைசொன்னபின்பு மங்கையர்கள் பாடியாடுகின்ற அழகினைக் கொண்ட அம்மனையைக் கண்ட மாணிக்கவாசகர் அவர்கள் சொன்ன பாடலாகத் திருவம்மானை பாடினரென்றவாறு ......... ... ......(௱௧)

விரவுமன்புடையாரந்தமேதகுதலத்தைநீங்கிப் ..................*
பரிவுடல்கச்சியேகாம்பரந்தனிற்பரனையேத்தித் .... .. .......*
தெரிவருங்காமக்கோட்டிசிறடிவணங்கித்தேவர் ..... ..............*
டாதினைந்திறைஞ்சுந்தெய்வவண்கழுக்குன்றிற்சென்றார்.... ...*

எ-று. கலந்த அன்புடையவராகிய மாணிக்கவாசகர், மேன்மைபொருந்திய அந்தத்திருவண்ணாமலையை நீங்கி அன்புடனே

காஞ்சிமாநகரில்வந்து ஏகாம்பரத்திலே கம்பனைவணங்கித் தெரிதற்கரிய திருக்காமக்கோட்டத்தில் காமக்ஷியினுடையசிறிய இரண்டுதிருவடிகளையும்வணங்கித் தேவர்கள் வரங்களைக்குறித்து வணங்குகின்ற தெய்விகமுள்ள வளத்தையுடையதிருக்கழுக்குன்றத்துக்கெழுந்தருளினர். மாணிக்கவாசகரென்றவாறு.....(சஉ)

கோட்டிதழ்கமழுங்கொன்றைச்சென்னியன்றலவுமன்பர் ... *
சூட்டியமலர்த்தாள்போற்றித்துணைவநின்செய்யமேனி......*
காட்டினைகலங்காவண்ணமிக்கழுக்குன்றிலென்று ......[தார்
பாட்டினைப்பொழிந்துசின்னாள் பயின்றுபின் பணிந்துபோற்

எ - து. கொம்புகளிலே யிதழ்வாசிக்கின்ற கொன்றைமாலிகைதரித்த சிரசையுடைய கடவுளுக்கு அன்பராகிய மாணிக்கவாசகர்தன்முடியிலேசூட்டிய தாமரைமலர்போன்றபாதத்தை வணங்கித் துணையானவனே யான் கலங்காதபடி சிவந்தமேனியைக்காட்டினாய்கழுக்குன்றிலேயென்று பாட்டினைச்சொல்லிச் சிலநாள்வசித்துப் பின்பு பணிந்துபோற்றி யென்றவாறு.(சங)

அத்தலமுதலாநாப்பணடைந்தவூரநதியுங்கானு............ ...... *
மைத்தடங்கிரியுங்காவும்வாவிகள்பலவுநீங்கிப்.......... .......... *
பைத்தவெம்பாம்போடாடிநரியெலாமபரிகளாக்குஞ்..... ..... *
சித்தர்தென்றில்லைமூன்றுகாவதமென்னச்சென்றார்... ... .. *

எ-து. அந்தஸ்தலமுதல் மத்தியப்பிரதேசத்திலே யிருந்துள்ள ஸ்தலங்களும், காடுகளும், கரியவிசாலமாகிய மலைகளும், சோலைகளும், தடாகங்களும், நதிகளும், கடந் சுபடத்தையுடையவெய்யசர்ப்பத்தோடு விளையாடி நரிகளையெல்லாம் குதிரையாக்கிய சித்தராகிய கடவுளது அழகியதில்லைமாநகர் மூன்றுகாதவழியென்று சொல்ல எழுந்தருளினர். மாணிக்கவாசகரென்றவாறு.

[வேறு]

தாமூரன்மடப்பாவையர்தோளாசையிலாளா.... .........*
மாமூகருமிட்டுண்டுயிர்வாழாதவர்தாமுந் ....................*
தீமூள்கரவான்மேலருள்செய்யாதவர்பலரும்.... ....... . *
போமூர்வழிபோகாதவர்புலியூர்வழிபோனார்............ *

எ-து பரிசுத்தமாகிய நந்தவரிசைகளையுடைய மங்கையர்கள் தோளாசையி லாட்படுகின்ற ஆமைகளும், இட்டுண்டு உயிர்வாழாதவர்களும், அக்கினிமூளுகின்ற திருக்கரத்தையுடையகடவுள்மேல் அன்புசெய்யாதவர்களும் போகப்பட்ட நரகவழியிலே போகாத மாணிக்கவாசகர் புலியூராகிய சிதம்பரத்தின் வழியாகப் போயினரென்றவாறு.............................. .............(சரு)

செல்லுஞ்சுரமிருபாலொளிதிகழ்கொன்றைகண்மலரா...*
வெல்லொண்ணியவிமையோருலகெனநின்றனவெங்கும்...*
புல்லுஞ்சிவநாமத்தமிழ்போல்வண்டிசைபாடச்......*
சொல்லும்பொருள்வல்லார்தமகைபோன்றனதோன்றி *

எ - து. இப்படிசெல்லுகின்ற மார்க்கத்தி னிரண்டுபக்கத்தி லும் ஒளிவிளங்குகின்ற கொன்றைகள் மலர்ந்து எங்கும் பிரகாச ம்பொருந்திய தேவர்களுடைய பொன்னுலகம்போல் நின்றன. சிவநாமத்தைத் தழுவுகின்ற தமிழ்போல் வண்டுகளிசையைப் பாட அந்தப்பொருள்சொல்லவல்ல வித்துவான்கள் அபிநயங் காட்டுங்கைகள்போல் மலர்ந்திருந்தன காந்தள்களென்றவாறு.

தெள்ளுஞ்சிவஞானஞ்சிறிதில்லார்தவவேடங் .... ........*
கொள்ளுஞ்செயலெனவொண்மலர்குலவுங்கவிரெல்லாம்*
பள்ளம்படர்புனல்போதபுலன்வழியேபயில்சிறியோர்....*
ருள்ளந்தனையொக்குந்திகழ்வைக்கொண்டொளிர்காயா.*

எ - து தெளிந்திருகின்ற சிவஞானஞ் சிறிதுமில்லாதவர்கள் தவவே டங் கொள்ளுதல்போல முருக்குகளெல்லாம் வாசனையில் லாத ஒளியையுடையமலர்களை மலர்ந்திருந்தன. பள்ளத்திற்செ ல்லுகின்ற நீரைப்போல் ஐம்புலன்வழியே செல்லுகின்ற சிறியோ ர்களுடைய மனம்போலக் கரிய மலர்களைப்பூத்திருந்தன காயா மரங்களெல்லாமென்றவாறு ............... ...... ...(௭)

பாயுங்குலமந்திக்திரள்பயிலுந்தொறுமசையா ........... *
வீயின்குழுவெழுதேனிரிலுலசேர்மலர்நாக........... .....*
மாயந்திகழ்தாராகணமகல்வான்மிளிர்மதிய ............... *
மேயும்படிமிளிர்பொங்கரினிடைநின்றனவெங்கும்.......*

எ - து. புன்னைமரங்களிலே குரங்கினங்கள்குதித்துச் சஞ்சரிக்குந் தோறும் அசைந்து ஈயின்கூட்டங்களெழுகின்ற தேன்கூடும்பூ மலர்களும், அகன்ற ஆகாயத்தில் விளங்குகின்ற சந்திரனும் தார கைகளும்போல எங்குமிருந்தன சோலையினிடையென்றவாறு.

பகங்கிளர்கமுகின்றிரள்பலசாமரைவீசக் ......... .........*
கொக்கின்றளிர்கோதும்பலகுயில்காளைமூதத்............ *
தொக்கன்பொடுவின்னோர்சொரியும்பலபொற்பூ .....*
வொக்கும்படிமலர்சிந்தினவொண்சண்பகச்சோலை.......*

எ - து. மாணிக்கவாசகருக்குப் பக்கத்திற் பிரகாசிக்கின்ற கமுக மரக்கூட்டங்கள் அநேகஞ் சாமரங்கள்வீச, மாந்தளிரைக்கோ துகின்ற அநேகங்குயில்கள் சின்னமூத, மிகுந்த அன்புடனே தேவர்கள்சொரிகின்ற பல்பொன்மலரை ஒக்கும்படி ஒளிபொரு

ந்திய மலர்களைச்சிந்தின-சண்பகச்சோலைகளென்றவாறு..(௪௯)

நீங்காவளமிவ்வாறுள நீள்சூதநாரத்த.... ..................*
தேங்காரளிமுரல்பாதிரிதெங்கின்றிரள்வகுளங்..............*
கோங்காசினிகொத்தார்செழுமந்தாரநெருங்கும்..... ....*
பூங்காவையகன்றூர்புலியூர்நன்னகர்கண்டார் .... ..........*

எ-து. நீங்காதவளங்களையுடைய நீண்டமாவும் நாரத்தையும் நிறைந்த வண்டுகள் சத்திக்கின்ற பாதிரியும் தெங்கும் மகிழும் கோங்கும் பலாவும் கொத்தார்ந்த செழுமையுள்ள மந்தாரமும் ஆகிய மரங்கள் நெருங்கிய பூஞ்சோலையைக்கடந்து சிதம்பரத்தைக்கண்டார். மாணிக்கவாசகரென்றவாறு .....................(௫0)

சேணொன்றியமதிலும்பணிதிகழ்கோபுரநிரையுஞ்........*
சோணந்தருகும்பங்கிளர் துணைமாளிகைபலவுங்..... ......*
காணுந்தொறுமெழில்செய்வதுகண்டஞ்சலிகொண்டே*
பூணுந்திருவருளன்பர்புகழ்ந்தாருண்மகிழ்ந்தார் .........*

எ-து. உயர்ச்சிபொருந்திய மதிலும் சிற்பத்தொழிலின்மிகுந்தகோபுரவரிசைகளும், சிவந்தகும்பங்கள்பிரகாசிக்கின்ற அனேக உப்பரிகைகளும், பார்க்குந்தோறும் அழகினைச்செய்வதுகண்டு அஞ்சலியஸ்தராய்ப் புகழ்ச்சிசெய்து மகிழ்ச்சிகொண்டார். திருவருள்பூண்ட அன்பராகிய மாணிக்கவாசகரென்றவாறு.. (௫௧)

வேதந்தருமொலியுந்தொழும்விண்ணோர்தமதொலியுங்*
கீதந்தருமொலியுங்கிளர்முழவங்களினொலியும்... .... .....*
போதந்தருசிவஞானிகள்புகலாகமவொலியு ......... ......*
மோதுந்தமிழொலியுங்கடலொலிசெய்தனபுலியூர் .....*

எ-து. பின்னும் அந்தச்சிதம்பரத்திலே வேதமோதுகின்ற சத்தமும், வணங்குந் தேவர்கள்சத்தமும், பாடுகின்றகீதங்களின் சத்தமும், பிரகாசிக்கின்ற பேரிகைகளின்சத்தமும், அறிவினைத்தருகின்ற சிவஞானிகள்சொல்லுகின்ற ஆகமங்களின்சத்தமும், ஓதுகின்ற தமிழின்சத்தமும், கடலபோலச்சத்தித்தனவென்றவாறு.

நிரையொன்றியமணிமாளிகைநெடுவீதிகளகலா ... .......*
வரையொன்றியவுயர்கோபுரமணிவாயில்புகுந்தே ....... .*
யுரையொன்றியசிவஞானமுரைக்குஞ்சிவநல்னூற் .........*
கரைகண்டவர்மணிமன்றெதிர்கண்டாரருள்கொண்டார்..*

எ-து வரிசைபொருந்திய அழகிய உப்பரிகைகளையுடைய நெடிய வீதிகளைக்கடந்து மலைபோற் பொருந்திய உயர்ந்த கோபுரவாசல்வழியாகப் புகுந்து பொருந்திய சொல்லையுடைய சிவஞானத்தை விளக்குகின்ற சிவாகமங்களைக்கரைகண்ட மாணிக்க

வாசகர் சிற்சபையை எதிரேகண்டு அருள்பெற்றுசொன்னவாறு

பொன்னார்பொதுநின்றாடியபுனிதன்றனைமுடிமே .... ...*
லன்னாரடிவைக்கும்பாருகும்படிகண்டார் .... .......... .*
மன்னுவுயிரன்னாய்மணிமன்றுசரணென்றே ............ .*
சொன்னார்பலகாலன்பொடுதொழுதார்மிகவழுதார் .......*

எ-து. பொன்னம்பலத்திலே நின்று திருக்கூத்தாடிய கடவுளை த் தம்முடைய சிரசிலே அந்தநாளிலே திருவடிகளைச்சூட்டிய கு ருவுருவமாகக் கண்டு இந்தச்சகத்துக்கெல்லாம் அரசனே உயி ருககொப்பானவனே சபாநாயகனே உனக்கு அடைக்கலமென் று சொல்லிப் பலதரம் அன்புடனே தொழுதுமிகவும் அழுதார். மாணிக்கவாசகசொன்னவாறு .............................. ......(௫௪)

விண்டேயிருகண்ணீர்விழவீழ்ந்தின்னடிமுடிமேற் ......*
கொண்டேயெழுந்தன்பொடுகுறையாவருணிறையா. *
வண்டோர்குழலுமைபங்கனைவண்டில்லையுளின்னே .......*
கண்டேனெனநற்பாடல்கருத்தாரவுரைத்தார் .... .........*

எ-து. இரண்டுகண்களும் ஆனந்தபாஷ்பம்பொழிய நமஸ்கார ம்பண்ணித் திருவடிகளை முடியிற்சூட்டிக்கொண்டு பின்பு எழுந் து அன்புடனே குறைவில்லாத திருவருள்நிறைந்து வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவிபாகனாகியகடவுளை வ ளத்தையுடைய தில்லைமாநகரிலே இப்பொழுதே கண்டேனென் று நல்லபாடல்களாகிய கண்டபத்து மனங்கொள்ள உரைத்தா ர். மாணிக்கவாசகசொன்னவாறு .... ................ . ........(௫௫)

குன்றாவருண்மூலத்திகழ்குறியாகியசுடரு ... .... ..........*
மன்றாடியவெளியூடுமகிழ்ந்தாடியவொளியு ................ *
மொன்றாகியவநுபூதியினுற்றார்செயலற்றார் .. ..............*
நின்றாரசைவில்லாவொருநிலையோவியமானார் ............ ..*

எ-து. குறைவில்லாத கிருபையையுடைய திருமூலஸ்தானத்தி லிருக்கும் சிவலிங்கமாகியசோதியும், பொற்சபையாகிய சிதாகா சத்திலே மகிழ்ந்து நிருத்தஞ்செய்கின்ற சோதியும், ஒன்றென் றுசொல்லும் அநுபூதியிலிருந்து ஒருசெயலுமில்லாதவராய் அ சைவற்ற ஒரு சித்திரம்போலானார். மாணிக்கவாசகசொன்னவாறு.

மைகாலகுழலுமைபங்கினைவழிபாடுமறந்தே ........ ....*
கைகாலசைவிலதாயினகண்ணுஞ்சிறிதிமையாச் ... . .......*
செய்காரியமென்னோவிதுதெருளாமருளென்றோ .........*
மெய்காவலர்மணிமன்றைவிட்டேபோமினியென்றார் .....*

எ-து. அப்போது கருமையை விரிக்கின்ற கூந்தலையுடைய உ